# சிலம்பின் காலம்



முனைவர் செ. கோவிந்தன்

# சிலம்பின் காலம்...?

டாக்டர் செல்லன் கோவிந்தன்
தமிழ்ப்பேராசிரியர் (ஓய்வு)
பாலக்காடு (கேரளம்)

திருமுடி பதிப்பகம்
40, கிழக்கு சன்னதி தெரு,
வில்லியனூர், புதுவை - 605 110.

# காணிக்கை



17. 11. 1926 - 15. 8. 2002.

என் ஆசிரியப் பெருந்தகை
காலஞ்சென்ற பேராசிரியர்
**டாக்டர். அ. சுப்பிரமணியப் பிள்ளையவர்களுக்கு**
இந்நூலைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆசிரியர்.

# உள்ளுறை

# முகவுரை

**டாக்டர். பீ. நசீம்தீன்** எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி.,

தமிழ்ப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கேரளப்பல்கலைக்கழகம்

காரியவட்டம், திருவனந்தபுரம்
கேரளம். 695 581.
24 . 8. 2004

தமிழிலக்கிய ஆய்வில் 'மாற்று மரபு', 'மறுபார்வை' ஆகிய முறைகளில் இலக்கிய முயற்சிகள் அருகியே காணப்படுகின்றன. ''முன்னோரும் அறிஞரும் கூறிய கருத்துக்களை 'மீள்பார்வை' செய்வது குற்றம்'' என்பது போன்ற மாயை ஆய்வாளரிடையே புரையோடியிருக்கிறது. ச. சோ. பாரதி, மயிலை. சீனி. வேங்கடசாமி, எஸ். வையாபுரிப்பிள்ளை, க. கைலாசபதி, நா. வானமாமலை, ரகுநாதன் முதலான மீள்பார்வையாளர்களின் ஆய்வுகள் இத்துறையில் தடம் பதித்தாலும் குறிப்பிட தக்க வரவேற்பைப் பெறாதது தமிழிலக்கிய ஆய்வுத்துறைக்கேற்பட்ட சாபக்கேடாகும்.

சிலப்பதிகாரம் தமிழில் முதற்காப்பியம் என்ற ஒரு பார்வைமட்டுமே பதிந்து போயிருந்த காலகட்டத்தில் மீள்பார்வையாகப், பேராசிரியர் செல்லன் கோவிந்தன் அவர்களின் 'சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்' (1975) எனும் இந்நூல் வெளிவந்து புரட்சி செய்தது.

தமிழில் புதிய கருத்துக்கள் வெளியிடப்பட்டுச் சிலகாலம் கடந்தபின்னரே கவனங்கொள்ளப்படும் எனும் விதிக்கு இந்நூலும் தள்ளப்பட்டது. எனினும் இந்நூலில் பேராசிரியர் கோவிந்தனார் முன்வைத்த ஆய்வுப் போக்கு தருக்க முறையில் அமைந்திருந்ததனால் இவர் கருத்தை மறுப்போர் விதி முறைப்படி தம் கருத்துக்களை முன் வைத்தாரில்லை. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை -யவர்களின் தமிழிலக்கிய காலகட்ட ஆராய்ச்சியைத் தமிழாய்வுலகம் எவ்வாறு ஏற்றது? அந்நிலைதான் இந்நூலுக்கும் ஏற்பட்டது.

ஆனால் பேராசிரியர் கோவிந்தனாரின் கருதுகோள் வலிமை பெற்றுச் சில ஆய்வாளர்களின் மனதில் தாக்கத்தை ஏற்படுத்தியது பேருண்மையே. இதுதான் ஓர் ஆய்வாளனின் வெற்றி என்பது என்கருத்து. ஒரு கருதுகோளை (Hypothesis) முன்வைத்து இந்நூலைப் படைத்துள்ளார் இவர். அதனை நிறுவுதற்கான சான்றதாரங்களைப் படிப்படியாக எடுத்துக் காட்டுகின்றார். தனது கருது கோளுக்கு மாறான கருத்துக்கள் இடைப்படும்போது அவற்றைத் தருக்கமுறையில் எதிர்கொள்கின்றார்.

இவரது கருதுகோளில், 'சேரமன்னர்களின் பண்டைத் தலைநகராயிருந்த கொடுங்கல்லூர் (கொடுங்கோளூர்) சார்ந்தே சிலப்பதிகாரம் எழுதப்பட்டிருக்க வேண்டும்; சேர இளவலான குஞ்ஞிக்குட்டனே இளங்கோவடிகளாக்கப் பட்டிருக்கிறார். அவரது காலம் பதினோராம் நூற்றாண்டு' என்பது குறிப்பிடத்தக்கதாகும். கி.பி. பத்தாம் நூற்றாண்டில், தென்னகத்தின் பெரும்பகுதி இராஜராஜ சோழனின் ஆட்சியின் கீழ் வந்திருக்கிறது. சோழர்களின் இவ் ஆளுமையை ஏற்காத சேர பரம்பரையிலான ஒரு புலவர் சோழர் புகழைப் பாடியிருப்பது எங்ஙனம்? (புகார்க் காண்டம்).

எனவே பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை கருதுவது போலச் சிலம்பின் காலம் கி.பி. 8ஆம் நூற்றாண்டுதானா? சோழ சாம்ராஜ்யத்தின் தொடக்கத்திற்குக் காரணமான விசயால சோழனுக்கு முன்னரே பல்லவரின் கீழ் சோழச் சிற்றரசர்கள் ஆண்டார்களல்லவா? - எனும் வினாக்கள் ஆய்வாளரின் மனதில் எழாமலில்லை.

பெரும்பண்டைக்கல் (Megalithic, காலகட்ட வழிபாடு சார்ந்ததே கொடுக்கல்லூர் குறும்ப பகவதி (கண்ணகி) கோயில் வழிபாடு என்பதை இந்துசூடனின் 'The Secret Chamber' (1969) எனும் நூலும் நிறுவமுனைவது இங்குக் கருதத்தக்கது.

சிலப்பதிகாரம் குறித்த மற்றொரு மீள்பார்வையாக நமக்குக் கிடைப்பது ரகுநாதனின் 'இளங்கோவடிகள் யார்' (1984) எனும் நூலாகும். வைசிய புராண தொன்மத்தின் அடிப்படையில் சில வினாக்களை எழுப்பி வர்க்கப் போராட்டத்தின் எதிரொலியே சிலப்பதிகாரக்கதை என நிறுவமுனைகிறார் ரகுநாதன். இவரது கருதுகோளுக்கும் சான்றுகள் காணப்படுகின்றன. ஒபயசேகரவின் நூல் (The cult of the Goddess Pathini - 1987) வெளியானபோது முன் சொல்லப்பட்ட கருதுகோள்களில் உண்மையிருக்கலாம் என்ற எண்ணம் வலுப்படத் தொடங்கியது.

சிலகேரளப் பழங்குடிகளிடமும் கண்ணகி கதை வழங்கிவருவதனை ஆராய்ந்தபோது ஏதோ ஒரு காலத்தில் வாய்மொழியாக வழங்கிவந்த ஒரு வாய்மொழிக்கதையை அடியொற்றிச் சிலப்பதிகாரம் இயற்றப்பட்டிருக்க வேண்டும். ஆனால் தற்காலத்தில் வழங்கிவரும் கண்ணகி பற்றிய நாட்டுப்புறக் கதை வடிவங்கள் சிலப்பதிகாரத்தின் பின் தோன்றியவையே என நிறுவ முனைகிறது 'கோவிலன் சரித்திரம்' (பீ. டாக்டர் நசீம்தீன் 1992) எனும் நூல்.

சிலப்பதிகாரம் எனும் காப்பிய காலத்தை வரையறுக்க முனையும் ஆய்வுகளை சிலப்பதிகாரக் கதையின் காலத்தை வரையறுப்பன எனத் தவறாகப் புரிந்து கொள்வதால் பல இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. இவ்வகையில் பேராசிரியர் கோவிந்தனாரின் ஆய்வு நேர் பார்வையில் செல்கிறது.

D. D. கோசாம்பி, ரொமீலாதாப்பர், மஜும்தார் போன்ற வரலாற்று மீள்பார்வையாளர்கள் இந்திய வரலாற்று ஆய்வில் 'வரலாற்று மீட்டுருவாக்கத்திற்கு' வழிகாட்டுகின்றனர். தமிழ் இலக்கிய வரலாற்றாய்வில் வரலாற்று மீட்டுருவாக்க முயற்சிகளுக்கு வழிகாட்டுவனவாக, சிலப்பதிகாரம் குறித்த மீள்பார்வை நூல்களைக் கருதலாம். அவற்றில் பேராசிரியர் கோவிந்தனாரின் இந்நூல் ஒருமைல்கல்லாக அமையும் என்பதில் ஐயமில்லை.



# முன்னுரை

(முதற்பதிப்பு)

தன்னைக் கற்பாரது நெஞ்செல்லாம் நிறைந்து நினைவெல்லாம் தித்திக்கும் செந்தமிழ்க் காப்பியமாம் சிலப்பதிகாரம், பைந்தமிழ்ப் பூங்காவில் பூத்ததோர் அரிய மலர். இதனையொத்த வேறு மலர்கள் அக்காவில் ஒரு சிலவேயுள்ளன. அவை, திருக்குறள், சிந்தாமணி, கம்பராமாயணம் எனப்படும். தமிழுக்கே உரித்தான இயலிசை நாடகங்களைக் கொண்டிருத்தல் பற்றியே சிலப்பதிகாரம் 'முத்தமிழ்க் காப்பியம்' எனப்பட்டது. 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' எனப் பைந்தமிழ்ச் சாரதி பாரதியார் பாடியதற்குக் காரணமாக அமைந்தது அதன் இலக்கியச் சுவையேயாகும்.

இத்தகைய சிலப்பதிகார காப்பியம் எழுந்த காலம் பற்றி அறிஞர் பெருமக்கள் பலரும் முரண்பாடான கருத்துக்களைக் கூறியுள்ளனர். இக்காப்பியத்தைக் கி.பி. 1892-ல் பதிப்பித்த டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர்கள், நூலாசிரியர் காலம் பற்றிக் குறிக்க வந்தபோது, "இந்நூலில் கூறப்படுகின்ற 'கயவாகு' என்னும் இலங்கை மன்னன் வாழ்ந்த காலம் இரண்டாம் நூற்றாண்டு என்பதால் இந்நூலும் இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது" என்று கூறிப் போந்தார்.

ஆனால், டாக்டர் ஐயரவர்களின் முடிபில் உள்ள முரண்பாடுகளைப் பற்றி யாரும் ஆராய்ந்து பார்த்ததாகத் தெரியவில்லை. வரலாற்றறிஞர்களின் கூற்றுப்படி 'கயவாகு காலம் கி.பி. 173 - 195' ஆகும். சிலம்பில் காணும் காலக்குறிப்பு (ஆடித்திங்கட் பேரிருட் பக்கத் தழல் சேர் குட்டத் தட்டமிஞான்று வெள்ளி வாரம்) கி. பி. 144ஆம் ஆண்டிற்கே பொருந்தும் என்பர் இ. மு. சுப்பிரமணியப்பிள்ளையவர்கள்.

எனவே, இதன்படி மதுரை எரியுண்ட பிறகு முப்பதுக்கும் மேற்பட்ட ஆண்டுகள் கழித்து கயவாகு மன்னன் வஞ்சி வந்தான் என்றாகி விடுகிறது! மேலும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இவ்வளவு வடசொற்கள் தமிழ் மொழியில் வமங்கியிருந்தனவா?

வரலாற்றடிப்படையில் கரிகாலனும் நெடுஞ்செழியனும் வாழ்ந்த காலத்தில் செங்குட்டுவன் வாழவில்லையே!

மயிலை. சீனி. வேங்கடசாமி போன்றோர் சிலப்பதிகாரக் கதையை உண்மை வரலாறெனக் கொண்டு கோவலனைக் கொல்வித்த பாண்டியனை இனம் கண்டு கொள்ளும் முயற்சியில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனுக்குப் பின் வந்தோனாக்கினர். விளைவு, சிலப்பதிகாரம் மதுரைக் காஞ்சிக்கும் முன் தோன்றியதாயிற்று! (சேரன் செங்குட்டுவன் - பக். 68 - 72).

சிலப்பதிகார காலம்பற்றி மாறுபாடானதொரு கருத்தினை முதலில் வெளியிட்டவர் ராவ்சாகிப் மு. இராகவையங்கார் ஆவர். அவர் கொள்கைப்படி, வடநாட்டில் கி.பி. 326ல் அரசெய்திய குப்த அரசனாகிய சமுத்திர குப்தனால் வெல்லப்பட்ட கேரள தேசத்து மாந்தராஜா என்னும் மாந்தரன் (சேரலிரும்பொறை) கி.பி. நான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன். அவனைப் பாடிய பரணர் செங்குட்டுவனையும் பாடியிருப்பதால், அம்மாந்தரனுக்குச் சிறிது பிற்பட்டவன் (ஐந்தாம் நூற்றாண்டு) இச்செங்குட்டுவன் ஆவான்.

ஆயின் ஐயங்காரவர்களின் காலக்கணிப்புக்கு அடிப்படையான சமுத்திர குப்தனின் அலகாபாத் சாசனத்தில் காணும் 'கைராளிக் மாந்தராஜா' என்ற தொடர், உண்மையில் 'குணால மாந்தராஜா' என்பதாகும் என்று 1898ஆம் ஆண்டிலேயே டாக்டர் கில்ஹெர்ன் என்பவரும், டாக்டர் பிலீட் என்பவரும் நிறுவியுள்ளதனால் (சேரன் செங்குட்டுவன் - மயிலைத. சீனி. வேங்கடசாமி. பக்.56) செங்குட்டுவனின் காலம் நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டு என்ற இராகவையங்காரின் ஆராய்ச்சி முடிவும் சரிந்து விழுகின்றது.

இவரையடுத்து, பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளைவர்கள், சிலப்பதிகாரம் எட்டாம் நூற்றாண்டிற்கும் பின்னர் எழுந்தது என்றனர். பேராசிரியரின் முடிவுக்கு அடிப்படையாக அமைந்தது, சோதிட வல்லுநரான திவான்பகதூர் எல். டி. சாமிக்கண்ணுப்பிள்ளையின் காலக்கணிப்பாகும். அவர் சிலப்பதிகாரத்தில் வரும் மதுரை எரிந்ததாகவுள்ள சோதிடக்குறிப்பு கி.பி. 756ஆம் ஆண்டிற்குப் பொருந்தும் என்றார். இவ்வாண்டினை மனதிற் கொண்டு, சிலப்பதிகாரத்திற் காணப்படும் பிற்கால இலக்கண வழக்குகள், பதினென் கீழ்க்கணக்கு நூற்களின் கருத்துப்பயிற்சி, வடசொற்களின் மிகுதி, செய்யுள் நடையின் அமைதி இவற்றின் அடிப்படையில் சிலம்பின் காலம் எட்டாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது என்றார்.

ஆயின், பேராசிரியரின் முடிபிலும் முரண்கள் உள்ளன. கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தமிழக வரலாற்றில் சோழர்கள் இருந்த இடமே

தெரியாது. எனவே சோழ அரசர்களே இல்லாத காலத்தில் அவர்களையும் பாத்திரங்களாகக்கொண்ட ஒரு காப்பியம் தோன்றுவதென்பது இயற்கைக்கு முரணானது. எனினும், சிலப்பதிகாரம் எட்டாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது என்ற வையாபுரிப்பிள்ளையவர்களின் முடிபு முற்றிலும் சரியேயாகும்.

சிலப்பதிகாரம் ஓர் கற்பனைக்கதை என்ற பேராசிரியர் பிள்ளையவர்களின் கருத்தினை வலியுறுத்த எழுந்த நூலே சுப்பிரமனிய ஆச்சாரியாரின், "சிலப்பதிகார ஆராய்ச்சி". சிலப்பதிகாரக்கதை இளங்கோவடிகளின் கற்பனையிலுதித்த ஒன்று என்ற அவர்தம் ஆராய்ச்சி முடிவு எளிதில் ஒதுக்கி விட முடியாத தொன்று.

எனவே, முன்னோர்களின் முரண்பட்ட முடிவுகள், உண்மை காணவேண்டும் என்னும் அவாவினை என்னுள் எழுப்ப, அதன் விளைவாக வரலாற்றையும் வரலாற்றுச் சான்றுகளையும் அடிப்படையாகக் கொண்டு சிலப்பதிகார காலத்தை விருப்பு வெறுப்பின்றி ஆராயலானேன். அதன் விளைவே இந்நூல், சிலப்பதிகாரத்தின் காலம் பதினோராம் நூற்றாண்டு என்னும் என் முடிவு, அறிஞர் பலருக்கும் அருவெறுப்பைத் தரலாம்; ஆத்திரத்தை முட்டலாம். அது அவர்கள் பழமையின்மேல் கொண்டுள்ள அசைக்கமுடியாத பக்தியைத்தான் காட்டும். ஆயின், வருங்காலம் நிச்சயமாக என் ஆராய்ச்சி முடிபை ஏற்றுக் கொள்ளும் என்பது திடமான நம்பிக்கை.

இவ்வேளையில், இந்நூல் எழுதத் தூண்டு கோலாக இருந்த, உடனுழைக்கும் ஆசிரிய நண்பர்கட்கு என் நன்றி என்றும் உரியது. செம்மையான முறையில் இந்நூலை அச்சேற்றித் தந்த சென்னை மாருதிபிரஸ் உரிமையாளர் திரு. ஏ. எம். விநாயகம் அவர்கட்கும் என் நன்றி உரியது.

சித்தூர் - பலக்காடு

25 - 5 - 1975. செல்லன் கோவிந்தன்

# முன்னுரை

(இரண்டாம் பதிப்பு)

இந்நூலின் முதற்பதிப்பு (1975) வெளிவந்து (2004) இன்றைக்கு முப்பதாண்டுகள் முடிந்துவிட்டன. இப்பொழுது திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்கள் இம் மறுபதிப்பை வெளியிட முன்வந்துள்ளார்கள்.

இப்பதிப்பில் புதிய விளக்கங்கள் பல சேர்க்கப்பட்டுள்ளன. சிலப்பதிகார காலத்தை நிர்ணயிக்க உதவும் சில கல்வெட்டுகளும் சேர்க்கப்பட்டுள்ளன. 'சிலம்பின் மூலம்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரையையும் சேர்த்துள்ளேன்.

பேராசிரியர் டாக்டர் பீ. நசீம்தீன் அவர்களது முகவுரையும் சேர்க்கப்பட்டடுள்ளது.

உரை யிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் சிலப்பதிகாரம். இவ்வகைச்செய்யுள் வடமொழியில் 'சம்பு' எனப்படும். தமிழில் எழுந்த முதல் சம்பு வகை நூல் பாரத வெண்பா (கி.பி. 9 ஆம் நூற்றாண்டு). மற்றொன்று சீவசம்போதனைச் சம்பு (கி.பி. 14ஆம் நூற்றாண்டு) என்று கூறிய அறிஞர் மு. அருணாசலம் அவர்கள், சிலப்பதிகாரத்தையும் சம்பு காவியம் என்று ஒத்துக்கொண்டாலும் அது கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்ட நூல் என்பதை ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்! கி.பி. 9ஆம் நூற்றாண்டில் எழுந்த நூல் என்று அவரே ஒப்புக்கொண்ட நூலான 'சுத்தானந்தப் பிரகாசம்' என்ற நூலின் பகுதிகள் சிலப்பதிகாரத்தில் இருப்பது கொண்டு, சிலம்பு கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது என்பதை ஏற்க மறுக்கிறார், தமது தமிழிலக்கிய வரலாறு 9ஆம் நூற்றாண்டு, பாகம் 1. (பக். 421. 1975) எனும் நூலில்!

இந்நூல் பற்றிய அறிஞர் பெருமக்களது கருத்துரைகளை இப்பதிப்பில் சேர்த்திருக்கிறேன்.

இப்பதிப்பினை வெளியிட முன் வந்திருக்கும் சென்னை சேகர் பதிப்பகம் திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களுக்கு என் நன்றி.

14/103 - செல்வம், விசுவகருமபுரம் **செல்லன் கோவிந்தன்**

# தமிழ்ப் பேரறிஞர்களின் கருத்துரைகள்

பேராசிரியர் செ. ஜேசுதாசன், எம். ஏ., திருவனந்தபுரம்
30 - 5 - 1975.

............இரண்டு தடவைப் படித்துத்தான் அணிந்துரை எழுத முடிந்தது. அணிந்துரையை வெறும் பாராட்டுரையாக எழுதவில்லை. என் மனதிற்குச் சரியென்று பட்டதைப் பாராட்டி எழுதியிருக்கிறேன்.

புரட்சிக் கருத்தாகையால் தமிழகம் ஏற்றுக்கொள்ளத் தயங்கும். உங்கள் துணிகரமான ஆராய்ச்சிக்காகப் பாராட்டுகிறேன்.

............ஆசிரியரின் ஆராய்ச்சி முடிவை என்னால் ஒத்துக்கொள்ள முடியாவிட்டாலும், இரண்டாம் நூற்றாண்டில் இருந்தவர் இளங்கோ என்று பழமைவாதிகள் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருக்கும் காலத்தில் இப்படிக் கூறவந்த கோவிந்தனின் துணிவைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை............

11-ஆம் நூற்றாண்டுக்கு நேரடியாக அரண் செய்யாவிட்டாலும் சிலப்பதிகாரத்தில் சுத்தானந்தப் பிரகாசம் என்ற நூலிலிருந்து அடிகள் அப்படியே எடுத்து ஆளப்படுகின்றன என்ற ஆசிரியர் பாராட்டுக்குரியவர்.

சிலப்பதிகாரத்தின் காலத்தை இவ்வாராய்ச்சி அறுதியிட்டு விட்டது என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால் அத்துறையில் இன்னும் ஆராய்ச்சிக்கு நிறைய விஷயம் இருக்கிறது என்பதற்கு நம் கண்ணைத் திறக்கிறது என்று தைரியமாகச் சொல்லலாம்.

***

டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் எம். ஏ., பிஎச். டி.

பல்கலைக்கழகக் கல்லூரி, திருவனந்தபுரம் 12 - 7 - 1975.

''தங்கள் நூலைப் படித்தேன்; பலநாள் உழைப்பின் பிரதிபலிப்பைக் காண்கிறேன். சில இடங்களில் நீங்கள் எண்ணுவதற்கு நேரான கருத்துத் தெளிவாக்கப்படுகிறது. இன்னும் சில சான்றுகள் சிலப்பதிகார கால ஆய்வுக்குத் துணை நிற்கும். அவற்றையும் மொழி நிலையையும் ஆய்ந்தால் ஒத்துக்கொள்ளத் தக்க ஒரு முடிவிற்கு வழி வகுக்கும்.''

***

மயிலை. சீனி. வேங்கடசாமி

74, காரணீசுவரர் கோவில் தெரு மயிலாப்பூர், சென்னை - 4. 26 - 6 - 1975.

''நூலின் தலைப்பையும் முகவுரையையும் படித்தேன்; நூலுக்குள் நுழையவில்லை. என்னுடைய முகவுரை உங்களுடைய கருத்துக்கு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கும். உங்கள் நூலைப்பற்றிய உங்கள் முடிவு எனக்கு அருவருப்பைத் தரவில்லை; ஆத்திரத்தை மூட்டவில்லை. ஆராய்ச்சி யார் யாரையெல்லாம் எங்கெங்கெல்லாம் இழுத்துச் சென்று விடுகிறது என்பதை நினைக்கும்போது சிரிப்பு வருகிறது.''

***

பேராசிரியர் வினாயகப் பெருமாள், எம். ஏ., தமிழ்த்துறைத் தலைவர்

பல்கலைக்கழகக் கல்லூரி, திருவனந்தபுரம், 12 - 7 - 1975.

''தங்களது 'சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்' என்னும் புத்தகத்தை தற்போதுதான் படித்து முடிக்க இயன்றது. தங்களது உழைப்பு புத்தகம் முழுவதும் பிரதிபலிக்கிறது; ஐந்துஆண்டுகள் உழைத்துக் கண்ட இப்பலனைத் தமிழுலகு ஏற்றுக்கொள்ள வேண்டும்.

N. B:- This book has been prescribed by the Calicut University as a reference book for the M. A. (Tamil) Degree Examination from 1976 - 77 onwards.

***

பேராசிரியர் எஸ். வி. வரதராஜ ஐங்கார், எம். ஏ., எம். ஓ. எல்.

திருவல்லிக்கேணி
சென்னை - 5.
16 - 8 - 1975.

''சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்'' என்பதை வலியுறுத்த தாங்கள் தந்துள்ள சான்றுகள் யாவும் மிகவும் பொருத்தமானவை; ஏற்கத்தக்கவை. பெருமதிப்பிற்குரிய வையாபுரிப்பிள்ளையவர்களும் இக்கருத்தை வலியுறுத்தியுள்ளார். தங்கள் நூலை முற்றும் நன்றாகப் படித்தேன்; படிக்கும்போதே தாங்கள் எவ்வளவு தூரம் உழைத்துள்ளீர்கள் என்பது நன்றாக விளங்கிற்று. நூலில் குறைகாண இயலவில்லை; தங்கள் வாதங்கள் யாவும் நிறைவு உடையவைகளே.

***

திரு. ஏ. வி. சுப்பிரமணிய ஐயர்

47, இராமூர்த்தி காலனி
சென்னை - 82
2 - 9 - 1975.

தமிழறிஞர் திரு. செ. கோவிந்தன் எழுதியிருக்கும் ''சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்'' என்ற தலைப்புடைய நூல் தமிழ் இலக்கிய உலகின் கால ஆராய்ச்சித் துறையில் ஒரு புரட்சிகரமான கொள்கையை நிலைநாட்ட முயல்கிறது. நூலில் காணப்பெறும் ஆராய்ச்சியின் முறையும், தரமும் துணிவும் வெகுவாகப் போற்றத்தக்கன. நூலைக் கவனமாகப் படித்தால் அது விரிக்கும் முடிவும், அறிஞரிடம் ஒருகால் இருக்கலாமோ என்ற உணர்ச்சியை எழுப்புமே யொழிய ஆசிரியர் எதிர் பார்ப்பது போல் 'அருவருப்பைத் தரவோ ஆத்திரத்தை மூட்டவோ' செய்யாது.

...........பதினோராம் நூற்றாண்டுக் கொள்கையை நிலை நாட்ட வேறுபல காரணங்களையும் ஊகங்களையும் ஆசிரியர் விரிவாகப் பேசியிருக்கிறார். இந்த முடிவை ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், அவருடைய ஆராய்ச்சித்திறனை, திறந்த மனதுடைய தமிழ் அறிஞர்கள் பாராட்டி வரவேற்பார்கள். அந்தக் கோஷ்டியில் அடியேனும் ஒருவன்.

***

Prof. B. G. L. Swamy

Presidency College,
Madras - 5.
26 - 6 - 1975.

"It was a pleasure for me to have read your book 'Silappadikaram Patinoram Nutrrandu Kappiyam'. May I congratulate you on your original thinking, critical analysis, convincing arguments and logical conclusion?... Silappadikaram being written in Campu Style could not have been composed earlier than the 11th century."

***

வீ. இராசமாணிக்கம் கலைக்கதிர்
தமிழ்ப்பேராசிரியர். அக்டோபர். 75 இதழ்

''சொல்லொற்றுமைகளையும் நிகழ்ச்சி யொற்றுமைகளையும் அடிப்படையாகக்கொண்டு ஆராயப்பெற்றதாகக் கருத இடந்தருகிறது. ஆசிரியர் கருதுவதைப் போலத்தான் இளங்கோவடிகள் கற்பனை செய்தார், நிகழ்ச்சிகளைத் தொகுத்தார் என்று எங்ஙனம் கூறமுடியும்?............சுருங்கக் கூறின், பாற்கர ரவிவர்மன் குஞ்ஞிக்குட்டன், இராசசிம்மன் என்பாருடைய அரசியல் வரலாறும், இராசராசன் கி.பி. 999இல் மகோதயபுரத்தை எரியெடுத்த நிகழ்ச்சியுமே, இவ்வகையில் ஓர் ஆராய்ச்சியையெழுதத் தூண்டின போலும்.

இந்நூல் ஆசிரியரது நுண்மையான ஆராய்ச்சி அறிவை வெளிப்படுத்து தற்கோர் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

***

டாக்டர் ஏ. சுப்பிரமணியப் பிள்ளை, அரசினர் கல்லூரி,
பட்டமேற்படிப்புத்துறைத் தலைவர் & பேராசிரியர். சித்தூர் - பாலக்காடு.
12 - 12 - 1975.

இந்நூலில் திரு. கோவிந்தன் சில புதுமையான கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார். சிலம்பு காட்டும் நாகரீகம் இடைக்காலச் சோழர்களின் பொற்காலத்தைச் சார்ந்தது என்பதில் ஐயமில்லை. மேலும் சிலம்பின் 'சம்பு' நடையும் நாட்டியக்கலையின் இலக்கணங்களைக் கூறும் சுத்தானந்தபிரகாச மென்னும் நூலைத்தழுவலும் சிலப்பதிகாரம் பிற்காலத்தது என்னும் கொள்கைக்கு அரண்களாகும். மகோதையபுரம் எரியுண்ட வரலாற்று நிகழ்ச்சியே சிலம்பு தோன்றுவதற்குரிய கற்பனை ஊற்றாய்ப் பயன் பட்டது எனும் செய்தி, இலக்கியக் கோட்பாடுகளில் 'Law of probability' (நடைபெறுவதற்குரிய வாய்ப்பினைப் பெறுதல்) எனும், விதிக்குப் பொருந்துவதாகும். மேலும் தென்னகத்தின் இணையற்ற தலைநகராகிய மதுரை உண்மையிலேயே எரியுண்டிருந்தால், பிற்கால நூற்களிற் அதனைப்பற்றிய குறிப்பேதும் இல்லாமல் போகாது என்பது நூற்றுக்கு நூறு உண்மை.

***

# பதிப்புரை

'நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம் என்றோர் மணியாரம் படைத்த தமிழ்நாடு' என்றார் சி. சுப்பிரமண்ய பாரதியார்.

இதில் எவருக்கும் மாறுபாடு எழவில்லை. செய்யுளும் உரையிடையிட்ட பாட்டுமாய்ச் செய்தளித்த சேரநாட்டுக் கவிஞர் இளங்கோவடிகள் தமிழ்நாட்டவரால் பாராட்டப் பெறுவது உண்மை.

'ஐம்பெருங் காப்பியம்' என்பதில் ஒன்றான சிலப்பதிகாரம், 'காப்பியம் ஆகாது; நாடகநூலே' என்று புதுமைக்குரல் எழுப்பினார் கவிஞர் தமிழ்ஒளி. அறிஞர்கள் அவரது வாதத்தை எதிர்த்து ஏதும் உரைக்கவில்லை. எனினும் 'ஐம்பெருங் காப்பியம்' எனும் வழக்கு அப்படியே நீடித்து வருகிறது.

சிலப்பதிகாரம் எனும் தலைப்புப் பெயர் பொருத்தமானதல்ல எனும் கருத்தும் எழுந்தது. பின்னர் - கதைக்குள்ளும் கருத்து மாறுபாடுகள் எழுந்தன. சமயங்கள் என்றாலே கருத்து வேறுபாடுகள் எழுதுவது இயல்புதானே! பல சமயக் கருத்துகள் குவிந்துள்ள நூல் இது. முரண்பாடுகளின் காட்சிக் கூடமாக, நூலெழுந்த காலத்தின் நிலைமையையும், சமண சமயஞ் சார்ந்த நூலாசிரியரின் சமயச் சார்பற்ற கதை சொல்லும் பாங்கும் விரிவாகக் காட்டுகிறது சிலப்பதிகாரம்.

மலைநாடான அக்காலச் சேரநாடு இன்று கேரளமாகியுள்ளது. அம் மலைநாட்டில் பிறந்த புலவர் பெருமான் இனிக்கும் செந்தமிழில் கோவலன் - கண்ணகி எனும் பெயருடையோரை முன்னிருத்திப் புதுமையாகக் குடிமக்கள் காப்பியம் எனத் தக்கவாறு நூல் படைத்தளித்தார். இதனால் நூறாண்டுகளாகத் தமிழகத்தார் பெற்றிருக்கும் இலக்கிய இன்பம் ஈடற்றது என்பது வரலாறு.

வேறு எந்தக் காப்பியத்திற்கும் எழாத விளக்கங்களும் விளம்பரங்களும் சிலம்புக்குக் கிடைத்தது குறிப்பிடத்தக்கதாம். இது ஒரு காலப் பகுதியாக அமைந்தது. திருக்குறள், கம்பராமாயணம் பற்றிய ஆய்வுகள், கருத்துரைகள் காலக் கண்ணோட்டத்துடன் தொடர்வதையும் காண்கிறோம்.

சிலப்பதிகாரம் அச்சாகி நூலாக வெளிவந்த பின்னர் விளைந்த பயன், அறிவுப்பயன், கலைப்பயன், ஆய்வுப்பயன் எனும் பல வழிகளில் தமிழகம் பெரும்பயன் பெற்றது குறிப்பிடத்தக்க இலக்கிய எழுச்சியாகும்.

பொதுமக்களிடம் சிலம்பின் சிறப்பினைப் பரப்பியோருள் குறிப்பிடத் தக்கவர்களாகப் பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனாரும், சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்களும் வரலாற்றில் போற்றப்பெறுகின்றனர்.

சிலப்பதிகாரம் எழுந்தகாலம் பற்றி வரலாற்று அறிஞர்களிடையே கருத்து மாறுபாடுகள் வெளிப்பட்டது ஒரு வரலாறு. அது ஒரு வகை விழிப்புணர்வையும் எழுச்சியையும் உருவாக்கியதுண்மை. அதனால் பல புதிய கருத்துகளும் வரலாற்று நிலைமைகளும் மக்களுக்குப் புது வரவாயின.

சிலப்பதிகாரக் கதை மாந்தரும், கதைப் போக்கும், கதை காட்டும் காலமும் பலவாறு சலிக்கப்பெறலாயின. ஆய்வுமுறையில் 1975இல் ஒரு புதுநூல் வெளிப்பட்டது. கேரளத்துப் பாலக்காட்டுப் பேராசிரியர் செல்லன் கோவிந்தன் என்பார் சிலம்பு மிகப்பிற்பட்ட காலத்தது என்று எழுதி வெளியிட்டார்.

நூலின் தலைப்பே அதிர்ச்சியைத் தந்தது. 'சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்!'

கேரளநாட்டுப் பேராசிரியர் எழுதி வெளியிட்டதாலோ என்னவோ தமிழகத்தார் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை. அன்று ஓரிருவர் தேவையற்றது என்பது போலப் புறந்தள்ளிப் போயினர். அதனைச் சரியாக எதிர்கொள்ளாமல் போனது ஒரு மெத்தனப் போக்கா, முயற்சியற்ற சோம்பலா, ஆராய்ச்சித் துணிவற்ற நிலையா, விரைந்து செல்லும் காலப்போக்கில் வீண்காலம் போக்குதல் எதற்கு என்ற நினைவா... என்பனவும் எண்ணத்தக்கனவே.

சிந்தித்துப் புதுவிடை தேடுவதில் தேக்கம் வந்தது சரியா? வாழுங்காலத்தில் வரலாற்றுக் கடமையிலிருந்து நழுவலாமா? எனும் வினா தமிழகக் கற்றோர் முன் காட்சியளித்தவாறே நிற்கிறது.

பேராசிரியர் டாக்டர் செல்லன் கோவிந்தன் அவர்கள் கடந்த 30 ஆண்டுகளில் மேலும் கிடைத்த சான்றுகளையும் சேர்த்து உறுதிபட நிற்பதைக் கண்டு வியந்தேன். நம் தமிழ்நாட்டார் சிலம்பின் காலமுடிவுக்கு விளக்கம், விடை கண்டு வெளிப்படுத்த வேண்டும் என்று விழைந்து, மீண்டும் அந்நூலைப் புதுச்சேர்க்கையுடன் எமது சேகர் பதிப்பகம் வெளியிடுகிறது. தமிழறிஞர்கள் பார்வை ஒளியில் பதில்கள் வெளிப்படவேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டு, சிலம்பின் காலம் எனும் தலைப்புடைய இவ்ஆய்வு நூலை வெளியிடுகிறோம்.

நூலாசிரியர் பேராசிரியர் டாக்டர் செல்லன் கோவிந்தன் அவர்களின் 33 ஆண்டுகளின் அயரா உழைப்பும் ஆய்வுச் சிந்தனையும் போற்றத் தக்கவை.

முதுமையடைந்துள்ள நிலையிலும் இளமைத் துடிப்புள்ள ஆய்வாளராய் விளங்குகிறார். அவர்கட்கு எனது அன்பார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன். முகவுரை வரைந்து ஆதரவு தெரிவித்துள்ள பேராசிரியர் முனவர். டாக்டர். பீ. நசீம்தீன் அவர்கட்கும் நன்றியுரியது.

சிலம்பின் சிறப்புகளுடன் கால ஆய்வும் புதிய வரவாகட்டும் என்று விரும்புகிறோம். அறிஞருலகம் அறிவுப்பயன் சேர்க்கும் என எதிர்பார்க்கிறோம். வளர்க ஆய்வுச் சிந்தனைகள்! வாழ்க தமிழுலகம்!

அன்புடன்
வெள்ளையாம்பட்டு சுந்தரம்

# வஞ்சிக் காண்டத்தில் மறைந்துள்ள வரலாற்று உண்மைகள்

சிலப்பதிகாரம் இயற்றப்பட்ட காலம் பற்றி உறுதியாகச் சொல்வதற்குக் காப்பியத்தில் கூறப்படும் செய்திகளே தடையாக உள்ளன. சிலப்பதிகாரத்தில் வரந்தரு காதையில் காணப்படும் 'கயவாகு' என்னும் பெயரின் அடிப்படையில் அந்நூல் அக்கயவாகு மன்னன் வாழ்ந்த காலமான (கி.பி. 173 - 196) கி.பி. 2ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது என்ற கொள்கைதான் இன்று தமிழகத்தில் இருந்து வருகிறது.

சிலப்பதிகாரச் செங்குட்டுவன், சோழன் கரிகாற்பெருவளத்தானின் மகள் வயிற்றுப் பேரன் என்று ஐந்தாம் பதிற்றுப்பத்தின் பதிகம் கூறுவதால் கரிகாலன் வாழ்ந்து இருபத்தைந்து ஆண்டுகள் சென்றபின் செங்குட்டுவன் வாழ்ந்து கொண்டிருக்கிறான் என்று கொள்ளலாம்.

அவ்வாறானால் பட்டினப்பாலையும் பொருநராற்றுப் படையும் இயற்றப்பட்டு 25 ஆண்டுகள் கழிந்தவுடனே சிலப்பதிகாரம் இயற்றப்பட்டது என்றாகிறது.

இருபத்தைந்து ஆண்டுகளில் பட்டினப்பாலையில் காணப்படும் செய்திகள் சிலப்பதிகாரத்தில் காணும் அளவுக்கு வளர்ச்சி பெற்றிருக்க முடியுமா? 301 அடிகளையுடைய பட்டினப்பாலையிலிருந்து, 248 அடிகளையுடைய பொருநராற்றுப்படையிலிருந்து, 214 அடிகளையுடைய ஐந்தாம் பதிற்றுப்பத்திலிருந்து ஒரேயடியாக ஐயாயிரத்து ஓர் அடிகளையுடைய சிலப்பதிகாரத்திற்குத் தாவ முடியுமா?

குட்டுவனைப் பாடிய பரணரால் பாடப்பட்ட கண்ணகியும் பேகனும், அதே குட்டுவனைப் புகழ்ந்து பாடிய சிலப்பதிகாரத்தில் எவ்வாறு கண்ணகியும் கோவலனுமாக மாறினர்?

25 ஆண்டுகளில் சங்ககாலம் சங்கம் மருவிய காலமாகிவிடுமா?

இது போன்ற கேள்விகளை அறிஞர்கள் தங்களுக்குள்ளேயே கேட்டுக் கொண்டனர். விளைவு?

சிலப்பதிகாரம் வரலாற்று நூலன்று; கற்பனைக் காவியமே என்ற முடிவிற்கு வந்தனர்.

அதனால், பி.தி.சீனிவாச ஐயங்கார் தாம் எழுதிய தமிழர் சரித்திரம் என்ற நூலில் கயவாகு எனும் பெயர் பிற்காலப் புலவரொருவரால் எழுதிச் சேர்க்கப்பட்ட பெயரே; இளங்கோவடிகள் எழுதியதன்று. இவ்வாறு 1917-வது ஆண்டிலேயே கண்டுபிடித்தார்.

ராவ்சாகிப் மு.இராகவையங்கார் இலங்கையி லிருந்து கண்டெடுக்கப்பட்ட ஒரு வெண்கலச் சிலையின் அடிப்படையில் ( ஆனந்த குமாரசாமி அச்சிலையைக் கண்ணகி சிலை என்று சொன்ன காரணத்தால்) சிலப்பதிகாரம் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது என்றார்.

சிலம்பில் வரும் ஒரு காலக்குறிப்பு கி.பி. 756-வது ஆண்டிற்குப் பொருந்தும் என்று சாமிக்கண்ணு பிள்ளை சொன்னதன் அடிப்படையில் திரு.பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் சிலப்பதிகாரம் கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்கும் பின்னால் எழுந்தது என்று எழுதினார்.

இலங்கையில் கண்ணகி வழிபாடு கி.பி. 13ஆம் நூற்றாண்டளவில்தான் தொடங்கியது; ஆகவே சிலப்பதிகாரம் அதற்குச் சற்று முன்னால் (கி.பி. 11 அல்லது 12ஆம் நூற்.) தான் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று இலங்கையறிஞர் ஞானநாத் உபயசேகரே என்ற ஆசிரியர் கருத்துத் தெரிவித்தார்.

ஆகவே சிலப்பதிகாரம் எழுந்த காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு தொட்டு 12ஆம் நூற்றாண்டு வரையிலுள்ள பல்வேறு காலகட்டங்கள் குறிக்கப்பட்டுள்ளதைப் பார்க்கின்றோம்.

ஒரு நூல் தோன்றிய காலம் பற்றி இவ்வளவு மாறுபாடான காலங்கள் குறிக்கப்படுவது அந் நூலில் குறிக்கப்படும் செய்திகள் உண்மையானவையன்று என்பதைத்தான் காட்டுகின்றது. என்றாலும் ஒரு நூல் கற்பனையாகவாயினும் இயற்றப்படுவதற்கு அந் நூலில் குறிக்கப்படும் செய்திகளுக்கு ஆதாரமாக வேறெங்கேனும் ஏதேனும் ஒரு காலத்தில் நிகழ்ச்சிகள் நிகழ்ந்திருக்கவேண்டும் என்பது ஒருதலை. ஏனென்றால் வெறும் கை முழம் போடாதல்லவா?

மேலும் சிலம்பில் குறிக்கப்படும் நூற்றுவர் கன்னர் ஆந்திரப்பேரரசர்கள் சிலம்பு முதலாம் கயவாகுவின் (176 -196) காலத்தில் இயற்றப்பட்டது உண்மையானால் ஆந்திர சாதவாகனப் பேரரசை நடத்திச் சென்ற சதகர்ணிப்பேரரசர்களில் மிகப் புகழ் வாய்ந்த யக்ஞயஸ்ரீ சதகர்ணி (கி.பி. 174 -203) யே யாவன். இவ்வரசன் காலத்தில் தக்காணத்தில் வர்த்தகச் செழிப்பு உச்சநிலையை அடைந்திருந்தது என்பதனை அவன் வெளியிட்ட நாணயத்தில் இரு பாய்மரங்கள் உள்ள ஒரு கப்பலின் வடிவம் பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து அறியலாம்.

ஆனால், அத்தகைய நாணயங்கள் அல்லது மற்றேதேனும் சான்றுகள் செங்குட்டுவனைப் பற்றியோ, பாண்டியனைப் பற்றியோ அல்லது இவர் காலத்துச் சோழவரசர்கள் பற்றியோ கூறுகின்றனவா?

இன்னுமொன்று, செங்குட்டுவன் கரிகாலனின் பெயரன் என்பது உண்மையானால் செங்குட்டுவனின் காலத்தில் புகாரை அரசாண்ட சோழ (கரிகாலன் மகன் அல்லது பெயரன்) மன்னன் யார்? அவன் பெயரை இளங்கோவடிகள் ஏன் கூறவில்லை? இவையும் இவை போன்ற பிற காரணங்களும் சிலப்பதிகாரம் சங்க நூலோ, சங்கம் மருவிய நூலோ அல்ல; மிகப் பிற்காலத்தில் எழுதப்பட்ட நூலே என்று ஆராய்ச்சியாளர்களைக் கருதச் செய்தன. அதன் அடிப்படையில் இளங்கோவடிகள் எந்தெந்தச் சோழ, பாண்டிய வரசர்காலத்துச் செய்திகளைத் தம் நூலுள் புகுத்தியுள்ளார் என்ற சிந்தனையின் விளைவாகக் கிடைத்தவையே பின்வரும் செய்திகள்.

சிலம்பில் இளங்கோவடிகள் விளக்கிக் காட்டும் செங்குட்டுவனின் வடநாட்டுச் செலவு, இளங்கோவின் துறவு, மதுரை எரியுண்டதாகக் கூறும் செய்தி ஆகியவை தமிழக வரலாற்றில் கி.பி. 10ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலுமாக நடைபெற்றதாகக் காணும் உண்மை வரலாற்று நிகழ்ச்சிகளின் தழுவல்களேயாகும். அவற்றை இனங்கண்டு கொள்வதற்கு அக்காலத் தென்னாட்டு அரசியல் வரலாற்றினை அறிந்து கொள்வது இன்றியமையாததாகும்.

தென்னக வரலாற்றில் பல்லவராட்சிக்குப் பின், தம் வீரச் செயல்களினாலும் ஆட்சித் திறத்தாலும் கலை, பண்பாடுகளின் மேம்பாட்டினாலும் மிகச் சிறந்ததோரிடத்தைப் பெற்றுக் கொண்டவர்கள் பிற்காலச் சோழப் பேரரசர்களே யாவர். விசயாலயசோழன் அப் பேரரசுக்கு அடிக்கல் நாட்டினான் என்றால் அதன் உயர் மாளிகையை எழுப்பிய பெருமை முதற் பராந்தக சோழனையே சாரும். ஆயின் திசையெங்கணும் தம் புகழ்பரப்பி சக்கரவர்த்தி எனும் பேரரசர் பட்டத்திற்கு எவ்வாற்றானும் தகுதி பெற்றவர்களாகித் திகழ்ந்த பெருமை இராசகேசரி முதலாம் இராசராசனுக்கும், அவன் மகன் பரகேசரி முதலாம் இராசேந்திரனுக்கும் உரியது.

சோழன் விசயாலயன் மகன் முதலாம் ஆதித்தன் காலத்திலும் அவன் மகன் முதலாம் பராந்தகன் காலத்திலும் சேர, சோழ, பாண்டியர்களிடையே இருந்த சுமுகமான அரசியலுறவு முதலாம் இராசராசன் காலத்தில் முற்றிலும் சிதைந்தது. முதலாம் இராசேந்திரன் முதலாம் இராசாதிராசன் ஆகியோர் காலத்தில் பகையாக மாறி உச்சநிலைக்கு வந்துவிட்டது என்பதனை அக் கால வரலாற்றைப் படிக்கின்ற எவராலும் உணர்ந்து கொள்ளலாகும்.

முதலாம் இராசராசன் காலத்தில் (கி.பி. 985 -1014) சேர நாட்டை ஆட்சிபுரிந்து வந்த சேரவரசன் முதலாம் பாற்கரரவிவர்மன் (கி.பி. 962 - 1001) ஆவான். தென்னகத்திலும் வடநாட்டிலும் திக்கு விசயம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் இராசராசனுக்கு ஏற்பட்டதற்குக் காரணம் இச் சேரவரசனே யாவன்.

சேர நாட்டிற்கு இராசராசன் அனுப்பிய தூதுவன் ஒருவனை இச் சேரவரசன் அவமதித்து இழிவாக நடத்தி உதகைக் கோட்டையில் சிறையிட்டிருந்தமையால் இராசராசன் இச் சேரன்மேல் படையெடுத்தான். மாற்றரசர் அனுப்புகின்ற தூதுவர்களை அவமதிப்பதும், அவர்களைச் சிறையிலிடுவதும் அரசர் செய்கலாகாச் செய்கைகளாகும். அன்றியும் அச் செயல்கள் அரச நீதிக்கு மாறுபட்டதும் ஆகும்.

அறநெறி திறம்பாத சேரர் குடியிற் பிறந்த பாற்கர ரவிவர்மன், இராசராசன் தூதுவனை அவ்வாறு இழிவாக நடத்தினமைக்குக் காரணம் என்ன வென்பது தெரியவில்லை. ஆயினும், சேரனின் அம் மறச் செயல்களை உணர்ந்த இராசராச சோழன் பெரும்படையைத் திரட்டிச் சேர நாட்டிற்கனுப்பி வைத்தான்.

சேரன் கடற்கரைத் துறைமுகப்பட்டினமாகிய காந்தளூர்ச் சாலையில் சேரன் படைக்கும் சோழன் படைக்கும் வலிய போர் நடைபெற்றது. அப் போரில் சேரன் கப்பற்படை சோழர் படையால் முற்றிலும் முறியடிக்கப்பட்டு அழிந்தது. பின்னர் சோழர் படை உதகையை நோக்கிச் சென்றது. உதகை என்பது கன்னியாகுமரி மாவட்டத்தில் கல்குளம் வட்டத்திலுள்ள உதயகிரியைச் சூழ்ந்த இடம் என்று தி. அ. கோபிநாதராயர் கூறினாலும் [1] அது பாற்கர ரவிவர்மனின் தலைநகராக விளங்கிய மகோதையபுரம்தான் என்பது ஐயத்திற்கிடமின்றி உறுதியாயுள்ளது.[2] இராசராசனின் திருக்கோவலூர்க் கல்வெட்டும்,

''சாரல் மலையட்டுஞ் சேரன் மலைநாட்டுத்
தாவடிக் குவட்டின் பாவடிச் சுவட்டுத்
தொடர் நெய்க் கனகம் துகளெழ நெடு நற்
கோபுரங் கோவை குலைய மாபெரும்
புரிசை வட்டம் பொடிபடப் புரிசைச்
சுதைகவின் படைத்த சூளிகை மாளிகை
உதைகை முன்னொள்ளெரி கொளுவி
உதகை வேந்தைக் கடல்புக வெகுண்டு''

என்று மிக விளக்கமாக எடுத்துக் கூறுவதனால், இராச ராசனால் எரியுண்ட நகரம் மகோதயபுரமே என்பது வெள்ளிடை. இம் மகோதயபுரம் பாற்கர ரவியின் முன்னோனான கோத்தாணு ரவியின் (கி.பி. 844 - 55) ஆட்சிக்காலத்தில், பாலக்கிரீடேசுவரம், கோத்திர மல்லேசுவரம், சேனாமுகம், கோட்டைக்ககம் (மதில்கம்), கோட்டைப்புறம், லோகமல்லேசுவரம் ஆகிய பகுதிகளையும், கோள் ஆய்வுநிலையம் போன்றவற்றையும் கொண்டிருந்தது. மேற்சொன்ன பகுதிகளைக் கொண்ட மகோதயபுரம் என்னும் கோநகரத்தையே இராசராசன் படைகள் எரியுண்ணச் செய்தன. அவ் வீரச் செயலொன்றினாலேயே இராசராசன் 'கீர்த்திபராக்கிரமன்' என்ற

விருதினையும் பெற்றான். இதனை வலியுறுத்துவது போல் பிற்காலத்தில் ஒட்டக்கூத்தரும் தாமியற்றிய மூவருலாவில் முறையே,

''பண்டு பகலொன்றில் ஈரொன்பது சுரமுங்
கொண்டு மலைநாடு கொண்டோனும்''

(விக்கிரம. உலா, வரி: - 32 - 3)

''சூழவும்
எறிபகலொன்றில் எசச்சுரமும் போயுதகை
நூறித் தன்றூதனை நோக்கினான்''

(குலோத். உலா. வரி: 46 - 8)

'சூழி
மதகயத்தால் ஈரொன்பது சுரமும்மட்டித்
துதகையைத் தீயுய்த்த உரவோன்'

( இராச. உலா. வரி 40 - 2)

என்றும் கூறியிருப்பது நோக்கத் தக்கது. மேற்கூறிய வரிகளில் ஈரொன்பது சுரங்களைக் கடந்து சோழர்படை 'உதகை' அடைந்தது என்றால், 'அவ் உதகை' மகோதயபுரமாகத்தானிருக்க வேண்டும். ஏனெனில், கன்னியாகுமரி கல்குளத்திற் கண்மையிலுள்ள உதயகிரிக் கோட்டையை யடைய பதினெண் சுரங்களையும் கடக்க வேண்டிய தில்லையன்றோ?

உதகை யென்னும் மகோதயபுரம் அந் நாளில் மாபெரும் மதில்கள் சூழ்ந்ததாய், மாளிகைகளும் சூளிகைகளும் (செய்குன்று) தன்பாற் கொண்டு உயரிய கோபுரங்கள் அமைந்த வாயில்களையுடையதாய்ச் சேரர்க்குரிய தலைநகரமாக விளங்கியது. அந் நகர்க்குத் தன் படையுடன் சென்ற இராசராசனின் படைத்தளபதி, எதிர்த்த சேரப்படையினைப் புறங்கண்டு, கோட்டைமதில்கள், கோபுரங்கள், மாளிகைகள் முதலியவற்றை அழித்து, எஞ்சியவற்றை எரிகொளுவிச் சூறையாடினான். இந் நிகழ்ச்சி கி.பி. 999 ஆம் ஆண்டு ஆடிமாதத்தில் நிகழ்ந்தது. இதனால் தலைநகரையிழந்த பாற்கர இரவிவர்மன், கடற்கரையைச் சார்ந்த முயிரிக்கோடு (பழைய முசிறி) என்னும் இடத்திலுள்ள அரண்மனைக்குச் சென்று தங்கலாயினன்.

இந் நிகழ்ச்சியினையே உதகைமுன்னொள்ளெரி கொளுவி, உதகை வேந்தைக் கடல்புக வெகுண்டு'' என்ற திருக்கோவலூர்க் கல்வெட்டு வரிகள் மெய்ப்பிக்கும்.

அவ்வாறு போரில் தோற்றுத் தலைநகரத்தை இழந்து வேற்றிடத்தில் வாழ நேர்ந்த நிலையிலும், வாணிகம், பொருளாதாரம் இவற்றின் வளர்ச்சியை முன்னிட்டு இராச தந்திர ரீதியில் வாணிகச் சாத்தின் தலைவன் ஒருவனுக்குப் பட்டங்களையும் சில உரிமைகளையும் கொடுக்கத் தவறவில்லை

என்பதனை, அம்மன்னனின் முப்பத்தெட்டாம் ஆட்சியாண்டுச் (கி.பி.1000) செப்பேட்டுச் சாசனமொன்று சான்று பகர்கின்றது.

மகோதயபுரம் இராசராசன் படைகளால் அழிக்கப்பட்ட காரணத்தாலேயே சேரமன்னன் முயிரிக்கோடு என்னும் கடற்கரைப் பகுதிக்குச் சென்று வதியும் படியாயிற்று என்பதனைத்தான் இச்செப்பேட்டுச் சாசனம் எடுத்துக் கூறுகின்றது.[4] இந்நிகழ்ச்சியினையே இராசராசனது திருக்கோவலூர்க் கல்வெட்டின் பகுதியும் எடுத்துரைக்கின்றது என்பதனையும் முன்னர் காட்டினோம்.

இராசராசனின் பதினைந்தாம் ஆட்சியாண்டின் ஆரம்பத்தில் (கி.பி. 999 இல்) நடைபெற்ற இப் போரின் முடிவில், இராசராசனின் படைத்தளபதி சேரநாட்டினின்றும் திரும்புங்கால் பொற்குவியலும் களிற்று நிரைகளும் மிகுதியாகக் கொணர்ந்தான்.[5] இவ்வாறு இராசராசன் சேரமான்மேல் கொண்ட வெற்றியினைத் தன் வாழ்நாளில் அந்நாள் வரைக்கும் பெற்ற வெற்றிகளுள் மிகச் சிறந்ததாகக் கருதினான் என்பதனை அவனுடைய மெய்க்கீர்த்தியில் காணப்பெறும், ''எழில் வளரூழியுள் எல்லா யாண்டும் தொழுதக விளங்கும் யாண்டே'' என்ற பகுதியே புலப்படுகின்றது. இவ்வாறு சேரன்மேல் கொண்ட வெற்றியின் காரணமாகவே இராசராசனுக்குக் 'கீர்த்தி பராக்கிரமன்' என்னும் பெயரும் ஏற்பட்டது.[6] இப் போரில் சேர நாட்டிற்குச் சென்றிருந்த படைத் தலைவர்களில் ஒருவனான கம்பன் மணியன் ஆகிய விக்கிரமசிங்க மூவேந்த வேளான் என்பவன் அங்கிருந்து கொண்டு வந்த மரகதத்தேவர் படிமத்தை, இராசராசன் உத்தரவுப்படி திருப்பழனத்திலுள்ள சிவன் கோவிலில் எழுந்தருளுவித்தான் என்று அவ்வூர்க் கல்வெட்டொன்று கூறுகின்றது. அவ்வாறு கொண்டு செல்லப்பட்ட சிலை சமண தீர்த்தங்கரருடையது என்று நினைக்க இடமுள்ளது.

இனி முதலாம் இராஜேந்திர சோழன் காலத்தில் (கி.பி. 1012 - 44) இருந்த அரசியல் நிலையினைக் காண்போம்.

இவன் காலத்தில் சேரநாட்டை ஆண்டவர் முதலாம் பாற்கர ரவியும் (965 - 1001), இரண்டாம் பாற்கர ரவியும் (கி.பி. 979 - 1021), இராஜசிம்மனும் (கி.பி. 1022 - 1043) ஆவர்.

இடையே கி.பி. 1022 முதல் 1027 வரை வீரகேரளன் என்ற சேரவரசன் ஆண்டதாகவும் அவனை முதலாம் இராசாதிராச சோழன் (கி.பி. 1018 - 54) யானைக் காலிலிட்டுக் கொன்றதாகவும் சில வரலாற்றாசிரியர் கொண்டாலும்,[8] இராசாதிராச சோழனின் 27ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மெய்க்கீர்த்தியிலும், முப்பதாம் ஆட்சியாண்டு மெய்க்கீர்த்தியிலும்.[9] அவ்வாறு யானைக் காலிலிடப்பட்டு இறந்தவன் வீரகேரளன் என்ற பெயரையுடைய பாண்டிய மன்னனே ஆவான் என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளதால், அவ் வரலாற்று ஆசிரியர் கூற்று உண்மையன்று என்றும்,

வீரகேரளன் என்ற பெயரில் மேற்குறித்த காலத்தில் எந்தச் சேரவரசனும் சேரநாட்டை ஆளவில்லையென்பதையும் அறியலாம்.

எனவே இரண்டாம் பாற்கர ரவிவர்மனை அடுத்துச் சேர நாட்டையாண்டவன் இராசசிம்மன் என்னும் சேரவரசனே யாவான். முதலாம் பாற்கரரவிவர்மனின் இரு மக்களில் மூத்தவரானவர், இரண்டாம் பாற்கர இரவியின் ஆட்சிக்காலத்தில் மூத்த கூற்றுப் பகுதியான குறும்பொறை நாட்டை ( கோழிக்கோட்டுப் பகுதி) ஆளுகின்ற குஞ்ஞிக்குட்ட வர்மனாயின அடிகள் வீர குறும்பொறையாக இருந்தார். [10]

அந்நாளில் 'இளங்கூறு' வாழ்ந்தவர் இராசசிம்மன். ஆறு ஆண்டுகள் நாட்டின் ஒரு பகுதியான மூச்சு கூற்றினுக்கு இளவரசராக இருந்த 'குஞ்ஞிக்குட்டவர் மனாயின அடிகள் வீரகுறும் பொறை' தன் தம்பியான இராச சிம்மனுக்காகச் சிங்காதனத்தைத் துறந்தார். இக்'குஞ்ஞிக்குட்டவர்மனாயின அடிகள் வீரகுறும்பொறை'யாரே சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள். இராச சிம்மனே செங்குட்டுவன். அடிகள் வீரகுறும் பொறையார், தம் தம்பியான் என்பது வரலாறு. 'இளங்கோவடிகள் தன் அண்ணன் செங்குட்டுவனுக்காக அரசினைத் துறந்தார் என்று சிலப்பதிகாரத்தில் கூறியிருப்பது அடிகள் வீரகுறும்புறையாரின் (இளங்கோவடிகளின்) கற்பனை. இக்கற்பனையிலும் தெளிவின்மையைக் காணலாம்.

செங்குட்டுவனின் தம்பி தாம் இளங்கோவடிகள் என்பதற்குச் சிலப்பதிகாரத்தில் நேரடிச் சான்றில்லை. இளங்கோவடிகள் தம் பெயரிலுள்ள இளங்கோ என்பதற்கு இளவல் எனும் பொருள் இருக்கக் கொண்டு அவ்வாறு கூறினராதல் வேண்டும். சிலம்பிற்கு அரும்பதவுரை தந்த உரைகாரர்தாம் இளங்கோவைத் தம்பியாகவும் செங்குட்டுவனை இளங்கோவின் தமையனாகவும் வரைந்து காட்டினார். (சிலம்பு: 30 வரந்தரு காதை. அடிகள். 174 - 85, அரும்பதவுரை)

இராச சிம்மன் எனும் அபிஷேக நாமத்தையுடைய குஞ்ஞிவிக்கிரமன் முதலாம் இராசேந்திர சோழனின் 24ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 1036) திருநெல்வேலி மாவட்டம் மன்னார் கோயில் இராசேந்திர சோழ விண்ணகரம் என்கிற இராசகோபால சுவாமி கோயிலுக்கு நிலதானம் செய்த செய்தி ஒரு கல்வெட்டில் (Ins. 112 Of 1905) குறிக்கப்பட்டுள்ளது. சுத்த சைவனான இவன் வைணவக் கோயிலுக்கு நிலதானம் செய்தது இவனது மதப்பொறையினைக் காட்டும். சிலம்பில் சைவனான செங்குட்டுவன் திருநீற்றினை நெற்றியில் அணிந்திருந்தமையின் ஆடகமாடத்துத் திருமாலின் திருமண்ணைத் தன் தோளில் அணிந்ததாக இளங்கோ கூறுவர். (கால் கோள் காதை: அடி. 62 - 67), ஆடகமாடம் அரும்பதவுரைகாரர் கூறும் திருவனந்தபுரமோ இரவிபுரமோ (கொல்லம்) அன்று. அது கொடுங்கோளூருக்கு (வஞ்சி) அயலதாகிய திருக் குலசேகரபுரத்துத் திருமால் (பார்த்தசாரதி) கோயிலேயாகும். இக்கோயில்

இவரது சிறிய தந்தை இரண்டாம் பாற்கர ரவிவர்மரால் (கி.பி. 1019 - 1028) கட்டப்பட்டது. (A. R. No. 228 (278) of 1895)

அடுத்து, சிலப்பதிகார காவியத்தில் குறிக்கப்படும் செங்குட்டுவனின் கங்கைப்படையெடுப்பைக் காண்போம். முதலாம் இராசேந்திர சோழனின் (1012 - 1044) 11ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில்தான் அவனது கங்கைப் படையெடுப்பு (கி.பி. 1023) கூறப்பட்டுள்ளது. இப்படையெடுப்பிற்குக் குறைந்தது 24. மாதங்கள் தேவைப்பட்டிருக்கலாம் என்பார் தி. வை. ச. பண்டாரத்தார் (பிற்கால சோழர் சரித்திரம் - பகுதி I. பக். 168; அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 1967).

இளங்கோவடிகள் செங்கட்டுவனின் கங்கைப் படையெடுப்பிற்கு 32 மாதங்கள் தேவைப்பட்டது என்பார் (27 நீர்ப்படைக்காதை அடிகள் 149 - 150) அடிகள் கூறுவதுதான் உண்மை! ஏனெனின் இராசேந்திர சோழனின் கங்கைப் படையெடுப்பு நிகழ்ந்தபோது வாழ்ந்துகொண்டிருந்தவர் அவர்தாமே! ஆகவே இராசேந்திர சோழனின் படையெடுப்பினைத்தான் இளங்கோ செங்குட்டுவனின் கங்கைப் படையெடுப்பாகக் கற்பனை செய்தார் என்பது தானே உண்மை? வட நாட்டினின்றும் திரும்பிய செங்குட்டுவன் மாடலனுக்குத்தன் நிறையுள்ள பொன் கொடுத்தான். இது ஐம்பது துலாம்பாரம் பொன் என்பார் அரும்பதவுரைகாரர். (27. காதை: அடிகள் 173 - 176) முதலாம் இராசராசசோழனும் கி.பி. 1014ல் திருவிசலூர் மகாதேவர் (சிவன்) கோயிலில் துலாபாரம் புக்கருளினான்; அங்குத் தன் பெயரில் இராஜராஜேஸ்வர நாடகத்தையும் நடிக்க ஏற்பாடு செய்தான் என்று அவ்வூர்க் கல்வெட்டு கூறும். (S. I. I. Vol. II P. 306; பாண்டியர் வரலாறு. பக்.41, தி. வை. ச. பண்டாரத்தார், கழகம். 1972). கி.பி. 1014ஆம் ஆண்டில் இளங்கோ வாழ்ந்தவராதல் கொண்டுதான் இவ்வரலாற்றுச் செய்திகளைக் காப்பியத்தில் அவரால் புகுத்த முடிந்தது. (சிலம்பு 12 வேட்டுவவரி கலைப்பரியூர்தி திருவியலூரில் உள்ளது.10a)

வட நாட்டின் மீது முதலாம் இராசேந்திர சோழன் (கி.பி. 1012 - 44) படையெடுத்துச் சென்றமைக்குக் காரணம், கங்கை நீரைக் கொணர்ந்து தன்னாட்டைத் தூய்மைப்படுத்த அவன் கருதினமையேயாம் என்பது அவனது திருவாலங்காட்டுச் செப்பேடுகளால் அறியலாகும் செய்தியாகும். (S. I. I. Vol. III No. 205. Verse 109). அவ்வாறு கங்கை நீரைக் கொணர வடதிசை செல்லுங்கால், அங்குள்ள மன்னர்களை வென்று, அவர்களுக்குத் தமிழரசர் வீரத்தை உணர்த்த வேண்டும் என்று நினைத்திருக்கின்றான். எனவே அவன் தன் சிறந்த படைவீரரைப் பெரும்படையுடன் வடநாட்டு மன்னர்களை வென்று வர அனுப்பி வைத்தான்.

இவ்வாறு வடநாடு நோக்கிச் சென்ற இராசேந்திர சோழனின் தமிழ்ப்படை அந் நாட்டில் முதன் முதலில் வெற்றிகண்டது சக்கரக் கோட்டத்தையே ஆகும். இந் நகரம் மத்திய மாகாணத்தில் இருந்து, இந் நாளில் சித்திரகூட என்னும்

பெயரில் வழங்கப்படும் நகரமாகும். இதனையடுத்து, 'ஆதி' நகரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த இந்திரரதனின் ஒட்டர தேயத்தை இராசேந்திரன் படைகள் கைப்பற்றின. பின்னர், மகாகோசலமென்றும் தென்கோசலமென்றும் வழங்கப்படுகின்ற நாட்டினையும் இவன்படை வெற்றி கண்டது.

கலிங்க கங்கரின் கீழ் ஆட்சிபுரிந்த இந்திரரதன் காலத்தவன் மாளவ நாட்டின் பரமார அரசனான போசராசன் (1010 - 1055). இவன் இந்திரரதன் பகைவன். தாரா (Dhara) நகரத்தைக் கோ நகராகக் கொண்டு ஆண்டு வந்த அப் போசராசனை இராசேந்திரன் படைகள் அடுத்ததாக வெற்றிகண்டன.

இதன்பிறகு சோழப்படை தண்ட புத்தியைத் தாக்கியது. அந்நாடு வங்காள மாகாணத்தின் மிதுனபுரி ஜில்லாவின் தென்பகுதியும், தென்மேற்குப்பகுதியும் கொண்டது. அதனையாண்ட தர்மபாலனைச் (1021 - 23) சோழப்படை வென்றது.

பீகார், வங்காளம் ஆகிய இரு மாகாணங்களுக்கிடையே கங்கையாற்றின் தென்கரையிலிருந்த இரு நாடுகள்தாம் தக்கணலாடமும், உத்தரலாடமும். தக்கணலாடத்தை இரணசூரன் என்பானும் உத்தரலாடத்தை மஹிபாலன் (988 - 1038) என்பானும் ஆண்டனர்.

இராசேந்திரன் கல்வெட்டில் வங்காள தேசம் என்று குறிக்கப்பட்டிருப்பது கீழ்வங்காளமாகும். இந் நாட்டை ஆண்டவன் கோவிந்தசந்தன் என்னும் அரசன். கோவிந்தசந்தனும் இரணசூரனும் உத்தரலாடப் பேரரசனான மகிபாலனுக்குட்பட்ட குறுநிலமன்னராக இருத்தல் வேண்டும். இவர்களுள் உத்தரலாடப் பேரரசனான மகிபாலனைத் தவிர மற்ற கோவிந்தசந்தன் இரணசூரன் ஆகியவர்களைப்பற்றிய செய்திகள் தெரியவில்லை. ஒருக்கால் மஹிபாலனுக்கு இவர்கள் உறவினராயிருத்தல் கூடும்.

வங்காள மாகாணத்தைக் கி.பி. 11ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த அரசன் 'பால' மரபில் வந்த மஹிபாலனென்பான். இவனுடைய நாடு வடக்கில் காசி வரையிலும் பரவியிருந்தது. இவனுக்குக் கீழ் சிற்றரசர் பலர் கப்பம் கட்டிக்கொண்டு, வங்காள நாட்டின் பல பகுதிகளை ஆட்சி செய்து வந்தனர். ஆகவே மகிபாலன் பேரரசனாகத் திகழ்ந்தான் என்று தெரிகின்றது.

இராசேந்திரனின் படைத்தலைவன், முதலில் மஹிபாலனுக்குக் கீழ்ச் சிற்றரசர்களாக இருந்து அரசு புரிந்து வந்த பல அரசர்களையும் வென்று, இறுதியில் பேரரசன்ான மகிபாலனையும் போரில் புறங்காட்டியோடும்படி செய்து, போரில் தோல்வியுற்ற மன்னர்களின் தலையில் கங்கை நீர் நிரம்பிய குடங்களையும் வைத்துக்கொண்டு சோழநாட்டிற்குத் திரும்பினான்.[11] இப்போரின்போது சோழர்படைத்தலைவன் யானைகளை வரிசையாகக் கங்கையாற்றில் நிறுத்தி, அவற்றின் மீது தன் படைகளைச் செலுத்திக் கங்கையாற்றைக் கடக்கச் செய்தான் என்று இராசேந்திரனின்

திருவாலங்காட்டுச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.[12] அப்படைத் தலைவனை இராசேந்திரன் கோதாவரி- யாற்றங்கரையில் கண்டு, தழுவிக் கொண்டு அவன் கொண்டு வந்த பொருட்களைப் பெற்று அவனுடன் நாட்டிற்குத் திரும்பினான். வரும் வழியிலுள்ள திருப்பதிகளில் இறைவனை வணங்கி நிவந்தங்கள் பல செய்தான்.

கங்கை கொண்ட சோழபுரத்திற்குத் தென்கிழக்கே பத்துக்கல் தொலைவிலுள்ள திரைலோக்கிய மாதேவீச்சுரத்திலுள்ள கல்வெட்டொன்றில்,[13] ''இராசேந்திர சோழதேவர் கங்கை கொண்டு எழுந்தருளுகின்ற இடத்துத் திருவடிதொழுது'' என்று காணப்படுவதால், மேலே சொன்ன செய்தி தெளிவாகின்றது.

மேலும், கும்பகோணத்தில் நாகேச்சுரரது கோயிலில் இறைவன் திருமுன்னர் வைக்கப் பெற்றுள்ள கங்கை விநாயகர் படிமமும், அப்படையெடுப்பில் இராசேந்திரனின் படைத்தலைவனால் வடநாட்டினின்றும் கொண்டுவரப்பட்டு இராசேந்திரனால் அங்குப் பிரதிட்டை செய்யப்பட்டதேயாம்.

தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள எண்ணாயிரம் என்ற ஊரில் காணப்படும் கல்வெட்டொன்றில், "உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழதேவர் உத்தராபதத்தில் பூபதியரை ஜெயித்தனன்! யுத்தோத்ஸவ விபவத்தால் கங்காவைப் பாணிக்கிரகணம் பதிக்கிரகம் பண்ணியருளி கங்கை கொண்ட சோழனென்னும் திருநாமத்தால் இத்திருமுற்றத்தில் வைத்தருளின உத்தமாகரம் கங்கை கொண்ட சோழனில் உண்ணும் .........வைஷ்ணவர்'' என்று காணப்படுவது, இராசேந்திரன் கங்கை நீரைக் கொண்டு வந்தமையும் அதுபற்றிப் புரிந்த வீரச்செயலும் புரிந்தமைக்குரிய சான்றாகும்.[14] வடநாட்டு வேந்தரை வென்று கங்கைநீரைத் தமிழ் நாட்டிற்குக் கொண்டு வந்த அருஞ்செயல் பற்றியே இராசேந்திரனுக்குக் கங்கை கொண்ட சோழன் என்னும் பெயர் கிடைத்தது என்பது இக்கல்வெட்டால் அறியலாகும் செய்தியாகும்.

கங்கை கொண்ட சோழனான முதலாம் இராசேந்திரனையடுத்து, அவன் முதல் மகனும் பெருவீரனுமாகிய முதலாம் இராசாதிராசன் (கி.பி. 1018 - 54) சோழநாட்டை ஆண்டான். இவன் காலத்தில் சேர நாட்டை ஆண்டு வந்த சேரமன்னர்கள் இரண்டாம் பாற்கரரவியும் கி.பி. (99 - 1021) இராசசிங்கப் பெருமாளும் (கி.பி. 1022 - 1043) ஆவர்.

இந்த இராசாதிராச சோழன் காலத்தில், சேரநாடு அதன் முந்தைய பிரதாபத்தை இழந்திருந்தது.[15] இராசசிங்கப்பெருமான் (இராசசிம்மன்) சோழனின் அதிகாரத்தின் கீழ் இருந்தான் என்று அவனுடைய மன்னார்கோவில் கல்வெட்டு சான்று பகர்கின்றது.

இராசேந்திர சோழ விண்ணகரம் என்ற பெயரில் மன்னார் கோயிலில் இராசசிம்மன் எடுப்பித்த திருமால் கோயிலுக்கு அவன் தேவி சில

நிவந்தங்களைத் தந்ததாக அக்கல்வெட்டு கூறுகின்றது.[15] இவனுடைய ஆட்சியிறுதியாண்டுகளில் சேர நாட்டின் வடபகுதியான கோலத்து நாடும் (ஏழில்மலை நாடு) தென்பகுதிகளான வேணாடும் கூபகதேசமும் சுயாட்சியைப் பெற்றன.

கோலத்து நாட்டை இராம குடமூவர் திருவடிகளான கண்டங்காரிவர்மனும் (கி.பி. 1025 - 44) தென்பகுதிகளைச் சாமந்தர்களும், குறுநில மன்னர்களும் ஆண்டனர்.

இராசராசசோழனின் மெய்க்கீர்த்தியிலிருந்து அவன் தனது இருபத்தேழாம் ஆட்சியாண்டுக்கு முன்னரே மானாபரணன், வீரகேரளன், சுந்தரபாண்டியன் என்ற பாண்டியவரசர் மூவரையும், இராமகுடமூவர் திருவடி கண்டங்காரிவர்மனையும், வேணாட்டரசனையும் வெற்றிகண்டதாகத் தெரிகிறது.[17] அதே மெய்க்கீர்த்தி இராசாதிராசன் ,சேரமன்னனை நாடு விட்டோடிக் காடு புக் கொளிக்கும்படி செய்தான் என்றும் கூறுகின்றது. எனவே இவற்றின் அடிப்படையில் சேரவரசன் இராசசிம்மன் இராசாதிராச சோழனுக்கு அடங்கியவனாய்த் தன் நாட்டை ஆண்டு வந்தான் என்பது அறியக்கிடக்கின்றது.

இதுகாறும் சோழர் வரலாற்றையும் சேரர் வரலாற்றையும் இங்கே கூறியது, இவர்கள் வரலாற்றுக்கும் சிலப்பதிகாரக் கதையின் தோற்றத்திற்கும், வஞ்சிக்காண்ட நிகழ்ச்சிகளுக்கும் பெரிதும் தொடர்பு இருந்தமையினாலேயாகும்.

சிலப்பதிகாரக் கதையின் தோற்றத்திற்குக் காரணமாக இருந்த செய்திகள் புறநானூற்றில் வையாவிக்கோப் பெரும் பேகன் - கண்ணகி ஆகியோரைப் பற்றி எழுந்த பாடலும்,[18] நற்றிணையில் திருமாவுண்ணியைப் பற்றி எழுந்த பாடலும்,[19] இராசராசன் மகோதயபுரத்தை எரியுண்ணச் செய்த நிகழ்ச்சிகளும் கங்கை கொண்ட சோழனாகிய முதலாம் இராசேந்திரசோழனின் கங்கைப் படையெடுப்புமாகிய நிகழ்ச்சிகளாகும்.

சேரன் செங்குட்டுவன் வடவாரிய மன்னர்கள் மீது படையெடுத்துச் சென்றான் என்ற இளங்கோவடிகளின் கற்பனை நிகழ்ச்சிக்கு, முதலாம் இராசேந்திர சோழனின் கி.பி. 1023ஆம் ஆண்டுக்குமுன் நடைபெற்ற கங்கை படையெடுப்பு நிகழ்ச்சியே காரணமாகும்.[20]

இராசேந்திரசோழனின் கங்கைப் படையெடுப்பிற்குக் காரணமாகக் கூறப்படுவது, அவன் கங்கை நீரைக் கொணர்ந்து சோழ நாட்டைத் தூய்மைப்படுத்துவதற்கு எண்ணினமையே என்பதைத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றன.[21] இந்நிகழ்ச்சியினையே தம் கற்பனைத் திறத்தால் கண்ணகிக்குப் படிமம் எடுக்கச் செங்குட்டுவன் இமயத்திற்குச் சென்று கல்லெடுத்து, கங்கையில் நீராட்டித் தம்மை எதிர்த்த வடவாரிய வரசர்களை யெல்லாம் வென்று திரும்பியதாக இளங்கோவடிகள் மாற்றியமைத்தார்.

இராசேந்திரசோழன் வடநாட்டிலிருந்து விநாயகரின் படிமத்தைக் கொண்டு வந்து கும்பகோணத்தில் நாகேசுரரது கோயிலில் இறைவன் திருமுன்னர் வைத்த நிகழ்ச்சியை, இமயத்தினின்றும் கல்லெடுத்துப் படிமஞ் செய்து கங்கையில் நீராட்டி, வஞ்சியில் கண்ணகி கோயிலில் பிரதிட்டை செய்த நிகழ்ச்சியாகவும், வடநாட்டினின்றும் வெற்றியுடன் திரும்பி வரும்போது, இடையிலுள்ள திருப்பதிகளில் இறைவனுக்கு நிவந்தங்கள் அளித்த செய்தியைச் சிலம்பில் நீர்ப்படைக்காதையில் செங்குட்டுவன் மாடலனுக்கு ''ஆடகப் பெருநிறை ஐயைந்திரட்டி'' பொன் கொடுத்த நிகழ்ச்சியாகவும் இளங்கோவடிகள் மாற்றியமைத்தார்.

முதலாம் இராசராசனின் 29 ஆம் ஆட்சியாண்டாகிய கி.பி. 1014 இல் கும்பகோணத்திற்கு வடகிழக்கே மூன்றரை மைலில் காவிரியாற்றின் வடகரையிலுள்ள திருவியலூர்க் கோயிலில் இராசராசன் துலாபாரம் புகுந்ததையும் அவன் முதற் பெருந்தேவியாகிய உலோகமா தேவி இரணிய கருப்பம் புகுந்ததையும்[22] தான் மேலே கூறிய மாடல மறையோனுக்குச் செங்குட்டுவன் துலாபார தானத்தின் மூலமாகக் கொடுத்ததில் காண்கிறோம் எனக் கொள்ளல் மிகவும் பொருந்துவதாகும்.

அடுத்து, முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில், அவன் கோநகரான கங்கை கொண்ட சோழபுரமானது உட்கோட்டை, மாளிகைமேடு, ஆயிரக்கலம், கொல்லாபுரம், வீரசோழ நல்லூர், சுண்ணாம்புக்குழி, வாணதரையன் குப்பம் ஆகிய பகுதிகளைக் கொண்ட மிகப்பெரிய நகரமாகத் திகழ்ந்தது.[23] இதைப் போலவே கி.பி. 9ஆம் நூற்றாண்டில் சேரன் கோத்தாணு ரவிவர்மன் காலத்திலும், (884 - 85) பின்னர் முதலாம் பாற்கரரவிவர்மன் காலத்திலும் (962 - 1019) அதன் பின்னரும் சேரர் தலைநகரமான மகோதயபுரமும் மதிலகம் (உட்கோட்டை), கோட்டைப்புறம் (புறக்கோட்டை), திருவஞ்சிக்களம் (வஞ்சிமூதூர்), கொடுங்கொல்லியூர் (கொடுங்கோளூர்), சேனாமுகம், பாலக்கிரீடேசுவரம், கோத்திரமல்லேசுவரம், குணகா (குணவாயிற்கோட்டம்) - திருக்கு(க)ணார் (மதிலகம்) ஆகிய பல பகுதிகளைக் கொண்ட ஒருசில இலக்கம் மக்கள் தொகையினைக் கொண்டதாக விளங்கிற்று.[24]

இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில், மற்றப் பகுதிகளை வேண்டுமென்றே குறிப்பிடாமல் விட்டுச் சென்றாலும், அவரையறியாமலேயே சேனாமுகம், குணவாயில் (குணகா) ஆகிய இரு பகுதிகளைக் குறிக்கும் சொற்களைக் குறித்துச் சென்றுள்ளார் என்பது கவனித்தற்குரியது.[25]

இச்சேனாமுகம் மூன்றாம் நந்திவர்மன் பல்லவன் (கி.பி. 825 - 850) காலத்தில் இருந்த படைவீடு ஆகும். இக்குணகா என்னும் குணவாயிற் கோட்டம் சங்க காலத்திலோ சங்கம் மருவிய காலத்திலோ இல்லாமல் ஏழு அல்லது 8ஆம் நூற்றாண்டில் மகோதையபுரம் என்னும் வஞ்சியில் தோன்றி 14ஆம் நூற்றாண்டு வரையிலும் இருந்தது என்பது ஓர் கோயில் கல்வெட்டு,

இலக்கியங்கள் இவற்றால் உறுதியாகும் ஒன்றாகும்.[26] இவற்றுள் சேனாமுகம் போன்றவை மன்னனுடைய படைவீடுகளாகும்.

கி.பி. 9ஆம் நூற்றாண்டில் பிற்காலச் சோழர் ஆட்சியின் ஆரம்ப காலத்தில் அவர்களது இரண்டாம் தலைநகராக விளங்கிய ''பழையாறை'' என்னும் நகரிலும் ஆரியப்படை வீடு, பம்பைப்படைவீடு, புதுப்படைவீடு மணப்படைவீடு என்ற நான்கு படைவீடுகள் இருந்தமையும் வரலாற்றினால் அறியலாகும்.[27] இப்படைவீடுகள் மன்னனின் திருமேனி எனவும்படும். இத்தகைய படைவீடுகளில் ஒன்றான சேனாமுகத்தைச் செங்குட்டுவனின் திருமேனியாக பறையறிவிப்போர் வாழ்த்தியதாக இளங்கோவடிகள் கூறுகின்றார்.[28]

இனி, முதலாம் இராசேந்திர சோழனின் கங்கைப் படையெடுப்பிற்கான காரணங்களே, செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பிற்கும் காரணங்களாக இளங்கோவடிகள் அமைத்திருத்தலை உணர்ந்து கொள்ளலாம். இராசேந்திரனின் கங்கைப் படையெடுப்பிற்குக் காரணங்கள் எனச் சொல்லத் தக்கவை நான்கு எனலாம். அவை யாவன:

1. தன் வலிமையினையும் வீரத்தினையும் வடநாட்டரசர்களும் உணர்ந்து ஒப்புக் கொள்ள வேண்டும் என்பது இராசேந்திரனின் அவா.

2. கங்கை நீரைக் கொணர்ந்து தான் அமைத்த கோநகரான கங்கை கொண்ட சோழபுரத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும். அங்குப் பிரதிட்டை செய்யப்படுகின்ற இறைவனுக்கு அபிடேகம் செய்யவேண்டும் என்னும் எண்ணம்.

3. தான் படையெடுத்துச் சென்றமைக்குச் சான்றாக, நிலையான ஏதேனும் பொருட்களைக் கொண்டுவர வேண்டும் என்னும் ஆசை இவ்வாசையினாலேயே அரிய வேலைப் பாடமைந்த விநாயகர் படிமம் ஒன்றை வடநாட்டினின்றும் கொணர்ந்தான். (- பி.சோ. ச. பகுதி I, பக். 129.)

4. பகை மன்னரை வென்று அவர் தலையில் நீர்க் குடங்களைச் சுமக்கச் செய்து தன் நாட்டிற்கு அக் கங்கை நீரைக் கொண்டு வருவதன் மூலம் தன் பராக்கிரமத்தை உலகோர் அறியச் செய்ய வேண்டும் என்னும் பேரவா. (பி.சோ.ச. பகுதி I, பக். 158)

இக் காரணங்களையே செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பினுக்கும் காரணங்களாக அமைத்தார் இளங்கோவடிகள் என்பதைப் பின்வரும் பகுதிகளினின்றும் அறியலாகும்.

1. தன் வீரத்தை வட நாட்டரசர் ஒப்புக் கொள்ள வேண்டும் என்னும் செங்குட்டுவனின் அவா.[29] பொதியிலில் கல்லெடுத்துக் காவிரியில் நீர்ப்படை செய்தல் சாலும் எனினும் அஃது மறத்தகை நெடுவாளெங் குடிப்பிறந்தோர்க்குச் சிறப்பொடு வரூஉஞ் செய்கை யன்று'' என்பார் இளங்கோவடிகள். அதனால் கனக விசயர் என்ற இரு வடநாட்டு வேந்தர் ஒரு

விருந்தில் தமிழ் மன்னரை இழிவாகப் பேசினர். எனவே அவர்களைத் தண்டிக்க இப்படை செல்கிறது எனக் காரணம் காட்டுவார் அவர்.[30]

2. இமயமலையிலிருந்து கண்ணகி படிமம் செய்வதற்குரிய கல்லெடுத்து, அதனைக் கங்கையில் நீராட்டி, பத்தினித் தேவியான அவளுக்குத் தன் தலைநகரில் கோவிலெடுத்துப் படிமத்தைப் பிரதிட்டை செய்வதன் மூலம் தன்னாடு புனிதமடையவும் செழிப்படையவும் செய்தல்.[31]

3. கண்ணகிக்குச் சிலையைப் பொதியினின்றும் எடுக்கலாம் எனினும் இமயத்தினின்று கொணர்வதே தம் வீரத்திற்குச் சிறப்பு என்ற நினைப்பும், பகைவரை வெற்றிகண்டு அங்கிருந்தும் 'உருவச்சிலை' போன்றவற்றைக் கொணர்வதில்தான் பெருமையிருக்கின்றது என்ற எண்ணம்.[32]

4. பகை மன்னரைத் தோற்கடித்து அவர்களை இழிவு படுத்துவதுதான் பெருவலி பெற்ற பேரரசருக்கு அழகு என்ற எண்ணம். அதனால்தான் கனகவிசயரைக் கொண்டு கண்ணகிக்குரிய சிலையினைச் சுமக்கச் செய்தான்.

இனி, இராசேந்திர சோழனால் முறியடிக்கப்பட்ட வட நாட்டு மன்னரும் பிறரும் எவ்வாறு இளங்கோவடிகள் கையில் உருமாறிச் சிலப்பதிகாரத்தில் உலவுகின்றனர் என்பதனைக் காண்போம்.

முதலில் 'பாலகுமரன்' என்ற வடநாட்டு அரசனைப் பார்ப்போம் (சிலம்பு 3: 26: 158). 'பாலன்', குமரன் என்ற இரு சொற்களும் இளைஞன் என்னும் பொருளைத்தரும். இவ்விரு பண்படியெழுந்த இருபெயர்களையும் சேர்த்து ஒரு பெயராக்கினார். இவ்வழக்கம் சிலப்பதிகாரம் நெடுகிலும் காணலாம். 'வில்லவன் கோதை''குட்டுவன் கோதை' போன்றவற்றை உதாரணமாகக் காட்டல் தகும். 'வில்லவன்', 'கோதை' ஆகிய இரு சொற்களும் சேரனையே குறிக்கும்.

இரு இயற்பெயர் சேர்ந்து ஒரு பெயராக மாறும் வழக்கம் பிற்காலத்தது. பண்டைக்கால மரபன்று. இளங்கோவடிகள் வாழ்ந்த பிற்கால வழக்கு அது. குஞ்ஞிக்குட்டன் போன்ற இயற்பெயர்களைக் காண்க. எனவே இளங்கோவடிகளின் இத்திறம் - ஒரு பெயரை ஒட்டி ஒரு பெயராக மாற்றும் திறம் உன்னற்குரியது.

இப்பெயர்களும் இவைபோனற பிறவும் இளங்கோவடிகள் எங்கிருந்து கொண்டார் எனக் காண்போம்.

**பாலகுமரன்**

இராசேந்திர சோழன் முறியடித்த உத்தரலாடத்தை ஆட்சி புரிந்தவனும் பால மரபில் வந்த அரசனுமாகிய மஹிபாலனே இளங்கோவடிகள் கையில் பால குமரனாக உருமாற்றம் பெற்றான். கீழ் வங்காளத்தையாண்ட கோவிந்த சந்திரனும், தக்கணலாடத்தை ஆண்ட இரணசூரனும் (இவர்கள் இருவரும் மஹிபாலனின் உறவினராயிருக்கலாம் என்பார் வரலாற்றாசிரியர்கள்) இளங்கோவின் காப்பியத்தில் கனகனும், விசயனுமாக உலவினர்.

செங்குட்டுவனுக்குக் கங்கையாற்றினைக் கடப்பதற்குப் படகுகளைக் கொடுத்துதவிய ''நூற்றுவர் கன்னர்'' யாரெனப் பார்ப்போம்.

''நூற்றுவர் கன்னர்'' என்னும் சொல் 'சதகர்ணிகள்' சாதவாகனப் பேரரசை நடத்திய ஆந்திரமன்னர்கள்! 'சதகர்ணி' என்பது அவர்கள் இயற்பெயரன்று; குடிப்பெயரேயாம். 'கௌதமீ புத்ரசதகர்ணி', வாசிஷ்ட புத்ர ஸ்ரீ புலுமாயி சதகர்ணி', 'ஸ்ரீயக்ஞசதகர்ணி' என்ற பெயர்களில் இயற்பெயரும் குடிப்பெயரும் வந்தமை காண்க. இம்மன்னர் பரம்பரை கி.மு. 230 முதல் கி.பி. 210 வரையிலும் கோதாவரிக் கரையிலுள்ள 'பிரதிஷ்டானம்' (தற்போதைய பைதான்) நகரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆந்திர நாட்டை யாண்டு வந்தது. இளங்கோவடிகள், சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவனின் காலத்தில் வாழ்ந்ததாகக் கூறப்படுகின்ற சதகர்ணி மன்னரின் (நூற்றுவர்கன்னர்) இயற்பெயரைக் குறிப்பிடாமல் குடிப்பெயரினையே குறித்திருப்பதும் காண்க. நூற்றுவர் கன்னர் ஒரு வேந்தனா அல்லது வேந்தர்களா என்ற ஐயம் ஏற்படும் வகையில் அச்சொல்லைப் பயின்ற இளங்கோவின் திறத்தையும் காண்க.

இனி, சிலப்பதிகாரச் சேரன் செங்குட்டுவனை வரலாற்று அடிப்படையில் இலங்கையை யாண்ட முதலாம் கயவாகு மன்னனின் காலத்தவனாகக் கொண்டால் (கி.பி. 173 - 196) அதே காலத்தில் ஆந்திர நாட்டை ஆண்ட சாதவாகனப் பேரரசன் (நூற்றுவர் கன்னர்) ஸ்ரீ யக்ஞசதகர்ணி (கி.பி. 171 - 99) என்பவன் ஆவான். இவன் சாதவாகனப் பேரரசர்களில் புகழ்வாய்ந்தவன். பெரிய கப்பற்படை யொன்றனையுடையவன். பெருவீரன். மேற்குச் சத்ரபர்களை வென்று கிழக்கு மேற்குப்பகுதிகளின் மேல் ஆதிக்கம் கொண்டவன்[33]. இத்தகைய பெருவீரன். தன் வீரம் புலப்படும்படியாக நாணயங்களை வெளியிட்டவன்.[33] இவன் தன் கோநகரமான பிரதிஷ்டானத்தினின்றும் நூற்றுக்கணக்கான மைல்களுக்குஅப்பால் உள்ள கங்கைக்கரை வரையிலும் சென்று செங்குட்டுவன் படைகள் கங்கையைக் கடக்க நாவாய்களைக் கொடுத்து உதவினான் என்பது முற்றிலும் கற்பனை என்பது தெரிகிறது.

இனி நூற்றுவர் கன்னர் என்ற யக்ஞஸ்ரீ சதகர்ணி செங்குட்டுவனின் நண்பனாக இருந்தான் (சிலம்பு : காதை : 26, வரி 148) எனக் கொண்டாலும், வடமொழி வடவாரிய மன்னர் இவர்களது பாதுகாவலனான அவன், கண்ணகி படிமஞ் செய்யக் கல்லெடுக்கச் செல்வதோடு, கனகவிசயர் கருவத்தையும் அடக்கச் செல்லும் பொருட்டுச் செங்குட்டுவனுக்கு உதவினான் என்பது நடக்கக்கூடிய ஒரு நிகழ்ச்சியாக இல்லையென்பது அறியத்தக்கது.

## வில்லவன்கோதை

வில்லவன்கோதை, அழும்பில்வேள், கோசிகமாணி போன்ற பெயர்களும் கற்பனைப் பெயர்களே. வில்லவன் என்ற சொல்லும் கோதை என்ற சொல்லும் சேரன் என்ற பொருளையே தரும். சேரன் என்னும் பொருள்தரும் இரு சொற்கள் சேர்ந்து ஓர் இயற்பெயராக இருத்தல் முடியாதன்றோ? எனவே

வில்லவன் கோதை என்னும் பெயர் இளங்கோவடிகள் காலத்தில் அவருக்குப் பழக்கமான ஒரு பெயரின் திரிபாக இருக்கலாம். அவ்வாறு பார்க்கும் பொழுது அவருடைய இளமையில் வேணாட்டை ஆண்டு வந்தவன் வல்லபங்கோதை என்னும் சிற்றரசன் என்று தெரிகிறது.[34] இவ்வல்லபன் கோதையை மனதிற்கொண்டே சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் வில்லவன் கோதையைப் படைத்தார் என்பது கண்கூடாகத் தெரிகின்றது. வல்லபன் கோதையென்றே காப்பியத்திலும் பெயர் கொண்டால் அது காப்பியத்தின் காலத்தைக் காட்டிவிடுமே என்றுதான் வல்லபங்கோதையை வில்லவன் கோதையாக மாற்றிக் கூறினார்.

## அழும்பில்வேள்

அழும்பில் வேள் கதையும் அத்தகையதே. சோழன்வழி வந்த ஓர் அழும்பில் வேள் பற்றி அகம் - 44ஆம் செய்யுள் செப்புகின்றது. ஆனால் அவ்வழும்பில் என்னும் ஊர் பெரும் பூட்சென்னி அழும்பில்.[35] என்று அகநானூற்றில் கண்டபின்னரும், அதன் உரைகாரர் - அழும்பில் பாண்டிய நாட்டுள்ளதோர் ஊர்'' என்று உரை எழுதிப் போந்தார். மதுரைக் காஞ்சியிலும் ஓர் அழும்பில் வேள் வருகின்றான்.

ஆயின் அவன் 'மானவிறல் வேள்' என்ற பெயரையுடையவன் என்பது உணர்தற்குரியது.[36] சிலப்பதிகாரத்தில் அழும்பில்வேள் என்று குறிக்கப்படுகின்ற இரண்டிடங்களிலும் (காதை 25 - வரி 177, காதை 28, வரி 205) அழும்பில் வேளின் பெயர் கூறப்படவில்லை. அழும்பில் என்ற ஊரை அகநானூற்று உரைகாரர் என்னதான் பாண்டிநாட்டு ஊராகக் குறித்தாலும் அது பாண்டி நாட்டையோ சேரநாட்டையோ சேர்ந்த ஊரன்று என்பது தேற்றம். ஆகவே இங்கும், இளங்கோவடிகள் மதுரைக்காஞ்சியின் 'மானவிரல் வேளின்' அழும்பிலையும், அகநானூற்றில் வரும் பெரும்பூட்சென்னியின் 'அழும்பிலை'யும் மனதிற்கொண்டுதான் செங்குட்டுவனுக்கு ஒரு நண்பனைப் படைத்து, அவனுக்கு அழும்பில்வேள் என்று ஒரு பொதுப் பெயரையும் சூட்டித் தம் காப்பியத்தில் உலவவிட்டிருக்கிறார். எனவே அழும்பில்வேள் என்பது இயற்பெயரன்று என்பது தெளிவாகின்றது.

இங்ஙனம், தம் காவியம் நெடுகிலும், பாத்திரங்களின் இயற்பெயர் சுட்டாது பொதுப்பெயராலேயே பாத்திரங்களை உலவவிட்டிருக்கும் இளங்கோவவின் செய்கை அப் பாத்திரங்களும் அவை நடத்திச் செல்லுகின்ற கதையும் முற்றிலும் கற்பனை என்பதைத்தான் வலியுறுத்திக் காட்டுகின்றது.

## கற்பனைத்திறன்

அவ்வாறானால் முதலாம் இராசராசன், இராசேந்திரன், அவன் மகன் இராசாதிராசன் ஆகியோர் வெற்றியினைச் செங்குட்டுவன் வெற்றியாக மாற்றிக் கூறவந்த நூலில் கண்ணகி கதை ஏன் புகுத்தப்பட்டது என்ற கேள்வி எழலாம்.

இளங்கோவின் உட்கோள் (தம்பிக்குக் கி.பி. 1022 இல் நாட்டைக் கொடுத்துத் துறவு பூண்டு சமணராக மாறியபின்) சமண தத்துவங்களைப் பரப்ப வேண்டும் என்பதேயாகும்.[37] அதிலும் உரைசால் பத்தினியின் (கண்ணகியன்று : பட்டினி - பத்தினிப்) படாரியரான பத்மாவதி இயக்கி என்னும் சமண தெய்வத்தின்) உயர்வை அறியச் செய்ய வேண்டும் என்பது அவரது வேணவா. அதற்கு அவர்காலத்தில் பத்து, பதினொன்று நூற்றாண்டுகளில் - கர்ண பரம்பரையாகச் சேரநாட்டில் வழங்கிவந்த கண்ணகி கதையைக் கருவியாக்கினார்.

கணவனால் புறக்கணிக்கப்பட்ட ஒரு பெண்ணின் கதைதான் சேரநாட்டில் வழங்கப்பட்ட அக்கதை. அதனைத் தம் வியக்கத்தக்கக் கற்பனைத் திறத்தால் விருத்தி செய்து சோழபாண்டிய சேரராகிய மூவரசர்கள் நாடுகளிலும் நடைபெற்றதாகக் கூறினார். அவ்வாறு கூறுவதற்குண்டான காரணம் மூவரசரிடையே ஒற்றுமையை நிலவச் செய்து நாட்டில் போரொழிந்து, அமைதியை நிலைநாட்டல் வேண்டும் என்பதேயாம்.

ஏனெனில் அரசியல் பகை பாராட்டிய காரணத்தால் சேரநாடும் பாண்டிய நாடும் சோழரிடம் பட்ட அல்லல்களை நேரடியாக அனுபவித்து அறிந்தவர் அவர். சேரநாடு, சோழப் பேரரசரால் அடைந்த இன்னல்கள், போரில் நாட்டையும் கோநகரத்தையும் கொளுத்தி எண்ணற்ற மக்களுக்கு இழைத்த கொடுமை இவை இளங்கோவின் மனத்தைப் புண்படுத்திவிட்டது. உண்மைச் சமணரல்லவா அவர்.[38] தமக்கு இன்னா செய்வாரை எவ்வாறு தண்டிப்பது, இன்னா செய்வாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்துவிடலல்லவா சிறந்தவழி? எனவே சிலப்பதிகாரத்தை எழுதி அதன் மூலம் சோழரும் நாணும்படி சேரன் நன்னயம் செய்ததாகக் காட்டுகின்றார். காவா நாவின் மன்னரான கனகனும் விசயனும் விருந்தின் மன்னர் தம்மொடுங்கூடி தமிழ் மன்னரை இகழ்ந்தனராக, மூவேந்தருள் சோழனும் பாண்டியனும் அதனைக் கேட்ட அளவிலும் வாளாவிருக்க, சேரனான செங்குட்டுவனை மட்டும் அவ்வாறிருக்க விடாமல், மன்னர் மூவர்க்கும் வந்த இகழைத் தனக்கே வந்ததாகக் கருதி அருந்தமிழாற்றலறிந்திலராங்கெனக் கூற்றங் கொண்டிச்சேனை செல்வது என்று (சிலம்பு 26 : 61 - 2) படையெடுத்துச் சென்று சோழ பாண்டியர்களுக்கும் சேர்த்துப் போரிட வைக்கின்றார் இளங்கோவடிகள்.

எனவே சேரன், காப்பியத்தின் மூலம் நன்னயம் செய்தவனாகின்றான். செங்குட்டுவனின் மைத்துனன் வளவன் கிள்ளியொடு பொருந்தாத ஒத்த பண்பினர், ஒன்பது மன்னர் தம் ஒன்பது குடையும் ஒரு பகலொழித்தவன் பொன் புனைத்திகிரி யொருவழிப்படுத்தியதாகக் கூறி நன்னயம் செய்கின்றார் (சிலம்பு 27: வரி 118 - 123). எல்லாவற்றிற்கும் [illegible]ாக இராசராசசோழன், இராசேந்திரன், இராசாதிராசன் ஆகிய இவர்க[illegible] பெற்ற வெற்றியைச் செங்குட்டுவனுடையதாக்கி வட நாட்டுப்போர் தொடுத்ததாகக் கூறி, கண்ணகிக்குக் கோவிலெடுக்கச் செய்து.[39] அதன் மூலம் பத்தினித்

(பத்மாவதி) தேவியை வழிபடச் செய்து தன் கற்பனைக் கதாபாத்திரமான செங்குட்டுவனைப் பெருமையடையச் செய்வதன் மூலம், இறவாத புகழினைத் தம் மூதாதையாம் கடல்பிறக் கோட்டியக் குட்டுவனுக்குக் கொடுத்து விடுகின்றார். இதுவே இத்தகைய நன்னயம் (சோழன்மேல் வஞ்சம் தீர்ப்பதற்கு) செய்வதற்குத்தான் இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் யாத்தார் என்பது இனிவரும் பகுதிகளால் உறுதிப்படும்.

## குறிப்புகள்

1. Travancore Archeological Servies Vol II . Page 5, T.A. Gopinatha Rao.

2. 'மகோதை' என்பது மகோதையார் பட்டணம் எனவும் சாசனங்களில் வழங்கும். இது மகோதை (பெரிய சேரரது) பட்டினம் என்ற உறுப்புப் பொருள் உடையது. இதனைக் 'கோதையரசர்' மகோதை, என ஈண்டு வருவதனாலும் அறிந்து கொள்க. 'கோதை மகோதை' என்றார் கூத்தரும் (குலோத். பின்). இந்நகரை மகோதயபுரி என்பர் வடநூலார். இதற்கு மகா உதயரின் (-உதியர் சேரரின்) நகரம் என உறுப்புப் பொருள் கொள்ளத்தகும்' -சேரவேந்தர் செய்யுட் கோவை, இரண்டாம் தொகுதி, பக். 285 மு. ராகவையங்கார், திருவிதாங்கூர் சருவகலாசாலை 1951.

3. South Indian Inscriptions Vol. VII, 863

4. ஸ்வஸ்தி ஸ்ரீ கோ கோன்மை கொண்டான் கோ ஸ்ரீ பாற்கர ரவிவர்மா திருவடி.......இரண்டாமாண்டைக் கெதிர் முப்பத்தாறாமாண்டு முயிரிக் கோட்டு இருந்தருளிய பிரசாதமாவது Epigrapha Indica Vol III Pages 68 - 69

5. Ins 443 06 1919; பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி, பக்கம் 100, தி. வை. சதாசிவபண்டாரத்தார் - அண்ணாமலை பல். வெ. 1949.

6. Annual Report on South Indian Epigraphy for thy year 1911 - 2, Para. 22.

7. Ins. No. 135. 06. 1928; பி. சோ. ச. பகுதி 1. பக். 100, தி. வை. ச. பண்டாரத்தார்.

8. The Manimangalam Inscription dated 1046. A.D. 29th Year of Rajadhi Raja) refers to vira kerala having been seized and caused to be trampled to death under an elephant' - A suervey of Kerala History, p.130, by Sreedhara Menon, National Book stall, kottayam Ed. 1967.

வாகனம் பாய்கலை (கலைமான் = இரலை), இக்கோயில் விசயாலய சோழன் காலத்தது (கி.பி. 846 - 881). சாதாரணமாக மகிடாசுரமர்த்தினியின் ஊர்தி சிங்கமாகும். கலைமானை வாகனமாகச் செதுக்கிய ஒரேயொரு சிற்பமும் இதுவாகும். இதைப்பார்த்த இளங்கோ நூலுள் அப்படியே எடுத்தாண்டார். மானொடு துர்க்கையை தொடர்பு படுத்திக் கூறும் வழக்கம் கி.பி. 7ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 10ஆம் நூற்றாண்டு முடிய இருந்தது. DR. S.V. சுப்பிரமணியம் & G. ராஜேந்திரன். Temple Arts. P. 325. The Arts of South India and Kerala, K.V. Soundarajan, P. 41, 158. Archaeological survey of India, Madras.

9. 'தென்னவர் மூவருள், மானாபரணன் பொன்முடியாளும் பருமணிப் பசுந்தலை பொருளகத்தரித்து, வீரகேரளனை ஆனைக்கிடுவித்து, அசைவில் சுந்தரபாண்டியனைத் திசைகெடத், தொல்லையில் முல்லையூர் துரத்தி, S.I.I. Vol. IV. No. 537; பி.சோ.ச. பகு. I – பக். 188 - 258, தி.வை.ச. பண்டாரத்தார், ப. 1949; Ibid பக். 189.

10. A Second plate of Bhaskara Ravivarman II found at Tirunelli. at his 43rd year. Epigraphia Indica. Vol. XVI. PP. 343 - 4, Lines 5 - 6.

10a. திருவிசலூர்க்கோயில் மகிடா சுரமர்த்தினிக்கு.

11. T. A. S.Vol. III. No. 34 Verse 71; பி. சோ. ச. பகுதி 1, பக் - 158. பண்டாரத்தார்.

12. S. I. I.Vol. III. No. 205 Verse 112; பி. சோ. ச. பகுதி 1.பக். 159. பண்டாரத்தார்.

13. Annual Report on South Indian Epigraphy for the Year ending 31st March, 1932, Para 13; பி. சோ. சரி பகுதி 1 பக். 159, தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் பதிப்பு, 1949.

14. கலைமகள் தொகுதி 11. பக். 326; பி. சோ. ச. பகுதி I, பக். 160 தி. வை. ச. பண்டாரத்தார்.

15. "The reign of Rajasimaha (1922 - 43. A.D) saw the establishment of Chola Supremacy over vast portions of kerala at least for a short period - A Servey of kerala History p. 131. A. Sreedhara Menon.

16. Annual Report of Epigraphy for the year 1905; Appendix B and Epigraphia Indica. Vol XI, P. 294, Also No. 234 of 1916 mentions a gift by the Queen of Chera Rajasengadevar to the Temple of Rajandra Chola Vinnagaram' Ins. 11206 1905 of Rajendra Chola is 24th year.

17. வேணாட்டரசை சேணாட்டொதுக்கி, மேவு புகழிராமகுட மூவர் கெடமுனிந்து, மிடல்கெழு வில்லவன் குடர்மடிக் கொண்டு தன், நாடு புக்கோடி காடு புக்கொளிக்க S. I. I. Vol. IV. No.537. வரி 23 - 6.

18. புறநானூற்றில் பரணர் பாடிய, 141, 142, 144, 145 பாடல்கள்; கபிலர் பாடிய 143ஆம் பாடல்; அரிசில் கிழார் பாடிய 146ஆம் பாடல்; பெருங்குன்றூர்க் கிழார் பாடிய 147ஆம் பாடல்.

19. 'எரி மருள் வேங்கை கடவுள் காக்கும்
குருகார் கழனியின் இதணத் தாங்கண்
ஏதிலாளன் கவலை கவற்ற
ஒரு முலை யறுத்த திருமாவுண்ணி''

நற்றிணை - 216 வரி. 16 - 19 மருதனிளநாகனார்.

20. பி. சோ. ச. பகு. I. பக். 154. தி. வை. ச. பண்டாரத்தார்.

21. Ibid S. I. I. Vol.III. No. 205, verse 109.

22. Ibid. பக். 117.

23. Ibid. பக். 175. அடிக்குறிப்பு. 1

24. Some problems in Kerala History, part II. P. 126, Foot Note: 'Mahodayapuram' by liamkulam pillai, sahitya pravartaka c.s. National Book stall, kottayam, kerala.

25. 'குணவாயிற் கோட்டத்தரசு துறந்திருந்த'' சிலம்பு: பதிகம் அடி. 1. உண்மையில் பதிகத்தை எழுதியவர் தண்டமிழ்ச் சாத்தனான இரவிசாத்தன். ' வாழ்க சேனாமுகமென வாழ்த்தி'' Ibid, காட்சிக் காதை ,அடி. 192.

26. 'பூதாடித் தாழக்காவுக் கல்வெட்டு' T. A. S. Vol. viii; P.39; 'செம்மே காண்மானருது குணகத் தம்புரானே. பக்.137. 'த்விஜன்மார்', கோகஸந்தேசம். குணகத்தம்புரான், குணவாயிற் கோட்டத்து இறைவன்; த்விஜன் - பிராமணன், கோகம் - அன்னம். அந்தணருக்கு குணவாயிற் கோட்டத்தினுள் புக முடியாதாகையால் வெளியே நின்று தொழுதான். இதனால் கடவுள் சமணர் என்பது பெறப்படும்.

27. பி. சோ. ச. பகு. I. தி. வை. ச. பண்டாரத்தார்.

28. சிலப்பதிகாரம், 25. காட்சிக்காதை - அடி. 192.

29. பொதியிற் குன்றத்து கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப்படுத்தல். சி - 2.
மறந்தகை நெடுவா ளெங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வருஉஞ் செய்கையோ வன்று'' - சிலம்பு: 25. அடி. 122 - 5.

30. பால குமரன் மக்கள் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னவர் தம்மொடுங் கூடி
அருந்தமிழாற்ற லறிந்தில ராங்கெனக்
கூற்றங் கொண்டிச் சேனை செல்வது (சிலம்பு: 26. அடி. 158 - 62)

இப்பால (மா) குமரன் க(ா)ம்பிலி நகர்க் காவலன் என்று சீவக சிந்தாமணி (செ. 611) கூறும். கம்பிலி நகரச் சாளுக்கியர் மாளிகையை இராசாதிராசன் கி.பி. 1046இல் தகர்ப்பித்தான். சிந்தாமணி பத்தாம் நூற்றாண்டுக் காப்பியம் என்பர். எனவே இதனாலும் சிலம்பு பிற்காலக் காப்பியம் எனப்படும்.

31. 'அத்திற நிற்கநம் மகனாடடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென'
- சிலம்பு: 25. அடி. 113 - 4.

32. சிலம்பு 25. காட்சிக்காதை: அடிகள் 123 - 5.

33. "Sri Yajna satakarni's puranic reign - perlod of twenty nine years - is confined by inscriptiens mentioning his twenty Seventh reginal year. His epigraphical records are found not only in Maharastra but also in North Konkan and the district, and his Coins in these regions as well as in Gujarat and kathiawar. His ship coins probably suggest his naval power. It is clear that he conquered from the Western satraps some of the territories seized by Rudradaman I. There is no manner of doubt regarding his control over the Andhra Desa' - History of India. Vol I page. 217. Ed. 72. by R. sathianathaier, S. Viswanathan & co. Madras - 31. 33a "Perhaps the best known Satavahana ruler is 'Sri Yajna Sata karni (C. A. D. 170 - 199). He must have renewed the struggle with Sakas and recovered some of the Provinces lest by his predecessers. His rare Silver Coins intimating the Satrap Coinage must have been struck for circulation in the newly conquered Western Districts. Some of the potin coins (conpound of copper lead tin etc.) he issued in the Chanda District (Madhya Pradesh) while many of Brenze and Lead have come to light in the Eastern Previnces. Others bearing the figure of a ship, should also be referred to his reign and indicate that his power was not confined to the land. Also belonging to his reign are inscriptions found at Kanheri and Nasik in the west and at China Ganjam in the East. As far as we know Sri Yajna was the last king to retain control of both the Western and the Eastern previnces. 'History of South India. Vol. I. P. 217. R. Satyanathair, 1972.

34. "ஆதிச்ச னுமையம்மைக்கு நீரோடட்டிக் கொடுத்தான் வேணாடுடைய வல்லபங்கோதை - மாம்பள்ளிச் செப்பேடு - அடி. 7 - T.A.S. Vol. IV. P. 9 - 10. A. C. 974 (ko.149)

35. 'பிணை அல் அம் கண்ணிப் பெரும்பூட்சென்னி, அழும்பில் அன்ன அறா யாணர்' - அகம். 44. குடவாயிற் கீரத்தனார்.

36. 'விளங்கு பெருந்திருவின் மானவிறல்வேள், அழும்பில் அன்ன நாடிழந்தனரும் - மதுரைக் காஞ்சி, அடிகள் 344 - 5.

37. சிலம்பு 30 வரந்தரு காதை அடிகள் 185 - 202.

38. தன் சிறிய தந்தையின் ஆட்சிக் காலத்தில் குறும்பொறை நாட்டு இளவரசராக இருந்த அவர் கி.பி. 1022-ல் தம்பிக்காக அரசைத் துறந்து சமயத்துறவியாகி 'குணகா' என்னும் குணவாயிற் கோட்டத்திற் புகுந்தார். அக் குணவாயிற்கோட்டம் ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டில் தோன்றியது. (T. A. S. VIII. P. 39) அதன் இறைவன் அருகன். கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டிலும் அது அருகதேவன் கோயிலாக இருந்தமையால் வைதீக அந்தணர் அதனுள் செல்வதில்லை என்பது 'கோகசந்தேசம் என்ற நூலால் தெரிகிறது.

39. வஞ்சி மூதூர் என்னும் கொடுங்கோளூரில் உள்ள பெண் தெய்வம் கண்ணகியினுடையது அல்ல; சமண இயக்கி சீதளாவினுடையதாகும். வஞ்சிமூதூருக்குக் கோத்திர மலேசுவரம் அல்லது லோக மலேசுவரம் எனப்பெயர் இருந்தமையால் மல்லிநாத தீர்த்தங்கரரின் ஆலயம்தான் அது என ஓதுகின்றது. இச்சமணக் கோயில் ஆதிசங்கரரின் காலத்தில் இந்துக் கோயிலாக

மாற்றப்பட்டிருக்கலாம். மல்லிநாத தீர்த்தங்கரர் இன்று சிவனாக வழிபடப்படுகின்றார். ஆனால் அவரது மனைவி (யக்ஷி) (சீதளா)யின் சிலையை இன்றைய கொடுங்கல்லூர் ஸ்ரீ குறும்பகண்டன் காளியின் முன்னால் செங்கற்களால் கட்டி மூடிவைத்துள்ளார்கள். ஆனாலும். இன்றும் காளிக்கு பூசை செய்வதற்கு முன், மூடிவைக்கப்பட்டுள்ள இவ்வறையிலுள்ள அம்மனுக்கு முதற்பூசை நடைபெறுகிறது. கோயில் முற்றத்திலிருந்து 1976இல் அகழ்ந்தெடுத்த சமணச்சிலை 48 அடி உயரமுள்ளதாம். இதனையே இளங்கோவடிகள் புகாரின் சதுக்கப் பூதமாக வரைந்து காட்டினார் (காதை 5 - அடி 134). இளங்கோவின் காலத்திற்குப் பின் இச்சிலை பூமிக்குள் புதைக்கப்பட்ட போது ஏறத்தாழப் பதினாறு அல்லது பதினேழாம் நூற்றாண்டில் 12 அடி உயரத்தில் ஒரு கற்சிலை செய்து வழிபடலாயினர். அது இன்று 'அச்சு வேதாளன்' அல்லது 'க்ஷேத்ரபாலன்' எனும் பெயர்களில் அழைக்கப்படுகின்றது.

# 2. சிலம்பில் வரலாற்றுச் சான்றுகள்

## கவிஞனின் உள்ளம்

இலக்கியம் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடி என்பர், இலக்கிய வல்லுநர். ஒரு கவிஞன் அவனுடைய இலக்கியத்தைப் படைக்கும்போது, அவன் வாழுகின்ற காலத்தைச் சார்ந்த மக்கள், நிகழ்ச்சிகள், பழக்க வழக்கங்கள், பண்பாடு, நாகரிகம் போன்றவை அவ்விலக்கியத்தில் எவ்வாற்றானும் பிரதிபலிக்காமலிரா. அதனாற்றான் பன்னெடுங் காலத்திற்கு முன் வாழ்ந்தவராகக் கருதப்படும் இராமபிரானின் கதையைக் கம்பர் பெருமான் தமிழில் எழுதப் புகுந்தபோது, அவரால் தம் காலத்து மனிதர்களையும், ஊர்களையும், நிகழ்ச்சிகளையும், பழக்கவழக்கங்களையும் அக்காவியத்தில் புகுத்தாமல் இருக்க முடியவில்லை.

இராமனுக்கு முடிசூட்டு விழா நடைபெறுகின்றபோது கம்பரை ஆதரித்த சடையப்ப வள்ளல் குலத்தில் பிறந்த முன்னோரில் ஒருவன் மௌலியை எடுத்து வசிட்டன் கையில் கொடுக்க அவன் இராமனுக்கு முடிசூட்டினான் என்று கம்பர் விளக்குகின்றபோது, அவரது பெருமதிப்பிற்குரிய சடையப்ப வள்ளலின் முன்னோன் இராமனின் காலத்து நிகழ்ச்சியில் நேரடியாகப் பங்கு கொள்வதைக் காண்கின்றோம்.

ஆகவே ஓர் இலக்கியத்தில் காணப்படும் நாடு, மக்கள், பழக்கவழக்கங்கள் இவற்றை வைத்துக்கொண்டு அவ்விலக்கியமானது படைக்கப்பட்ட காலத்தை அறிந்து கொள்ள இயலும். பண்டைய இலக்கியங்களில் கூறப்பட்ட, ஊர்கள், நகரங்கள், மனிதர்கள் பெயர்களைப் பயன்படுத்தினாலும், பழக்க வழக்கங்களை என்னதான் வரைந்து காட்டினாலும், அவ்விலக்கியத்தைப் படைத்த ஆசிரியர் வாழ்ந்த காலத்திலுள்ள ஊர்ப்பெயர்கள், மனிதர்களின் பெயர்கள் இவற்றை அவர் எங்கேனும் தன்னையறியாமலே பயன்படுத்தியிருக்கின்ற காரணத்தால் அவற்றை ஆதாரமாக வைத்துக்கொண்டே அவ்விலக்கியம் எழுதப்பட்ட காலத்தை எளிதில் நிர்ணயித்துக் கொள்ள முடியும்.

இம்முறையில் சிலப்பதிகாரத்தில் என்னதான் புகாரைப்பற்றியும், வஞ்சியைப்பற்றியும், மதுரையைப்பற்றியும் மிக விரிவாகக் கூறப்பட்டிருந்தாலும், காஞ்சியைப் பற்றிக் கூறாமலே போனாலும், மிகப் பிற்காலத்தில் விளக்கம் பெற்ற நாடுகள், ஊர்கள் இவைபற்றி அந்நூலில்

கூறப்பட்டிருக்கின்றன என்பது தெளிவாகின்றது. மிகப்பிற்காலத்தில் விளக்கம் பெற்ற அத்தகைய ஊர்களுள் கொடும்பாளூர், தொண்டி, (கீழ்க்கடற்கரை), பங்களம் (வங்காளம்) என்பன சிலவாகும்.

### பிற்காலத்தவை

இந்நகரங்கள் சங்ககாலத்தில் இல்லாதவை. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் இவை இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் குறிக்கும் அளவுக்குச் சிறப்பை அடைகின்றன.

கொடும்பாளூர் என்னும் நகரம் பாண்டியன் நெடுஞ்செழியன், மூன்றாம் இராஜசிம்மன் (கி.பி 900 - 16) காலத்தில்தான் அது ஓர் பெரு நகரமாகத் திகழ்ந்தது என்றும் அறிகிறோம்.

தொண்டி என்னும் நகரம் குணதிசைச்கண் உள்ளது என்பர் அடியார்க்கு நல்லார். அது சோழனுக்குரியது என்பது அவர் கருத்து. ஆயின் தொண்டியென்னும் அத்துறைமுக நகரம் பாண்டியனுக்குரியது என்று நந்திக் கலம்பகமும் (செய்யுள். 42 வரி. 6), இறையனார் களவியல் உரை ( பாண்டிக் கோவை செ. 147) யும் சான்று பகர்கின்றன.

இரண்டாம் இராசாதிராச சோழன் (கி.பி 1163 - 78) காலத்தில் இலங்கை மன்னன் பராக்கிரமபாகு தன் தண்டநாயகனை அனுப்பிக் குலசேகர பாண்டியனை வென்று மதுரையை வீரபாண்டியனுக்கு மீட்டுக் கொடுத்தான்.

தொண்டி, கருந்தங்குடி ஆகிய இடங்கள் அடங்கிய பகுதியை மழவச் சக்கரவர்த்தி ஆளும்படி செய்தான். எனவே, இக்கீழைக் கடற்கரைத் தொண்டி சோழனுடையதன்று என்பதும், மூன்றாம் நந்திவர்ம பல்லவன் (கி.பி 825 - 850) காலத்திற்கும் சற்று முன்னால் அத் தொண்டி நகரம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதும் மேல் எடுத்துக் காட்டிய சான்றுகளினின்றும் உய்த்துணரப்படுகின்றது.

### வங்காளம்

வங்காள நாடு, சங்க காலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் இல்லாததொன்று. வங்காளத்தை யாண்டு வந்த 'பால' மரபினரான மன்னர்களின் கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்குப் பின் வந்த அரச மரபினர் ஆவர். முதலாம் இராசேந்திர சோழனின் வடநாட்டுப் படையெடுப்பிற்கு (கி.பி. 1021 ஆம் ஆண்டு)ப் பிறகுதான் பங்களரைப் பற்றிய செய்தியே கல்வெட்டுக்களிலும் இலக்கியங்களிலும் காணப்படுகின்றது.[2] பாலமரபில் வந்த அரசனான மகிபாலனையே இளங்கோவடிகள் 'பாலகுமரன்' ஆக்கினார். பாலன் என்ற சொல்லும் குமரன் என்ற சொல்லும் இளைஞன் என்ற பொருளையே தரும் என்பதும் அறிதற்குரியது. அதனாற்றான், இங்கும் இளங்கோவடிகள் இயற்பெயர் சுட்டவில்லை என்று கூறுகின்றேன். முதலாம் இராசாதிராசனுடைய (கி.பி. 1018 - 1054) இருபத்தேழாம்

ஆண்டு மெய்க்கீர்த்தியில் பங்களரை அப்பெயர் சுட்டியே குறிப்பிடப்பட்டிருக்கிறது.[3] இந்த இராசாதிராசன் காலத்தில்தான் இளங்கோவடிகள் தம் நூலை யாத்தனர் என்பதும் அறியத்தக்கது.

## ஆளுவம் - மாளுவம்

இனி குடகுநாடு, கொங்குநாடு, மாளுவநாடு என்பன பற்றிக் காண்போம். குடகக் கொங்கரு மாளுவவேந்தனும் (சிலம்பு 30, வரி 15) என்ற வரிக்கு, குடகரும், கொங்கரு மாளுவவேந்தனும் என்ற பாட பேதந்தான்.[4] பொருத்தமானதாகப்படுகின்றது. குடகர், மேலைக்கங்கர்கள் தழைவனபுரம் என்னும் தலைக்காட்டைக் கோநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தவர்கள்.[5] கொங்கர், கொங்கு நாட்டரசர், குறுநிலமன்னர்கள், கொங்கரு மாளுவவேந்தனும் என்ற பகுதியைக் கொங்கரும் மாளுவ வேந்தனும் என்று பிரித்து மாளுவ வேந்தனை வடநாட்டு மாளுவ வேந்தனாகக் கொண்டனர் டாக்டர். உ.வே. சாமிநாதையர் போன்றதமிழ்ப் பேரறிஞர்கள் (சிலம்பு. உ.வே. சா. பதிப்பு 1960. பக். XXIX). அச்சொல் 'ஆளுவ' மேயன்றி 'மாளுவ' மன்று.

இளங்கோவடிகட்கு ஒரு நூற்றாண்டிற்குப் பின் வாழ்ந்த ஒட்டக் கூத்தரும், தாமெழுதிய விக்கிரம சோழனுலாவில் 'தென்னரும் மாளுவரும்' (வரி. 135) என்றும், மாகதனும் மாளுவனும் (வரி 177) என்றும் விரித்தே எழுதியிருப்பது நோக்கத்தக்கது. மேலும் மாளுவர் போன்ற மன்னர் விக்கிரம சோழனுக்கு முன்னால் அணிவகுத்துச் சென்றனர் என்பது கவிக்கூற்றேயன்றி வேறன்று. இதைப் போன்று இளங்கோவின் கூற்றினையும் கொண்டாற் போதுமானது. மேலும் மாளவம் என்ற வடநாட்டுப் பெயர் இயல்பாகத் தமிழிலும் மாளவம் என்று வழங்க வேண்டும் மாளுவம் என்று வராது. (இராசராச சோழனுலா வரி. 104). எனவே 'குடகக் கொங்கரு மாளுவவேந்தனும்' என்று பிரித்துதான் பொருள் கொள்ளவேண்டும்.[5] இளங்கோ சுட்டும் ஆளுவுவேந்தன், கி.பி. ஏழு, எட்டு நூற்றாண்டுகளில் துளு நாட்டில் பிரபலமாக இருந்த ஆளுப அரசர்களின் பிரிதிநிதியே யாவான் (P. 114. பி. சோ. ச. Part I. TUSP 190).

## குடகக்கொங்கர்

தலைக்காட்டுக் கங்கரின் மரபில் வந்தோர் சேலம், கோவை மாவட்டங்களையும் ஆண்டு வந்தனர். அவர்கள் கொங்கர் எனப்பட்டனர். கொங்கர் என்ற பெயர் சங்கப் பாடல்களிலும் காணப்படுகின்றதெனினும் அவர்கள் தனியரசு நடத்தும் நிலையை 7, 8 நூற்றாண்டளவில்தான் அடைகின்றனர். இளங்கோவடிகள் காலத்தில் குவளாலபுர பரமேஸ்வரர்களான மேலைக்கங்கர்கள் குடகு நாட்டிற்குப் பக்கத்திலுள்ள கங்கபாடியைத் தழைவனபுரத்திலிருந்து ஆண்டுவந்தனர். இதனால்தான் கொங்கரைக் குறிக்க வந்த இளங்கோவடிகள் குடகக் கொங்கரும் என்று கூறினர் போலும்.

இளங்கோவடிகள் முதலாம் இராசாதிராசன் காலத்தில்தான் சிலப்பதிகாரத்தை எழுதினார் என்பது உறுதிப்படுவதானல் அவரே இக் 'கயவாகு' என்னும் சொல்லை எழுதியிருப்பதற்கு வழியில்லை என்பதும் இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது. படியெடுத்தோரால் செய்யப்பட்ட இம்மாறுதலினால் சிலப்பதிகாரத்தைப் படிக்க நேர்ந்த இலங்கை வாழ் மக்கள் தங்கள் முன்னோன், சேர நாட்டில் செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குக் கோயில் எடுப்பித்து அவள் படிமத்தைப் பிரதிட்டை செய்தபோது உடன் இருந்தான் என்பதனையும், தங்கள் நாட்டகத்தும் அவன் கண்ணகி வழிபாட்டினைத் தொடங்கினான் என்பதையும் உண்மை என நம்பி, தாங்களும் அப்பத்தினி வழிபாட்டினைத் தொடங்கியிருக்கலாம்.

ஆகவேதான், சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் எழுதப்பெற்ற 'இராசாவழி' என்னும் இலங்கை வரலாற்று நூலில் 'பத்தினி' வழிபாடு பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.[9] சிலப்பதிகாரச் செங்குட்டுவனைப் பரணரால் பாடப்பெற்ற சங்ககாலக் கடல் பிறக் கோட்டிய வெல்கெழு குட்டுவனாகக் கொண்ட 19, 20, நூற்றாண்டுத் தமிழ்ப் பேரறிஞர்களும் ஏடெழுதுவோரால் புகுத்தப்பட்ட 'கயவாகு' என்னும் சொல்லைக் கொண்டு பரணர் காலத்துக் கயவாகு எனக் கொண்டு, சிலப்பதிகாரம் மிகப் பழமையான நூல் எனக் கொண்டனர்.

இலங்கை முதலாம் கயவாகுவின் காலம் கி.பி. 173 -95 என்பதால் செங்குட்டுவன் காலமும் அதேகாலம் எனக்கொண்ட பேரறிஞர்கள் அவன் காலத்தவரான சோழபாண்டிவரசர்கள் பற்றி மட்டும் முரண்பட்ட கருத்தினைத் தெரிவித்தனர். இதற்குக் காரணம் இவர்களுடைய பெயர்களை இளங்கோவடிகள் யாண்டும் நேரடியாகச் சுட்டவில்லை என்பதுதான். சுட்டிச் சென்ற ஒன்றிரண்டு இடமும் (கட்டுரை) இடைச்செருகல் என எண்ண வேண்டியதாக உள்ளது.[10] நம் ஊகப்படி கரிகால்வளவனையும், பெருங்கிள்ளியையும், ஆரியப்படை கடந்த நெடுங்செழியனையும், வெற்றிவேல் செழியனையும் இரண்டாம் நூற்றாண்டு மன்னர்கள் என எடுத்துக் கொள்ளும் சங்கப் பாடல்கள் அடிப்படையில் அவர்கள் காலங்கள் பெரிதும் முரண்படுகின்றன.

மேலும் 'நூற்றுவர்கன்னர்', குடகர், கொங்கர், ஆளுவவேந்தன் இவர்கள் இயற்பெயரைச் சுட்டிச் செல்லாத இளங்கோவடிகள் இலங்கை வேந்தன் பெயரைமட்டும் சுட்டிச் சென்றிருப்பாரா? என்ற ஐயம் ஒருவருக்கும் இதுவரை எழுந்ததாகத் தெரியவில்லை. வெற்றிவேற்செழியன், பெருங்கிள்ளி போன்ற பெயர்கள் சங்க இலக்கியங்களிலோ வரலாற்றிலோ காணக்கிடைக்காதவை. இவற்றையெல்லாம் வைத்துப் பார்க்கும்போது சிலப்பதிகாரத்தில் வரலாற்றுக் கூறுகளின் இன்மையும், இளங்கோவின் கற்பனைவளத்தின் உண்மையும் இன்ன அளவின என்பது புலப்படும்.

## காவல் வேந்தன் (கயவாகு)

கடல் சூழிலங்கைக் காவல் வேந்தன் கண்ணகிக்குச் செங்குட்டுவன் பெருவிழா எடுத்தபோது வஞ்சியில் இருந்ததாக இளங்கோ காட்டியதற்கு ஆதாரமான நிகழ்ச்சி, அக்காப்பியம் எழுதுவதற்குச் சில ஆண்டுகள் முன்னர் நடைபெற்றது. முதலாம் இராசேந்திர சோழனின் படைகள் ஈழநாட்டின் மீது படையெடுத்துச் சென்று அதை ஆண்டு வந்த ஐந்தாம் மகிந்தனைச் சூழ்ச்சியால் சிறைபிடித்துச் சோழ நாட்டிற்குக் கொணர்ந்தனர். இங்கே அம்மன்னன் பன்னிரண்டு ஆண்டு வரையில் உயிர் வாழ்ந்திருந்து கி.பி. 1029 இல் இறந்தான் என்று மகாவம்சம் கூறுகின்றது. எனவே சோழநாட்டில் 12 ஆண்டுகள் வாழ்ந்த 5ஆம் மகிந்தனை மனதிற் கொண்டே, கண்ணகியின் படிமத் திருவிழாவின்போது வஞ்சியில் இலங்கைக் காவல் (கயவாகு) வேந்தன் இருந்தான் என்று இளங்கோ எழுதினார்.

இஃதன்றி முதற்கயவாகு வஞ்சிக்கோ அல்லது தென்னாட்டிற்கோ வந்தமைக்கு வரலாற்றுச் சான்றுகளோ அல்லது வேறு இலக்கியச் சான்றுகளோ இல்லை என்பதும் இங்கு உணரத்தக்கது. கடல் சூழிலங்கை எனும் தொடரை, திருமங்கையாழ்வார் தான் முதன் முதலில் பயன்படுத்துகின்றார். (பெரிய திருமொழி 2 : 3 : 8)

மகாவம்சம் என்னும் இலங்கை வரலாற்று நூல் கி.பி. 6ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. காலப்போக்கில் நடைபெறும் வரலாற்று நிகழ்ச்சிகளை அவ்வப்போது வாழ்ந்த பௌத்தபிக்குகள் அந்நூலில் எழுதிச் சேர்த்தனர். எனவே சிலப்பதிகாரத்தில் பிரதி பேதமாக வந்துள்ள 'கயவாகு' வேந்தன் (முதல் கயவாகு என்பர்) உண்மையில் வஞ்சிக்கு வந்து பத்தினி விழாவில் கலந்து கொண்டிருந்தால், அச்செய்தி, அதற்குப் பின்னால் எழுதப்பட்ட மகாவம்சத்தில் இடம் பெற்றிருக்கும். ஆனால் அவ்வாறு அந்நூலில் இடம் பெறவில்லை என்பது கண்கூடு. எனவே இளங்கோவடிகள் 'கயவாகு வேந்தன்' என்றெழுதியிருக்கமாட்டார் 'காவல் வேந்தன்' என்றே எழுதியிருப்பார் என்பது உறுதிப்படுகிறது.

ஆனால் 16ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இராஜாவழி என்னும் இன்னொரு இலங்கை வரலாற்று நூலில் 2ஆம் கயவாகு தன் நாட்டில் பத்தினி வழிபாடு தொடங்கியது கூறப்பட்டிருப்பதனால். சிலப்பதிகாரத்தில் பிரதிபேதமாகக் காணப்படுகின்ற 'கயவாகு வேந்தன்' எனும் பெயர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த இரண்டாம் கயவாகுவின் காலத்திற்குப்பின் ஏடெழுதியவர்களால் புகுத்தப்பட்டதாகத்தான் இருந்திருக்க வேண்டும். எனவே 'காவல்' என்பதற்குப் பதிலாகக் காணப்படுகின்ற 'கயவாகு' என்னும் சொல் இரண்டாம் கயவாகுவின் ஆட்சிக்கால இறுதியிலோ, அல்லது அவனாட்சிக்குப் பிறகு அரசாண்டவர் காலத்திலோ வாழ்ந்த தமிழ்ப்புலவர் யாரோ ஒருவர் சிலப்பதிகாரத்தைப் படியெடுத்தபோது மாற்றி எழுதியிருக்க வேண்டும்.

இளங்கோவடிகள் முதலாம் இராசாதிராசன் காலத்தில்தான் சிலப்பதிகாரத்தை எழுதினார் என்பது உறுதிப்படுவதானல் அவரே இக் 'கயவாகு' என்னும் சொல்லை எழுதியிருப்பதற்கு வழியில்லை என்பதும் இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது. படியெடுத்தோரால் செய்யப்பட்ட இம்மாறுதலினால் சிலப்பதிகாரத்தைப் படிக்க நேர்ந்த இலங்கை வாழ் மக்கள் தங்கள் முன்னோன், சேர நாட்டில் செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குக் கோயில் எடுப்பித்து அவள் படிமத்தைப் பிரதிட்டை செய்தபோது உடன் இருந்தான் என்பதனையும், தங்கள் நாட்டகத்தும் அவன் கண்ணகி வழிபாட்டினைத் தொடங்கினான் என்பதையும் உண்மை என நம்பி, தாங்களும் அப்பத்தினி வழிபாட்டினைத் தொடங்கியிருக்கலாம்.

ஆகவேதான், சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் எழுதப்பெற்ற 'இராசாவழி' என்னும் இலங்கை வரலாற்று நூலில் 'பத்தினி' வழிபாடு பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.[9] சிலப்பதிகாரச் செங்குட்டுவனைப் பரணரால் பாடப்பெற்ற சங்ககாலக் கடல் பிறக் கோட்டிய வெல்கெழு குட்டுவனாகக் கொண்ட 19, 20, நூற்றாண்டுத் தமிழ்ப் பேரறிஞர்களும் ஏடெழுதுவோரால் புகுத்தப்பட்ட 'கயவாகு' என்னும் சொல்லைக் கொண்டு பரணர் காலத்துக் கயவாகு எனக் கொண்டு, சிலப்பதிகாரம் மிகப் பழமையான நூல் எனக் கொண்டனர்.

இலங்கை முதலாம் கயவாகுவின் காலம் கி.பி. 173 -95 என்பதால் செங்குட்டுவன் காலமும் அதேகாலம் எனக்கொண்ட பேரறிஞர்கள் அவன் காலத்தவரான சோழபாண்டிவரசர்கள் பற்றி மட்டும் முரண்பட்ட கருத்தினைத் தெரிவித்தனர். இதற்குக் காரணம் இவர்களுடைய பெயர்களை இளங்கோவடிகள் யாண்டும் நேரடியாகச் சுட்டவில்லை என்பதுதான். சுட்டிச் சென்ற ஒன்றிரண்டு இடமும் (கட்டுரை) இடைச்செருகல் என எண்ண வேண்டியதாக உள்ளது.[10] நம் ஊகப்படி கரிகால்வளவனையும், பெருங்கிள்ளியையும், ஆரியப்படை கடந்த நெடுங்செழியனையும், வெற்றிவேல் செழியனையும் இரண்டாம் நூற்றாண்டு மன்னர்கள் என எடுத்துக் கொள்ளும் சங்கப் பாடல்கள் அடிப்படையில் அவர்கள் காலங்கள் பெரிதும் முரண்படுகின்றன.

மேலும் 'நூற்றுவர்கன்னர்', குடகர், கொங்கர், ஆளுவவேந்தன் இவர்கள் இயற்பெயரைச் சுட்டிச் செல்லாத இளங்கோவடிகள் இலங்கை வேந்தன் பெயரைமட்டும் சுட்டிச் சென்றிருப்பாரா? என்ற ஐயம் ஒருவருக்கும் இதுவரை எழுந்ததாகத் தெரியவில்லை. வெற்றிவேற்செழியன், பெருங்கிள்ளி போன்ற பெயர்கள் சங்க இலக்கியங்களிலோ வரலாற்றிலோ காணக்கிடைக்காதவை. இவற்றையெல்லாம் வைத்துப் பார்க்கும்போது சிலப்பதிகாரத்தில் வரலாற்றுக் கூறுகளின் இன்மையும், இளங்கோவின் கற்பனைவளத்தின் உண்மையும் இன்ன அளவின என்பது புலப்படும்.

## குறிப்புகள்

1. 'கொடும் புரிசை நெடுங்கிடங்கிற் - கொடும்பாளூர்'' - நெடுஞ்சடையன் பராந்தகனின் (கி.பி. 762 - 790) வேள்விக்குடிச் செப்பேடுகள்: EPI. Ind. Vol. XVII. No. 16.

**''கொடும்பை மா நகர்நிறைந்த குரைகடற் பெருந்தானை**

**இடும்பை யுற்றரியத்த விரனோதய மேற்கொண்டும்''**

- மூன்றாம் இராசசிம்ம பாண்டியனின் சின்னமனூர்ச் செப்பேடுகள் (916 A.D), S. I. I. Vol. iii. 206)

2. **''கோவிந்தசந்தன் மாவிழிந்தோடத்**

**தாங்காத சாரல் வங்காள தேசமும்**

**தொடுகழற் சங்க கொட்டல் மகிபாலனை**

**வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித்தருளி''**

S. I. I. Vol. II, pt I. No.20. Line 7; Ins - No. 45106 1908; "The name 'Vangala' could not have come into Vague much earlier than (AD. 959) date' - History of Tamil language and Literature, page. 155, S. Vaiyapuri pillai.

3. **'வில்லவர் மீனவர் வேள் குல சளுக்கியர்**

**சிந்துர ரையணர் சிங்களர் பங்களர்'**

S. I. I. Vol. VI. No. 537; பி. சோ. ச. பக். 259. தி. வை. ச. பண்டாரத்தார்.

4. சிலம்பு: உ. வே. சா. பதிப்பு 1960, பக். 585 அடிக்குறிப்பு பிரதிபேதம் 2.

5. முதலில் குவளாலபுரம் ( கோலார்) என்னும் நகரைக் கோநகராகக் கொண்டு ஆண்டு வந்த கங்கர் (கொங்காணிவர்மன் என்ற அரசன் பெயரிலிருந்து கொங்கர் எனவும் அழைக்கப்படுவர்) அவனீதன் என்னும் அரசனுக்குப்பிறகு தலைக்காட்டைத் தலைநகராகக் கொண்டனர். - A History of South India, page. 109. K.A. Neelakanta Sastri.

6. குடகன், கொங்கன், ஆளுபன் என்பவர்களே இங்கு இளங்கோவால் குறிக்கப்படுகின்றவர்கள். ஆளுவ அரசனை மாளுவ அரசனாக்கி விட்டனர் உரையாசிரியர்கள். ஏழு எட்டு நூற்றாண்டுகளில் பிரபலராக இருந்த ஆளுவ அரசரையே இங்கு குறிப்பிடுகின்றார் என்பது இதுநாள் வரையிலும் தென்னிந்திய வரலாற்று ஆசிரியர்கட்கோ, துளுநாட்டு வரலாற்றாசிரியர்கட்கோ உணர்ந்துகொள்ள முடியவில்லை. கேரள வரலாற்றுப் பிரச்சனைகள்: பகுதி. iii, பக்கம். 17 - இளம்குளம் குஞ்சன்பிள்ளை, நேஷனல் புக் ஸ்டால், கோட்டயம்; It may be remembered that Silappadikaram is a later work as is evinced by the references it contains to the Alupas of the Tulu region and the palas of Bengal' - A Survey of kerala History, page 79, A. Sreedhara Menon, National Book Stall, Kottayam.

கொங்கரும் மாளுவ வேந்தரும் என்ற பகுதி குடகக் கொங்கரும் மாளுவ வேந்தரும் என்று பிரித்து மாளுவ வேந்தர் - மாளுவ நாட்டின் அரசர் என்றனர்.

M. ராகவையங்கார். 'மாள்வா' என்னும் நாட்டிற்கு மாளவம் என்றல்லாது 'மாளுவ' மென்றபெயர் இல்லை என்பது ஐயர் மறந்திருக்கலாம் (அந்நத்தேக் கேரளம் இளம் குளம் குஞ்சன்பிள்ளை P. 28.)

சிலப்பதிகாரத்தினின்றும் சரித்திரபரமாகக் கிடைக்கும் ஓர்சான்று காலநிர்ணயத்திற்குப் பெரிதும் உதவும் குடகக் கொங்கரும் மாளுவ வேந்தனும் என்ற பகுதியிலுள்ள மாளுவர் - ஆளுவர் உதயாவரம் தலைநகரமாகக் கொண்டு ஆண்ட ஆளுவ அரசர்களாவர். இவர் ஆறாம் நூற்றாண்டின் இறுதி தொட்டு பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை ஆட்சிபுரிந்தனர். N. P. P. 28.

7. பி. சோ. ச. பகுதி I. பக். 104. தி. வை. ச. பண்டாரத்தார்.

8. 'The Mahavamsa of the Sixth Century whose author is Mahavaman does not say anything either about the king is attendence during the Consecrating Ceremony at the Cera Capital or about his introducing Kannagi worship in his own country. It is only Rajavali a later chronicle of the Sixteenth Century connects kannagi worship with Gayabhahu and so this is not of any historical value and cannot be relied on" - History of Tamil Language and Lierature, page. 144. S. Vaiyapuri Pillai.

"The knowledge of Gayavahu myth has arrived, in public only between 10th to 13th Century A. D. It comes to the conclusion that the date of Cilappadikaram is only between tenth to thirteenth Century" - Gayabhahu and Gayabhahu syn chornism by Gananath obeyasekere, No. I. January 1970; சிலப்பதிகார, ஆய்வடங்கல், பக். 192, இரா. காசிராஜன், தமிழ்த்துறை, கேரளபல்கலைக் கழகம், திருவனந்தபுரம்.

9. ஆயின் இது உண்மையன்று என்பது தெரிகின்றது. இலங்கையில் 'பத்னி' வழிபாடு இருந்ததாக 'இராசவழி'யில் கூறியிருப்பது கண்ணகியாம் பத்தினித் தேவிக்கு வழிபாடு செய்ததையன்று என்பதும், சமணர், பௌத்தர் ஆகிய சமயத்தாரது பத்மாவதி (பட்டினி, பதைனி) தேவி, பிரஜ்ஞா பாரமிதா போன்ற பெண் தெய்வங்களின் வழிபாட்டினையேயாகும் என்பதும் தெளிவாகி இருக்கின்றது.

'இலங்கையின் இன்ன கோயிற்குரியதென்று அறியப்படாத ஐந்தாம் நூற்றாண்டு குப்தவரசர் காலத்துச் சிற்பவமைதியையுடைய கண்ணகியினுடையது என்று கருதப்படுகின்ற வெண்கலத் திருமேனி ஒன்று கி.பி 1830-ஆம் ஆண்டு இலங்கையிலிருந்து கொண்டு செல்லப்பட்டு பிரிட்டிஷ் மியூசியத்தில் இருக்கிறது. இலங்கையில் கயவாகுவால் பிரதிஷ்டிக்கப்பட்ட பத்தினியின் சரியான சாயலை இது காட்டுவது போலும்' எனக் கொண்டு, டாக்டர். ஆனந்த குமாரசுவாமி, மு. ராகவையங்கார் போன்றோர், செங்குட்டுவன் காலத்தை-சமுத்திர குப்தன் காலமான ஐந்தாம் நூற்றாண்டு என்றனர் (சேரன் செங்குட்டுவன், பக். 171-72, மு. ராகவையங்கார், முதற்பதிப்பு 1915) இதனை மறுத்து, செங்குட்டுவன் காலத்தை இரண்டாம் நூற்றாண்டுக்குக் கொண்டு செல்ல முயன்ற மயிலை சீனி. வேங்கடசாமி ( அவர், பௌத்த, சமண மதங்களைப் பற்றி அதிகாரப்பூர்வமாக எழுதும் வல்லமை பெற்றவர்) 'இலங்கையில் கிடைத்த இவ்வெண்கலத் திருமேனி இதுகாறும் கண்ணகியின் உருவம் என்று கருதப்பட்டு வந்தது. இப்போது, அவ்வுருவம், 'போதி சத்வ தாராதேவி' என்னும் பௌத்த தெய்வத்தின் உருவம் என்று கருதப்படுகின்றது என்கிறார் (சேரன் செங்குட்டுவன் பக். 59. குறிப்பு மயிலை 'சீனி' - வேங்கடசாமி, A. O. R. 06 Mds. Uty. Vol. XXI. Part I. 1966) எனவே மேற்கூறிய இரு ஆசிரியரின் கூற்றுக்களினின்றும் உண்மையொன்று புலப்படுகின்றது.

அது இலங்கையில் நடைபெற்ற பத்னிவழிபாடு அன்று என்பதும், 'பதைனி' - (பிராகிருதம்), பத்(மி)னி (வடமொழி), பட்டினி (கல்வெட்டு மொழி), பத்தினி (தமிழ்) என்ற சொற்களால் அறியப்படும் பௌத்த தெய்வமான தாராதேவி (சமணர் பத்மாவதி தேவி என்பர்) என்னும் தெய்வத்தின் வழிபாடே என்பதும் இலங்கையை ஆண்ட மன்னர்களில் யாருமே சேரன் வஞ்சிக்கு வரவில்லை என்பதும் இலங்கையில் கண்ணகிக்குக் கோவில் எடுத்து வழிபாடு செய்யவில்லை என்பதும் ஆகும்.

10. இலங்கை மன்னர்களில் யாருமே செங்குட்டுவன் தலைநகரத்திற்கு வந்தமைக்கு வரலாற்றுச் சான்றின்மையானும் இலங்கையினின்றும் கொண்டு செல்லப்பட்டு லண்டன் பொருட்காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கும் (பத்தினிச் சிலை) கண்ணகியினுடையதன்று தாராதேவியினுடையதே என்பது உறுதிப் பட்டிருப்பதனாலும், 'இராசவழி'யிலுள்ள 'பத்னி' வழிபாடும் பௌத்தர்களின் தாராதேவி வழிபாடே என்பதனாலும், சிலப்பதிகாரத்தின் இறுதியில் வரும் கட்டுரைகளும் இடைச் செருகல்களே, இளங்கோவடிகள் எழுதியவையல்ல வென்னும் கருத்து உண்மையாகின்றது

# 3. சிலப்பதிகாரத்தில் இயற்பெயர்கள்

தமிழில் எழுந்துள்ள பண்டை அகவிலக்கியங்களில் இயற்பெயர் சுட்டப் பெறுவதில்லை.

'மக்கள் சுட்டிய அகன் ஐந்திணையும்
சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்''

ஆயினும் வேறு சில கூறுகளாலும் நிகழ்ச்சிகளாலும், விளக்கங்களாலும் தலைவனை இன்னான் என இனங்கண்டு கொள்ளுதல் இயலுவதாகும். மதுரைக்கணக்காயர் மகனாரான நக்கீரனாரால் பாடப்பட்ட நெடுநல்வாடையில் அதன் பாட்டுடைத் தலைவன் பாண்டியன் என்று கூறப்படவில்லையானாலும்

''வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்ட''

என்ற அதன் வரிகளால் (176 - 7) நெடுநல்வாடையின் பாட்டுடைத்தலைவன் பாண்டியன் என்பதும், மாங்குடி மருதனாரால் மதுரைக் காஞ்சியில் பாடப்பெற்ற தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்தவர் நக்கீரனார் என்பதால் அவர் பாடிய நெடு நல்வாடையின் தலைவன் இப்பாண்டியன் நெடுஞ்செழியனே என்பதும் உய்த்துணரப்படும்.

ஆனால் காப்பியத்தைப் பொறுத்தமட்டிலும் இயற்பெயர்கள் சுட்டலாகாது என்ற விதிமுறையில்லை. எனவே காப்பியங்களில் இயற்பெயர் பயன்படுத்தப்பட்டு வந்தன. அதுவும், வரலாற்றுக் காப்பியம் என்றால் இயற்பெயர்கள் வந்தேதீரும். இதிகாசங்களான இராமாயண மகாபாரதங்களிலும் ஏராளமான பெயர்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

சிலப்பதிகாரம் ஓர் அழகிய காப்பியம்; அதிலும் அது முற்றிலும் ஓர் வரலாற்றுக் காப்பியம் என்பது தமிழ்ப் பேரறிஞர் பெரும்பாலாரின் கொள்கை. எனவே அக்காப்பியத்தில் வரலாற்றுத் தலைவர்களின் பெயர்கள் வந்திருக்கவேண்டும். ஆனால் உண்மையில் சிலப்பதிகாரத்தில் காண்பதென்ன? அக்காப்பியத்தில் வழங்கும் பெயர்களில் பெரும்பாலானவை பொதுப்பெயர்களே என்பதைத்தான் காண்கிறோம். கண்ணகி, கயவாகு, சாத்தனார், வயந்தமாலை, வெற்றிவேற் செழியன் போன்ற ஒரு சில பெயர்கள்

மட்டும்தான் இயற்பெயர்கள். மற்றவை காரணப் பெயராகவோ அல்லது மரபு அடிப்படையில் எழுந்த இளங்கோவின் கற்பனைப் பெயராகவோ அமைந்திருக்கின்றன. 'கண்ணகி' என்னும் பெயர் புறநானூறு போன்ற நூற்களில் காணக்கிடக்கின்றன. 'கயவாகு' இலங்கை வரலாற்று நூலான 'மகாவம்சத்தால் அறியக்கூடிய பெயர். 'வசந்தமாலை', தேவந்திகை' ஆகியவை வஸந்தமாலா, தேவந்திகா என்னும் வடமொழிப் பெயர்களின் தழுவல்கள். 'சாத்தனார்'-சங்க இலக்கியத்தில் பல புலவர்களுக்குப் பெயர் வந்திருக்கின்றது. வெற்றிவேற்செழியன் என்பதும் தொகை நிலைத் தொடர் மொழியாய் அமைந்த பெயராம்.

சிலம்பில் வஞ்சிக் காண்டத்தில் தலைவனான சேரனின் 'செங்குட்டுவன் என்னும் பெயர் வரலாற்றுப் பெயரன்று; பரணர் போன்ற புலவர்களால் சங்க இலக்கியங்களில் பாடப்பெற்ற வரலாற்றுச் சேரனின் பெயர், படுகடல் ஓட்டிய வெல் புகழ்க்குட்டுவன் (பதிற்றுப்பத்து: 46ஆம் செய். வரிகள் 12-13) என்பது 5ஆம் பத்தைப் பாடிய பரணர் அகம் 212 செய்யுளிலும் ஓங்கு திரைப் பௌவம் நீங்க ஓட்டிய மறப்போர்க் குட்டுவன் என்று கூறுகிறாரே யொழிய, யாண்டும் அக்குட்டுவனுக்குச் செங்குட்டுவன் என்ற பெயரைச் சூட்டவில்லை. இளங்கோவடிகள் தாம் தம் காப்பியத்தின் வஞ்சிக்காண்டத் தலைவனுக்குச் செங்குட்டுவன் என்று பெயர் சூட்டுகிறார். எனவே செங்குட்டுவன் என்ற பெயர் பரணர் காலத்துக் கடல்பிறக் கோட்டிய வெல்புகழ்க் குட்டுவனின் பெயர் அன்று என்பது பெறப்படும்.

'கோவலன்' என்றபெயர் தமிழ்ப் பெயரன்று. பிற்காலத்தில் வட மொழியினின்றும் தமிழுக்கு வந்தபெயர். அக்காரணத்தாலேயே அது சங்கச் செய்யுட்களில் காணப்படவில்லை. 'கோபாலன்' என்ற வடமொழிப் பெயரே தமிழில் கோவலன் என்று ஆகியிருக்கின்றது.[3] முல்லைப்பாட்டு.[4] நெடுநல்வாடை.[5] போன்ற நூல்களில் இச்சொல் பயிலப்பட்டாலும் அது இயற்பெயரைக் குறிக்காது தொழிலைச் சுட்ட நின்ற பெயர் என்பது உணரத்தக்கதாகும்.[6] காரணப் பெயராக இருந்த அச்சொல் பின்னர் இயற்பெயராக மாறியது கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்கும் சற்று முன்னரேயாம். எட்டாம் ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த திருமங்கையாழ்வார் கண்ணனைக் 'கோவலன்' என்று அழைப்பதனாலும், நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்துப் பிற செய்யுட்களாலும் அறிகின்றோம்.[7] எனவே கோபாலன் என்ற வடசொல்தான் கோவாலன் என்று மாறி இறுதியில் கோவலன் என்று ஆயிற்று. கோபியர்; கோவியர் என்று மாறியதும் இங்கு காண்க.[8] கோவலனைக் குறிக்க வந்த பொழுது இளங்கோவடிகள் கோபாலன் என்று கூறியிருப்பது இங்கு நோக்கத்தக்கது.[9]

செங்குட்டுவனுடைய காலத்தில் வாழ்ந்தவன் கரிகாலன் என்று நேரடியாகப் பொருள் கொள்ளும் முறையில் யாண்டும் கரிகாலன் பெயரை இளங்கோ எடுத்தாளவில்லை என்பதும் இங்கு உன்னுதற்குரியது. எனவே கரிகால் வளவனைப்பற்றிச் சிலம்பில் வரும் செய்திகளும் புனைந்துரையாகக்

கூறப்பட்டனவேயன்றி உண்மை நிகழ்ச்சிகள் ஆகா. இளங்கோவடிகள் சமணமதக் கோட்பாடுகளில் அதிக ஈடுபாடு உள்ளவர். அதிலும் யதிதர்மத்தை மேற்கொண்டொழுகியவர்.[10] அதனால் வாய்மையைத் தம் இலக்கியப் பணியிலும் முழுக்க முழுக்கக் கடைப்பிடித்திருப்பது அவரிலக்கியத்தை ஊன்றிப் படிக்கின்றவர்கட்குப் புலனாகாமற் போகாது.

சிலப்பதிகாரம் வரலாற்று உண்மைகளுக்கு மாற்றுருவம் கொடுத்து கற்பனைக் காவியம் என்பதை அவர் எப்போதும் மறந்தாரில்லை. அதனால், தம் நூல் முழுவதும் சங்ககாலச் சாயை பிரதிபலிக்கும் முறையில் அமைந்திருந்தாலும் சங்ககால வரலாற்றுத் தலைவர்களின் பெயர்களை அவர் நேரடியாக எங்கேயும் கூறிவிடவில்லை. அவ்வாறு அவர் செய்திருந்தால் வாய்மை தவறிய குற்றத்திற்கு ஆளாவாரன்றோ? எனவேதான், கரிகாலனின் வெற்றிப் பிரதாபங்களையும் குறுநில மன்னர் ஒன்பதின்மரையும் வென்ற செய்தியையுமெல்லாம் தம் நூலில் வரும் சோழ மன்னனின் செயலாகப் புனைந்துரைத்த போதும் கரிகாலனின் பெயரைக் கூறவில்லை. கரிகால் வளவன் மகள் (2: 21: 11) சூழ் கழல் மன்னற்குக் காட்டல் வேண்டி (1: 3: 10 - 1)என்ற இரண்டிடங்களிலும் நேர்முகமாகவும், குறிப்பாகவும் கரிகாலனைக் குறிப்பிட்டாரெனினும், கதையோடு தொடர்பு படுத்திய நிலையில் கரிகாலனின் பெயரை அவர் பயன்படுத்தவில்லை என்பது உணர்தற்குரியது. எனவே மாதவிக்குத் தலைக்கோல் தானம் கொடுத்த சோழன், கரிகாலன் என்று கூறுவது உரையாசிரியர் கூற்றேயாகும். இளங்கோ அவ்வாறு கூறவில்லை.

**''விண்பொரு பெரும்புகழ் கரிகால் வளவன்**
**தண்பதங் கொள்ளும் தலைநாள் போல** (சிலம்பு 1: 6: 159 - 60)
**''வரியா ரகலல்குல் மாதருரை சான்ற**
**மன்னன் கரிகால் வளவன் மகள் வஞ்சிக் கோன்**
**தன்னைப் புனல் கொள்ளத் தான் புனலின் பின் சென்று**
(சிலம்பு. 2: 21: 10 - 12)

என்ற இரு இடங்களிலும் கரிகால் வளவனின் பெயர் கூறப்பட்டுள்ள தெனினும் அங்கேயும் இறந்தகால நிகழ்சிகளைக் கூறுமுகத்தான் அவன் பெயர் எடுத்துரைக்கப்பட்டதே யொழிய, நிகழ்கால, கதையோடு ஒட்டிய தொடர்புடைய நிகழ்ச்சியாகக் கூறப்படவில்லை என்பது இங்கு உணர்தற்குரியதாம்.

'கயவாகு', 'கண்ணகி' என்ற இரு பெயர்களும் இயற்பெயர்களே. கயவாகு என்னும் பெயரில் இருவர் இலங்கையை ஆண்டிருக்கின்றனர். ஒருவன் கி.பி 2ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். இன்னொருவன் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இருந்தவன். 2ஆம் கயவாகு இளங்கோவடிகட்குக் காலத்தாற் பிற்பட்டவன். இளங்கோவடிகள் காலத்தில் - முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் இலங்கை மன்னனான 5ஆம் மகிந்தன் சோழர் படையினால்

முறியடிக்கப்பட்டு, சூழ்ச்சியினால் சோழ நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டு, அங்குக் கைதியாகப் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்து, கி.பி. 1029ஆம் ஆண்டில் இறந்துபட்டான் என்ற செய்தி வரலாற்றால் அறியக் கூடியதொன்றாகும். அவர் சோழநாட்டில் எங்கு அரசியல் கைதியாக வாழ்ந்தார் என்பது வரலாற்றில் குறிக்கப்படவில்லை யெனினும், சிலப்பதிகாரம் கொண்டு, அவ்விலங்கையரசன் வஞ்சியில்தான் (சோழ நாட்டுக் கரூர் என்னும் வஞ்சி) தன் இறுதி வாழ்நாளைக் கழித்திருக்கவேண்டும் என்பது உய்த்துணரப்படுகின்றது. எனவேதான், தன் காப்பியத்தில் கண்ணகிப் பிரதிட்டையின்போது கடல் சூழிலங்கைக் காவல் வேந்தனும் இருந்தனன் என்று அடிகள் எழுதுவாராயினர். உண்மையில் 5ஆம் மகிந்தன் சோழ நாட்டு வஞ்சி (கரூர்)யில் இருந்த காரணத்தினால் கண்ணகிக்கு எடுத்த பெருவிழாவின்போது இலங்கைக் காவல் வேந்தன் இருந்தான் என்று எழுதுகின்ற அடிகளார் பொய் கூறிய பாவத்திற்கு ஆளாகாமலிருக்கும் நிலைநினைத்து மகிழ்தற்குரியதொன்று.

கோவலன் - கண்ணகி பெற்றோர்கள் பெயர்களும் இத்தகையனவே. பெற்றோர்களுள்ளும் அன்னையர் இருவரது பெயர்களையும் வசதியாக விட்டுவிட்டார். தந்தையர் பெயர்களையே கூறியுள்ளார். மாசாத்துவன் 'மாநாய்க்கன்' போன்ற பெயர்கள் இயற்பெயர்களன்று. பொதுப் பெயர்களேயாம். அவை வாணிகத் தொழிலின் அடிப்படையாக எழுந்த பெயர்கள். சோழர் ஆட்சிக்காலத்தில் சோழநாட்டு வணிகர்கள் கடல்கடந்து சென்று வாணிகத்தைப் பெருக்கினர். எனவே சோழர்கள் அத்தகைய வணிகப் பெருமக்களுக்குப் பட்டங்கள் தந்தும் பரிசுகளீந்தும் பெருமையளித்தனர். 'அஞ்சுவண்ணம்', 'மணிக்கிராமம்', 'நகரத்தார்' 'வளஞ்சியர்' என்று வணிகர்களிடையே குழுக்கள் பல இருந்தன.

சோழர் ஆட்சியில் பெரும்பாடிக் காவல், சிறுபாடிக்காவல் ஆகிய அதிகாரிகளின் உதவியினால் வணிகர்கட்கு எதிரிகளிடமிருந்து எத்தகைய இன்னல்களும் ஏற்படவில்லை. வணிகர்கள் புறநாடுகளுக்குச் செல்லுங்கால் கூட்டமாகச் செல்வது வழக்கம். அக்கூட்டத்திற்கு 'வணிகச் சாத்து' என்று பெயர் வழங்கியது. அக்குழுவின் தலைவன் 'சாத்தன்' எனவும் 'மாசாத்துவன்' எனவும் கூறப்படுவான். வணிகர்களுள் சிறந்தோர்க்குச் சோழமன்னர்கள் 'எட்டி' என்றபட்டம் அளித்துப் பாராட்டினமையும் உணரற் பாலதாம். 'எட்டிசாயலோன் இருந்தோன்றனது, பட்டினி நோன்பிகள் பலர் புகுமனையில் (சிலம்பு. 2: 15: 163 - 4) என்பதையும் காண்க. சங்க இலக்கியங்களில் ஏனாதிப் பட்டமும், காவிதிப் பட்டமும் குறிக்கப்படுகின்றதே தவிர, எட்டிப்பட்டம் குறிக்கப்படவில்லை. எனவே இப்பட்டம் மிகப்பிற்காலத்தது என்பது வெளிப்படை. விக்கிரம சோழனின் (1118 -1136) (1127) 9-வது எயில் கோட்டத்து எயில் நாட்டு திருவத்தியூர் ஆழ்வார் கல்வெட்டில் எட்டித் தலை வழியாகச் சென்று வாணிபம் நடத்தியதைப் போன்று, பலகலஞ்

செலுத்திப் பெருங்கடல்களையும் கடந்து பிற நாடுகளோடும் வாணிகஞ் செய்து கொண்டிருந்த வணிகர்கள் தலைவர் 'நாயகர்' எனவும், மாநாய்க்கர் எனவும் கூறப்பட்டனர். தரைவழியாகவும் கடல்வழியாகவும் பண்டைக் காலந்தொட்டே தமிழகத்தில் வியாபாரம் நடைபெற்று வந்தது எனினும், அது பல்லவர் காலத்தில்தான் ஓரளவு வளர்ச்சி பெற்றது. ஆனாலும் சோழன் முதலாம் இராசராசன் காலத்திலும் அவன் மகன் முதலாம் இராசேந்திரன் ஆட்சியிலும் கடல் கடந்த நாடுகளோடுள்ள வாணிபம் நன்முறையில் இருந்தது என வரலாறு கூறுகின்றது. எனவே இளங்கோவடிகள் காலத்திற்கு ஒன்றிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாணிக வளர்ச்சிக்காக அயராது உழைத்த வணிகர் தலைவர்கட்குக் கொடுக்கப்பட்டிருந்த 'எட்டி', 'மாசாத்துவன்', 'மாநாய்கன்' ஆகிய பட்டப் பெயர்களில் பின்னுள்ள இரண்டனையுமே கோவலன் - கண்ணகி தந்தையர்கட்கு முறையே இளங்கோவடிகள் வைத்தார் என்பது தெளிவாகவில்லையா?

## வடமொழிப் பெயர்கள்

இனி மாதவி, சித்ராபதி, வசந்தமாலை ஆகிய பெயர்களும் வடமொழிப்பெயர்களே. 'மாதவி' என்னும் பெயரும், பண்டைத் தமிழிலக்கியங்களில் பயிலப்படாமல், தென்னகத்தில் ஆரியர் ஆதிக்கத்திற்குப்பின் வழக்கிற்கு வந்த சொல்லேயாகும். மாதவன் என்பது கண்ணனைக் குறிக்கும். கண்ணனின் தங்கை சுபத்திரை, மாதவி என அழைக்கப்பட்டாள். மாதவி மாதவனின் பெண்பால். பெருந்தேவனார் பாரதத்தில் கண்ணனின் தங்கை சுபத்திரையை 'மாதவி' என்னும் பெயரால் குறிப்பிடுவர். இது இன்னும் பொருத்தமாகப்படுகிறது. ஏன் எனில் மூன்றாம் நந்திவர்மன் காலத்தில் பாரதம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுப் பரவிய பின் பாத்திரங்களின் பெயர்களை மக்களும் இடலாயினர். அக்கால உயர்குடிப் பெண்கள் பெயருக்குப் பின்னால் சேர்த்துக்கொள்ளும் 'மகாதேவி' என்னும் சொல்குறுகி 'மாதவி' ஆயிற்று எனலாம் (கோபாலன் - கோவாலன் - கோவலன் என்றானதும் காண்க). மாதேவடிகள், மாதேவி (மகாதேவரடிகள், மகாதேவி என்பனவற்றின் சுருக்கங்கள்) ஆகிய பெயர்களை அரச குடும்பத்துப் பெண்களின் இயற்பெயரோடு அடையாகச் சேர்த்துக் கொள்ளும் வழக்கம் என்பது 10 - 14 நூற்றாண்டுகளில் பரவலாக இருந்தது கல்வெட்டுக்களால் அறியலாம்.

எனவே இளங்கோவடிகள் காலத்தில் பெண்கள் இயற்பெயருக்கு முன்னாலும் பின்னாலும் சேர்த்துக் கொள்ளப்படும் பெருமைக்குரிய சொல்லான ''மாதேவி'' என்னும் சொல்லைச் சுருக்கித்தான் சிலப்பதிகாரத்தில் தாம் படைத்த ஒரு பாத்திரத்திற்குப் பெயராகச் சூட்டினார் என்பது தெளிவுபடுகின்றது. 'மாதேவி' என்னும் சொல் இயற்பெயராகவும் வழங்கி வந்திருக்கின்றது என்பதும் வரலாற்றில் அறியலாகும் செய்தியாகும்.[15]

**சமணப்பெயர்கள்**

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் புகுத்தியுள்ள சமணப் பெண்பால் துறவியின் பெயரும் இயற்பெயரன்று. பொதுப்பெயரேயாம். எனவே கவுந்தியடிகள் என்பது அன்னாரின் இயற்பெயரன்று என்பதை உணர்தல் வேண்டும். சமண மதத்தைச் சார்ந்த பெண்பாற்றுறவிகளை, கந்தி, அவ்வை, அம்மை, கன்னி, கவுந்தி என்னும் சொற்களால் சுட்டினர். 'நந்தியே பிண்டிவாமன் நன்னெறி வாழாது நோற்பாள், நந்தியே அவ்வை அம்மைகன்னியே கௌந்தி என்ப'' என்று சூடாமணி நிகண்டு கூறுகின்றது.

பிங்கலநிகண்டு மைம்மையும் கௌந்தியும் அருந்தவப் பெண் பெயர், என்றும், திவாகர நிகண்டு, மைம்மையும் கௌந்தியும் அருந்தவப் பெண் பெயர் எனவும் கூறுகின்றது.

மைசூரில் சமணர் திருப்பதிகளுள் ஒன்றான ''சிரவண பெள்கொள'' என்னுமிடத்தில் சமணர் சார்பான சாசனங்கள் பல உள்ளன. அவற்றில் சமண மதத்தைச் சார்ந்த பெண்பாற் துறவிகளின் பெயர்கள் காணப்படுகின்றன. 'நாகமதி கந்தியார்', 'சசிமதிகந்தியார்', நவிலூர் சங்கம் ஆஜிகணத்தைச் சேர்ந்த 'ராஜ்ஜிமதி கந்தியார்', 'ஆனந்தமதி கந்தியார்', ஸ்ரீ மதி கந்தியார், மாங்கப்பை கந்தியார் என்பவை அவை.[15]

மேற்கூறிய எடுத்துக் காட்டுகளினின்றும் 'கந்தி' அல்லது கௌந்தி என்னும் பெயர் இயற்பெயரோடு சேர்ந்தே வழங்கி வந்தது என்பது தெரிகின்றது 'மைம்மை' என்ற சொல்லும் சமணப் பெண்டிரின் இயற்பெயருக்கு முன்னால் 20-வது ஆண்டு (கி.பி. 1024)க் கல்வெட்டு கொண்டு அறியலாம். ''பெரும்பாணப் பாடி கரை வழி மல்லியூர் இருக்கும் வியாபாரி நந்தம் பயன் மணவாட்டி சாமுண்டப்பை வைத்திருந்த நந்தா விளக்கு ஒன்று'' (S. I. I. Vol. I No.67 வரி 13 - 14) என்பது கல்வெட்டுப் பகுதி.

ஆயின் இளங்கோவின் படைப்பான சமணப் பெண்துறவி, சிலப்பதிகாரம் முழுமையும் 'கவுந்திஅடிகள்' என்ற பொதுப்பெயரால் அழைக்கப்படுகிறாரேயன்றி இயற்பெயர் சுட்டி அழைக்கப்படவில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது.

இனி குரத்தி என்னும் சொல்லும் சமணசமயப் பெண்பால் துறவியைக் குறிக்கின்றது. 'குரத்தி' என்னும் சொல் 'குரவர்' அல்லது 'குரு' என்னும் சொல்லின் பெண்பால். பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், சாசனங்கள் முதலியவற்றால் 'குரத்தி' என்னும் சொல்வழங்கப்பட்டுள்ளது.

'சாமிக்குரத்தி பெருமாட்டி ஆசாள் தலைவி ஐயை, நாமங்கவுந்தியும் பைம்மையும் ஆருகதத்துத் தவப்பெண்'' என்பது கயாதர நிகண்டு சாசனங்களிலும் ஸ்ரீ மிழலூர்க் குரத்தியார், சிறிவிசையக் குரத்தியார், நாங்கூர் குரத்திகள் இளநெச்சுரத்துக் குரத்திகள், கூடற் குரத்தியார் முதலிய பெயர்களைக் காணலாம்.

''பட்டினிக் குரத்திகள்'' என்ற பெயருடைய சமணத் துறவியைப்பற்றி வடஆர்க்காடு மாவட்டம் வாலாஜாப்பேட்டைத் தாலூக்காவிலுள்ள கல்வெட்டொன்று நவில்கின்றது.[17] பதைனி எனும் பிரா கிருதசன சொல் தமிழில் பட்டினியாகும்.

ஆர்யாங்கனைகள் என்னும் கௌந்திகள் என்றும் குரத்திகள் என்றும் கூறப்பட்ட சமண சமயப் பெண்பால் துறவிகள் தலையை மழித்து வெள்ளை ஆடை அணிந்திருந்தனர்.[18]

சிலம்பில் குரவன் என்னும் சொல் கோவலன் - கண்ணகி பெற்றோர்களையும் கவுந்தியடிகளையும் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது.

''இரு பெருங்குரவரும் ஒரு பெரு நாளான் (1 - 10 - 183)
குரவரும் நேர்ந்த கொள்கைமி னமர்ந்து (2 - 13 - 14)
குரவர் பணியன்றியும் குலப்பிறப்பாட்டியொடு (2 - 15 - 89)
மாசில் குரவர் மலரடி தொழுதேன் (2 - 13 - 98)

சமணப் பெண்பால்துறவியைக் குறிக்கவந்த சொல் (குரத்தி) என்றிருக்க வேண்டும். ஆனாலும் இளங்கோவடிகள் உயர்வு குறித்து குரவர் என்றே பயன்படுத்தினார் என்பது நோக்கத்தக்கது.

## வேண்மாள்?

இனிச் செங்குட்டுவனின் மனைவியைப் பற்றி இரண்டிடங்களில் குறிப்பு வருகின்றது (3: 25: 5; 3: 28: 51) ''இளங்கோ வேண்மாள் என்றும், 'வேண்மாள்' என்றும் கூறப்படுகின்றாள். எனினும் இவை இயற்பெயர் அல்லவெனக் காணலாம். 'இளங்கோ வேண்மாள்' என்பதில் வரும் 'இளங்கோ' என்னும் சொல் செங்குட்டுவனின் இளவலையே குறிக்கும் என்பர் அரும்பதவுரையாசிரியர். 'வேண்மாள்' என்பது வேண்மானின் பெண்பால் ஆகுமேயன்றி இயற்பெயர் ஆகா: (நன்னன் வேண்மான் 19) 'இருங்கோ வேண்மான்'20 என்று இயற்பெயரடுத்து வருமேயன்றித் தனித்து நின்று ஒருவரைச் சுட்டாது. பதிற்றுப்பத்து இரண்டாம்பத்துப் பதிகத்தில் (இப்பதிகங்கள் இளங்கோவடிகள் காலத்தில் எழுதப்பட்டவை) ''இன்னிசை முரசின் உதியஞ்சேரற்கு, வெளியன் வேண்மாள் நல்லினியீன்ற மகன்'' என்ற இடத்தில் நல்லினி என்பது இயற்பெயராகவும் 'வேண்மாள்' அடைமொழியாகவும் இருத்தலைக் காணலாம்.

9ஆம் பத்துப் பதிகத்திலும் (குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழா அன், வேண்மாளந்துவஞ் செள்ளை ஈன்ற மகன்' என்ற இடத்திலும் இயற்பெயராகிய செள்ளைக்கு முன்னால் 'வேண்மாள்' என்னும் சொல் அடையாக வருகின்றதே யொழிய அச்சொல் தனித்து நின்று ஒருவரைச் சுட்டவில்லை என்பது கண்கூடு. எனவே இளங்கோவடிகள் செங்குட்டுவன்

மனைவியைக் குறிப்பிடுகின்ற நேரத்திலும் இயற்பெயரன்றிப் பொதுப் பெயரால் சுட்டிச் செல்கிறார் என்பது தெளிவாகின்றது.

### வில்லவன்கோதை

'வில்லவன் கோதை' என்னும் பெயர் இளங்கோவடிகள் சேரன் செங்குட்டுவனின் அமைச்சனுக்குத் தந்தபெயர். முதற்பார்வையில் அச்சொல் இயற்பெயராகத் தோன்றினாலும் ஆராய்ந்து பார்த்தால் அது அவ்வாறு அன்று என்பது புலப்படும். சேரர்களைக் குறிக்க வில்லவன் கோதை, பொறையன், குட்டுவன் போன்ற சொற்கள் உள்ளன என்று திவாகர நிகண்டு கூறும் (மக்கட்பெயர் தொகுதி). எனவே சேரனைக் குறிக்க வந்த இருபெயர்கள் சேர்ந்து இயற்பெயராதல் விந்தையேயாம். இதினின்றும் இயற்பெயர் ஒன்றனை இளங்கோவடிகள் இவ்வாறு திரித்துக் கூறியிருத்தல் வேண்டும் என்பது புலப்படும்.

இளங்கோவடிகள் காலத்திலோ அல்லது அதற்கும் சற்று முன்னரோ இருந்த மன்னர் அல்லது குறுநில மன்னர் ஒருவர் பெயரையே இவ்வாறு இளங்கோவடிகள் செங்குட்டுவனின் அமைச்சன் பெயராகக் கூறியிருத்தல் வேண்டும். அவ்வாறு பார்க்கின்ற வேளை, சேரமன்னன் முதலாம் பாற்கர ரவிவர்மன் (கி.பி 962 - 1019) காலத்தில் அவனுக்கடங்கிய சாமந்தனாக வேணாட்டினை ஆண்டு வந்தவன் வல்லபன் கோதை என்பவன். அவன் சிறந்த வள்ளலாகவும் இருந்தான் என்பதை அவன் செப்பேட்டுச் சாசனம் ஒன்று கூறுகின்றது.[21] எனவே அவ்வல்லபங் கோதையை மனதிற்கொண்டே சேர மன்னன் அமைச்சனுக்கு 'வில்லவன் கோதை' என்று பெயரிட்டார் எனல் எவ்வாற்றானும் பொருந்துவதாகும்.

### அழும்பில் வேள்

அழும்பில் வேள் என்பதும் அத்தகையதே. இவ்வழும்பில்வேள் பாண்டி நாட்டிலுள்ளதோர் ஊர் என்கிறார் அகநானூற்று உரைக்காரர்.[22] ஆயினும் பெரும்பூட் சென்னியின் ஊர் என்று பாடல் கூறுவதனால், அவ்வூர் சோழ நாட்டிலுள்ளது எனக் கொள்வதில் தவறில்லை. மதுரைக் காஞ்சியிலும் அழும்பில் என்னும் ஊர் குறிக்கப்பட்டுள்ளது. ஆயின் அதன் தலைவன் ஓர் வேளிர் குலத்தவன் என்றும் அவன் பெயர் மானவிரல் வேள் என்றும் அப்பாட்டு மிகத் தெளிவாக எடுத்துரைக்கின்றது.[23] ஆனால் இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் வரும் அழும்பில் வேளின் இயற்பெயர் எங்கும் குறித்துச் செல்லவில்லை என்பது கவனித்தற்குரியது. மேலும், சோழ நாட்டின் கண்ணுள்ளதான ஓர் ஊரின் வேளிர் தலைவன், சேரநாட்டு வஞ்சி மூதூருக்கு வந்த காரணம் புலப்படுத்தப்படவில்லை என்பதும் இங்கு நோக்கத்தக்கது.

### மற்றும்சில பெயர்கள்

கோசிகமாணி, மாடலமறையோன் என்ற பெயர்களும் நம் ஆராய்ச்சிக்குரியன. கௌசிகன், கோசிகன் என்னும் பெயர்கள் சங்க

காலத்திலும் இருந்தன எனினும், அந்தணப்பிரம்மச்சாரியைக் குறிக்கும் 'மாணி' என்னும் சொல் மிகப் பிற்காலத்தது, கி.பி. 7ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது என்பது அறியத்தக்கது.[24] இனி கௌசிகன் என்பதை அந்தணர் குடி (கோத்திர)ப் பெயர் எனக் கொண்டாலும் அக்கோத்திரப் பிரிவுகளும், இலக்கியங்கள், கல்வெட்டுகள் ஆகியவற்றில் காணத் தொடங்குவது 8ஆம் நூற்றாண்டிற்கும் பின்னர் தாம் என்பது வரலாற்றினால் அறியலாகும் செய்தியாகும். பல்லவப் பேரரசர்கள் தங்களைப் பாரத்துவச கோத்திரத்தவர் என்று கூறுவதை அவர்கள் கல்வெட்டொன்று தெரிவிக்கின்றனது.[25]

வணிகர்கள் 'சிறந்தவன்' என்னும் பொருளில் சிரேஷ்டன் என்று அழைப்பது 7 அல்லது 8ஆம் நூற்றாண்டு வழக்கம். அதுபோன்றதே சிரேஷ்டி என்னும் சொல்லும். இவை முறையே சிரேட்டன், சேடன் என்றும் சிரேட்டி (சே) செட்டி என்றும் தமிழில் வழங்கும். சிலப்பதிகாரத்தில் வரும் அரட்டன்செட்டி என்னும் பெயரிலுள்ள செட்டி என்னும் சொல் மிகப் பிற்காலத்ததே அது முன்சொன்ன சிரேஷ்டி என்னும் சொல்லின் திரிபேயாகும். அரட்டன் என்ற சொல்லும் சமணர் செல்வாக்குப் பெற்ற காலத்தில் எழுந்தசொல்லாகும். அரட்ட நேமி படாரர் என்ற பெயரையும் காண்க அன்றியும் ராஷ்ட்ரன் என்ற சொல்லின் திரிபு எனக் கொள்ளினும் அமையும் திருதராஷ்ட்ரன் - திருதராட்டிரன், ராஷ்ட்ரன் ரட்டன் அரட்டன் - அரிட்டன் எனவும் வழங்கும். ரங்கன் - அரங்கன் என்று இரங்கன் என்றும் ரத்நம் - அரதனம் - இரத்தினம் என்றும் வருவது போல ராஷ்ட்ரன் அரட்டன் ஆயிற்று. இதனாலேயே ராஷ்டிரகூடர்களின் நாடு தமிழில் இரட்டபாடி என அழைக்கப்படலாயிற்று. இராசராசனின் மெய்கீர்த்தியும் இதனையே வலியுறுத்தும். "இரட்டபாடி ஏழரை இலக்கமும் (Ins. 261 -06 -1910) எனவே அரட்டன் செட்டி போன்ற பெயர்கள் சங்ககாலமளவு பழமையானவை யல்ல என்பது பெறப்படும்.

இச்சாதிப் பிரிவினை ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னர் உள்ள சோழர், சேர மன்னர்களின் கல்வெட்டுகளில் காணலாகும். சேரமான் கோக்கோதை ரவியின் (கி.பி 914 - 944) பதினைந்தாம் ஆட்சி ஆண்டில் சோக்கூர் கோயிலில் அவர் வெட்டியுள்ள கல்வெட்டில்தான் தேவதாசியரைப் பற்றியும் செட்டிகளைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.[26]

மாடல மறையோனைப் பற்றிச் சிலம்பிற் பல இடங்களிலும் வருகின்றது. எனினும் மாடலன் என்பதும் இயற்பெயராகத் தோன்றவில்லை. தொழில் காரணமாக எழுந்த பெயராயிருத்தல் வேண்டும். புறம் - 197ஆம் பாடலைப் பாடியவர் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் என்பவர். எனவே மேற்கூறிய பெயரினின்றும் மாடலன் என்ற சொல் இயற்பெயரைச் சுட்டாது, ஏதோ தொழில் காரணமாகக் கொடுக்கப்பட்ட பெயராக இருக்கலாம் எனக் கொள்ளலாம். மௌச் சுலாயன கோத்திரத்தைச் சேர்ந்தவன் மாடலன்; எனவே பிராமணன் என்பது தெளிவு.

சாக்கையன் என்ற பெயரும் சாதிப் பெயரேயன்றி இயற்பெயரன்று. அதுவும் கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்குப் பிறகுதான் அச்சாதியார் கூத்தாடும் தொழிலை மேற்கொண்டாரென எண்ணவேண்டியதாயுள்ளது. ஏனெனின் திவாகரர் காலத்தில் சாக்கையர் என்ற இனத்தவர் மன்னர்க்கு உள்படு கருமத் தலைவராக இருந்தனர் என அந்நிகண்டு கூறுகின்றது.

'வள்ளுவன் சாக்கையெனும் பெயர் மன்னர்க்கு, உள்படு கருமத்தலைவர்க் கொன்றும்' என்பது அப்பகுதி (திவாகரம் 11, 28 தொகுதி).

பிற்காலச் சோழர் காலத்தில் சாக்கையன் கூத்தாடுவதைப் பார்க்கின்றோம்.

இவ்வாறாகச் சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்ற பெயர்களில் பெரும்பாலானவையும் இயற்பெயர்களன்று என்பதனை அறியலாம். அவை பொதுப்பெயராகவோ அன்றிக் காரணப் பெயராகவோ இருக்கின்றன. எனவே, இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் இயற்பெயர்களைப் பயிலாமல் இருந்ததற்குக் காரணம் ஏதேனும் இருந்திருக்க வேண்டுமல்லவா? தாம் சிலப்பதிகாரத்தைக் கற்பனைக் கதையாக எழுதினமையினாலேயே அதில் அக்காலத்து இயற்பெயர்களைச் சுட்டாமல் சென்றார் என்பதுதான் உண்மை. இதற்கு அவரது காப்பியமே சிறந்த சான்று.

## குறிப்புகள்

1. புறநானூறு, செய். 143 - 147.

2. பதிற்றுப்பத்தில் அடுபோர்க் குட்டுவன் (செய். 42), பொலந்தார்க் குட்டுவன் (செய். 43), பெருஞ்சினக் குட்டுவன் (செய். 43) என்றும், அகம் 212இல் மறப்போர்க்குட்டுவன்' என்றும் பரணர் தம் தலைவனை விளிக்க, பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்துப்பதிகத்தில் மட்டும் 'செங்குட்டுவன்' என்று காணப்படுவது, இளங்கோவடிகள் காலத்தில்தான் பதிற்றுப்பத்துப் பதிகங்கள் எழுதப்பட்டன என்ற கொள்கையை உறுதி செய்கின்றது.

3. கோபாலன் என்ற வடசொல்லுக்கு ஆநிரையைக் காப்பாற்றுகின்றவன் என்பது பொருள். அது சிறப்பாக, கண்ணனையே குறிக்கும். கோபாலன் தமிழில் கோவாலன் ஆகிப், பின்னர் 'கோவலன்' எனக் குறைந்தது. வேறு சிலர் கூறுவது போன்று - ஆநிரைகளைக் காப்பதில் வல்லவன்' என்பது பொருளன்று. கோவலன் எனும் சொல் கோபாலன் என்னும் பெயரோடு ஒத்த பொருளுடையது. மதுரையில் கோவலனைக் கண்ட மாடல மறையோன் அவனைக் கோபாலன் என அழைக்கிறான். பரிபாடல் 'கோவல' எனத் திருமாலைப் பரவுகின்றதும், "காவலனா யாநிரைகள் மேய்த்துக் குழலூதி (3ஆம் ஆயிரம் இயற்பா, 3-ம், திருவந்தாதி செய். 42 அடி. 1, பேயாழ்வார்); குழற்கோவலர் (நம்மாழ்வார் 3ஆம் ஆயிரம் இயற்பா திருவிருத்தம் செய். 3. அடி. 1); எனவே கோவலன் பிறந்தகாலத்து, அவனுடைய பெற்றோர்கள் திருமால் வழிபாட்டில் பற்றுடையவர்களாயிருந்தனர் என்பது பெறப்படுகின்றது. வெள்ளைவாரணர் 'இளங்கோவடிகள் காலத்து சமயநிலை_பக். 122.

4. ''கொடுங்கோல் கோவலர் பின்னின்றுய்த்தர' - அடி. 15.

5. 'ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்'' - அடி. 3.

6. முல்லைப்பாட்டு அடி. 13. நெடுநல்வாடை அடி. 3.

7. ''கன்று மேய்த்து விளையாடும் கோவலன் வரிற்
கூடிடு கூடலே''

- நாச்சியார் திருமொழி, 4ஆம் திருமொழி

''குற்ற மொன்றில்லாத கோவலர் தம் பொற்கொடியே''

- திருப்பாவை, செய். 11

வண்டார் பூங்குழல் ஆய்ச்சி மகனாகக் கொண்டு
வளர்க்கின்ற கோவலக் குட்டற்கு''

- பெரியாழ்வார், இரண்டாம் திருமொழி சீதக்கடல்

''கோவலர் சிறுமியர்'' – பெரியாழ்வார் திருமொழி, மூன்றாம் பத்து, ஆறாம் திருமொழி

மூன்றாம் பத்து, ஆறாம் திருமொழி

''கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா கோவலரிந்திரற்குக்
காட்டிய சோறுங் கறியுந்தயிருங் கலந் துடனுண்டாய் போலும்''

– மூன்றாம்பத்து மூன்றாம் திருமொழி

''கோயில் கொண்ட கோவலனைக் கொழுங்குளிர் முகில்வண்ணனை''

- பெரியாழ்வார் திருமொழி. ஐந்தாம் பத்து, நான்காந்திருமொழி.

''கொங்கலர்ந்த மலர் குருந்த மொசித்த கோவலன் எம்பிரான்''

-பெரிய திருமொழி, முதற்பத்து, எட்டாம் திருமொழி
திருமங்கை யாழ்வார்.

''கோளியார் கோவலனார் குடக்கூத்தனார்''

- நம்மாழ்வார் திருவாய்மொழி. நான்காம் பத்து இரண்டாந் திருமொழி.

8. ''குருந்தமொசித்ததவுங் கொற்றத் திருத்தோளால்
வந்த விடையேழு மாய்த்துவும் – முந்துறக்
கோவிய மாதர்க்கே யுள்ளங் குறைக்கிடந்த''

- குலோத்துங்க சோழனுலா அடிகள் 739 - 4 ஒட்டக்கூத்தர்.

9. ''திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்த கோபாலா நீயென வினவ'' - சிலம்பு. 15 : 93 - 4.

10. சமணத் துறவிகள் மேற்கொண்டொழுக வேண்டிய ஒழுக்கங்கள் இருபத்தெட்டென்பர். இவற்றுள் மூலகுணங்கள் ஐந்து எனப்படும். அவையாவன:

1. அகிம்சை, 2. வாய்மை, 3. கள்ளாமை, 4. துறவு, 5. அவாவுறுதல் என்பனவாம். இவ்வைந்தனுள்ளும் வாய்மையே சிறந்தது என்பதும் வள்ளுவர் போன்றோர் கொள்கை.

11. பிற். சோ. சரி. பக். 108. தி. வை.ச. பண்டாரத்தார்.

12. Ibid. பக். 109. சீவகசிந்தாமணி: காந்தரு, இலம்பகம். செய். 1 நாவாய் கவிழ்ந்து நாய்கன் போல (உதயணன் கதை).

13. மூன்றாம் நந்திவர்ம பல்லவன் காலத்துக் கல்வெட்டொன்று சயாமிலிருந்து கண்டெடுக்கப்பட்டது. அது, அந்நாட்டில் மணிக் கிராமத்தார் என்ற வணிகக் குழு நந்நிலையில் பணியாற்றிய செய்தியை அறிவிக்கின்றது. Epigrapha Indica Vol. xviii.

14. "ஸ்வஸ்தி ஸ்ரீ கண்டராதித்த தேவர் தேவியார் மாதேவடிகளாரான செம்பியன் மாதேவியார். S. I. I. Vol. iii. No. 146; மழபாடித் தென்னவன் மாதேவி; இருங்கோவேளாளர் மகள் வானவன் மாதேவி - பிற். சோ. சரித்திரம். பகுதி I. பக். 85; வானவன் மாதேவி(சுந்தர சோழன் மனைவி) S. I. I. Vol. viii, No. 863, பிற். சோ. ச. பக். 77; வீரமாதேவி ( பராந்தகன் மகள்) அன்பிற்செப்பேடு. E. I. Vol. xii. No. 5; ஸ்வஸ்தி ஸ்ரீ விக்கிரமாதித்ய வரகுணர்க்கு யாண்டு எட்டு.......தெங்ஙநாடு கிழவன் மகள் ஆய்குல மாதேவியாயின முருகஞ் சேந்தியை T. A. S. Vol. III. Huzur office plates; சந்திரகுல மாதேவியார். S. I. I. Vol. iv பக். 193, பெருந்தேவனார் பாரதம்.

15. இராசராச சோழனுடைய மற்ற மனைவிமார்கள், சோழமாதேவி, (S. I. I. Vol. II No. 12 and 46), பஞ்சவன் மாதேவி (Ibid No. 51 and 58), இலாடமாதேவி (Ibid p. p. 467 and 472). ப்ருத்வி மாதேவி (Ibid No. 80 and 82), மீனவன் மாதேவி (Ins. 301061908), வில்லவன் மாதேவி (பி. சோ. ச. பகுதி I. பக். 140); இராசராசனின் மூத்தபெண் மாதேவடிகள் என்னும் பெயரினள் (Ibid. பக்.141); சந்திரமௌலி என்பதன் பரியாயமே மாதே அடிகள் என்பது. (Ibid அ. கு. I)

16. சமணமும் தமிழும். பக். 193; சீனி. வேங்கடசாமி, கழகம் 70.

17. Ibid. பக். 194

18. Ibid. பக். 195

19. நறவு மகிழிருக்கை நன்னன் வேண்மான்" - அகநானூறு செய். 97.

20. "இருங்கோவேள் மருங்கு சாய" மதுரைக் காஞ்சி. அடி 282. "இளங்கோவேண்மான், இயல் தேர்ப்பொருநன் என்று" புறம் - 36. வெளியன் வேண்மான் ஆய் எயினன், அகம் - 208: 5 பரணர்.

21. ஸ்வஸ்தி ஸ்ரீ கொல்லந்தோன்றி நூற்றி நாற்பத்தொன்பதாமாண்டு (கி.பி. 825 + 149 = 974) ... அயுரூரில் பிரதிட்டை செய்த பட்டாரகரையும் பட்டாரகர்க் கொள்ள பூமியும் ஆசிச்சனுமை யம்மைக்கு நீரோட்டிக் கொடுத்தான் வேணாடுடைய ஸ்ரீ வல்லபங்கோதை......" T. A. S. Vol. iv. pp. 9 - 10 அடிகள் 6 - 7.

22. **"கனையின் அகப்பட கழுமலம் தந்த**
**பிணையல் அம்கண்ணிப் பெரும்பூட்சென்னி**
**அழும்பில் அன்ன"** - அகம். 44. குடவாயிற் கீரத்தனார்.

23. விளங்கு பெருந்திருவின் மானவிறல்வேள்
அழும்பில் அன்ன நாடிழந்தனரும் - மதுரைக்காஞ்சி. அடி. 344 - 5.

24. ஆழ்வார்கள் காலத்தில்தான் அந்தணருள் பிரம்மச்சரியத்தை மேற்கொண்டவனை 'மாணி' என்று அழைக்கும் வழக்கம் ஏற்பட்டது எனலாம். பெரியாழ்வாரும் தம் பாசுரத்தில் 'மாணிக்குறளோனே தாலேலோ, வைய மளந்தானே தாலேலோ - என்கிறார். (பெரியாழ்வார் திருமொழி, முதற்பத்து, மூன்றாம் திருமொழி. செய். 1, அடி. 4)

25. ஸ்வஸ்தி ஸ்ரீ பல்லவதிலக பாரத்வாஜகோத்ரா லங்கார பதியாகிய தந்திவர்ம மகாராஜர்க்கு......"

- E. I. Vol. iii. No. 29, P. 295.

26. "ஸ்வஸ்தி ஸ்ரீ கோக்கோதை ரவிக்குச் செல்லா நின்றயாண்டு பதினைந்து அவ்வாண்டு......சிற்றறையில் நங்கையார் கொடுத்த பதின்றூணிப் பாடும் கொமர நாராயண புரத்து செரவன்னாட்டுசெட்டியார் ஒரு திருவக்கிரத்தினுக்குக் கொடுத்த பொன் முப்பத்தாறு கழஞ்சு......"

- S. I. I. Vol. VII. No. 173; A.R. No. 13061901

# 4. சிலம்பில் வரலாற்று நிகழ்ச்சிகளும் கற்பனையும்

சிலப்பதிகாரத்தில் சரித்திர நிகழ்ச்சிகளல்லாத கற்பனை நிகழ்ச்சிகள் பலவற்றைக் காணலாம். சிலப்பதிகாரக்கதையே கற்பனை என்பது ஒரு புறமிருக்க, சிலவரலாற்று நிகழ்ச்சிகளை இளங்கோ தம் கற்பனைத் திறத்தால் மாற்றியமைத்திருக்கின்ற நிலையினைக் காணலாம். இவற்றுள் மிக முக்கியமானவை, செங்குட்டுவனின் வடநாட்டுப் படைஎடுப்பு, குமரிக் கோட்டினைக் கடல் கொண்டமை, புகாரைக் கடல் கொண்டது, மதுரை எரியுண்டது, இலங்கை கயவாகு வஞ்சி நகரத்திற்கு வந்தது என்பவையாகும்.

## கயவாகு

இலக்கிய வரலாற்றறிஞர்கள் சிலப்பதிகாரத்தின் காலத்தை உறுதி செய்வதற்குக் காட்டுகின்ற முக்கிய அகச்சான்று இலங்கை கயவாகுவின் வஞ்சி யிருப்பாகும். சேரன் செங்குட்டுவன் வஞ்சிமூதூரில் கண்ணகிக்குச் சிலை எடுத்து வழிபட்டபோது இலங்கை மன்னன் (கயவாகு என்பவனும்) உடனிருந்தான் என்று சிலம்பு கூறும். அம்மன்னனை முதலாம் கயவாகு வெனக் கொண்டு அவன் காலமாகிய இரண்டாம் நூற்றாண்டே சேரன் செங்குட்டுவனின் காலமும் எனக் கொள்வர்.

கயவாகுவின் காலம் பற்றியே இரு விதமான கருத்துக்கள் உள்ளன. ஒருசாரார் கயவாகு கி. பி. 113 முதல் 135 வரை ஆண்டதாகக் கூறுகின்றபொழுது,[1] இன்னொரு சாரார், அவன் கி.பி. 171 முதல் 193 வரை ஆண்டதாகக் கூறுவர்.[2] இருவகையான கருத்துக்களிலும் இரண்டாவதான கருத்தினையே பெரும்பாலான வரலாற்றாசிரியர்களும் ஒத்துக் கொண்டிருக்கின்றனர். எனவே கயவாகுவின் காலத்தையே செங்குட்டுவனின் காலமாகக் கொள்ளவேண்டும்.

## நூற்றுவர் கன்னர்

கங்கைப் படையெடுப்பிற்குப் பிறகுதான் கண்ணகி பிரதிட்டை நடந்தது. கங்கை படைஎடுப்பு முடிய நான்கு ஆண்டுகளும் எட்டுமாதமும் பிடித்தன.[3] எனவே கங்கைப் படைஎடுப்பு கி.பி. 167 அல்லது 189 இல் நடைபெற்றிருக்க வேண்டும். அப்படையெடுப்பில் குட்டுவன் படை கங்கையைக் கடக்க நூற்றுவர் கன்னர் என்ற வடவாரிய மன்னர் தோணிகளைக்

கொடுத்து உதவியதாகச் சிலம்பு கூறும். 'நூற்றுவர்கன்னர்' என்பது சதகர்ணி என்னும் வடசொல்லின் தமிழாக்கமாகும். 'சதகர்ணிகள்' என்னும் குடிப்பெயரினையுடையவரும், ஆந்திர சாதவாகனப் பேரரசினை நிறுவியவருமான மன்னர்கள் வலிமை மிக்கவர்கள். அவர்களுள் பல தலைமுறைகட்குப் பின்னிருந்தவன் கி. பி.119 ஆம் ஆண்டில் சாகர் (மேற்கு சத்ரபர்)களிடமிருந்து நாட்டை மீட்டுச் சாதவாகனப் பேரரசைப் பரவச் செய்தவன் கௌதமீ புத்ர சதகர்ணி என்பவனாவான்.

அவன் பகைவரிடமிருந்து நாட்டை மீட்டதோடு, மாளவம் (மாள்வா), குர்ச்சரம் ( குஜராத்) ஆகிய பகுதிகளையும் கைப்பற்றிச் சிறந்த வீரனாகத் திகழ்ந்தான். அவன் மகன் வாசிஷ்ட புத்ர ஸ்ரீபுலு மாயிசதகர்ணி வீரத்தில் சற்றுக் குறைந்தவனாக இருந்தான். அவனையடுத்து ஆட்சிக்கு வந்த கௌதமீ புத்ரஸ்ரீயஜ்ஞ சதகர்ணி (கி.பி. 166 - 196) சாதவாகனப் பேரரசர்களிலேயே மிகச்சிறந்த வீரனாகத் திகழ்ந்தவன். தரையிலும் தண்ணீரிலும் அவன் வலியவன். அவனது கடற்படை மிக்க வலிமை பெற்றதாக இருந்தது என்பதனை அவன் வெளியிட்ட நாணயங்களில் காணப்படும் கப்பல் சின்னத்தால் அறியலாகும்.[4] 'இத்தகைய வலிமை படைத்த சாதவாகனப் பேரரசன் செங்குட்டுவனுக்குக் குற்றேவல் செய்வதே போன்று கங்கையைக் கடக்கப் படகுகளைக் கொடுத்தான் என்றால் அது நம்பத் தகுந்ததாக இல்லையென்பதனை எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

கி.மு. 200 முதல் 250 வரையிலும் ஆண்டு வந்த சாதவாகனப் பேரரசர்களின் பெயரைச் சுட்டாது, அவர்கள் அனைவரும் வைத்துக்கொண்ட குடிப்பெயரான 'சதகர்ணி' என்பதைத் தமிழ்ப்படுத்தி, 'நூற்றவர்கன்னர்' என்று பொதுப்படையாகவே சொன்னதிலிருந்தே இந்நிகழ்ச்சி வரலாற்று நிகழ்ச்சியன்று என்பதும், இளங்கோவடிகள் தம் காப்பியத்திற்குப் பழமையைத் தோற்றுவிக்கவே அவர்களையும் பாத்திரங்களாகப் புகுத்தினர் என்பதும் புலப்படும். யக்ஞ ஸ்ரீ சதகர்ணியின் பல நாணயங்கள் அவன் ஆண்ட பகுதியினின்றும் கிடைத்திருக்க, செங்குட்டுவனின் நாணயங்களோ அன்றிக் கல்வெட்டுகளோ சேர நாட்டினின்றோ அல்லது அவன் படைஎடுத்து வெற்றிகண்ட வடநாட்டினின்றோ கண்டெடுக்கப்படவில்லை என்பதும் மேற்கூறிய உண்மையினையே வலியுறுத்திக் காட்டுவதாகும்.

காவிரிப் பூம்பட்டினம் கடலால் கொள்ளப்பட்ட செய்தியினை இளங்கோவடிகள் நேரடியாகச் சொல்லவில்லை யெனினும், 'மணிமேகலை' கூறுகின்ற அச்செய்தி (காவிரி கடல் கொளுமென்றவத், தூவுரை கேட்டுத் துணிந்திவணிருந்தது - கச்சி மாநகர் புக்ககாதை அடி 135 - 6) இளங்கோவடிகட்கும் உடன்பாடு என்பது கோவலன் இறப்பைக் கேட்ட மாசாத்துவன் துறவறத்தை மேற்கொண்டு (3: 27: 90: 95) தேவந்தி போன்றோருடன் வஞ்சிக்கு வந்தார் (3, 29, உரைப்பாட்டு மடை) என்ற அவர் கூற்றால் அறியலாம். இதனை மணிமேகலையும் (கச்சிமாநகர் புக்ககாதை 73 - 4) உறுதி செய்கின்றது.

இளங்கோவடிகளும் மதுரைச் சாத்தனாரும் கூறுகின்ற புகாரைக் கடல் கொண்ட செய்தியும் இளங்கோவடிகள் கூறுகின்ற பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொண்ட செய்தியும் (2,. 11. 19 - 20) உண்மைநிகழ்ச்சிகளன்று, கற்பனையே என்பதனை வரலாறு எடுத்துரைக்கின்றது.

பல்லவ மன்னன் மூன்றாம் நந்திவர்மனின் (கி.பி. 825 - 50) காலத்தில் அந்நகரம் நன்னிலையில் இருந்தது. மூவேந்தரும் வடபுலத்தரசரும் இவனுக்குத் திறைகொண்டு தந்தனர்.[5] என்பதனால் அறியலாம். எனவே காவிரிப்பூம்பட்டினம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிறுதி வரையிலும் நன்னிலையில் இருந்தது. அதனால், இளங்கோவடிகள் சாத்தனார் இவர்கள் கூறிய புகார் கடல்கோள் உண்மையன்று என்று பெறப்படும்.[6]

## பொருள்மாற்றம்

குமரிக்கோடும் கொடுங்கடல் கொண்ட செய்தியும் இளங்கோவின் கற்பனையே. இவர் கற்பனைக்கு அடிப்படை மூன்றாம் இராசசிம்ம பாண்டியன் (கி.பி. 900 - 920) சின்னமனூர்ச் செப்பேடேயாகும். அச்செப்பேட்டுச் சாசனத்தில் ''வெம்முனை வேலொன்று விட்டும், விரைவரவிற் கடன் மீட்டும்'' என்று வருகின்றது. இதே கருத்து ஏறத்தாழ இதே காலத்தில் எழுதப்பட்ட மதுரைத் தலபுராணமான 'ஹாலாஸ்ய மகாத்மியம்' என்னும் வடமொழி நூலிலும் வருகின்றது. எனவே இச்செய்திகளின் அடிப்படையில்தான் இளங்கோவடிகள் பஃறுளியாற்றையும் குமரிக்கோட்டையும் கொடுங்கடல் கொண்டதாக எழுதினார். ஆயின் உண்மையில் பஃறுளியாறு இவர் சிலப்பதிகாரம் யாத்த நாளிலும் அதற்கு முன்னரும் இருந்தது. பின்னரும் இருந்தது, இன்றும் இருக்கிறது என்பது வரலாறு கண்ட உண்மையாகும். கி.பி. 12ஆம் நூற்றாண்டில் தென்பாண்டி நாட்டில் எழுந்த ஒரு கல்வெட்டு இதற்குச் சான்று பகருகிறது. சேரநாட்டைச் சார்ந்த கூபகதேசத் (வேணாட்ட) தரசன் ஒருவன் கி.பி. 1117ஆம் ஆண்டு ஆவணி மாதத்தில் சடையவர்மன் பராந்தக பாண்டியனை (1118 - 1135) ப்போரில் வென்று, கோட்டாற்றினைக் கைப்பற்றிய செய்தியில் இப்பஃறுளியாறு குறிக்கப்படுகிறது.

''எத்திசையும் புகழ்படைத்த கொல்லந்தோன்றி
இரு நூற்றுத்.தொண்ணூற்றிரண்டாமாண்டு
வெற்றி செயும் கும்பத்தில் வியாழந்நிற்க
விளங்கு புகழாவணி பன்னிரண்டாந்தேதி
தத்திவிழும் பறளியாற்றணையும் தள்ளித்
தமிழ்ப்பாண்டி ராசசிங்கம் தனையும் வென்று
கொத்தலரும் பூஞ்சோலை நாஞ்சி நாடும்
கோட்டாறும் கூபகர் கோன் கொண்டநாளே''.

(Travancore state Manuel Vol. I. p. 251, 224) இக்கல்வெட்டில் குறிக்கப்படும் பறளியாறே, தொகை நூற்கள் எழுந்த காலத்தில் குறிக்கப்பெற்ற (புறம். 9: வரி 11) பஃறுளியாறு என்பதில் ஐயமும் உண்டோ? கி.பி. பத்து, பதினொன்று நூற்றாண்டுகளில் பஃறுளி என்று குறிக்கப்பட்ட சொல் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் பறுளி, பறளி என்று குறிக்கப்பட்டது.

வள்ளுவர் காலத்தில் நிறுத்தலளவையைக் குறிக்கும் கஃசு (குறள் -1027) என்னும் சொல் இராசராசசோழன் கி.பி. 985 - 1014, காலத்தில் 'கசு'[7] என்று குறிக்கப்பட்டாற் போல என்று கொண்டால் போதுமானது. வேனிற் காதையில் 'தொடியோள் பௌவம்' என்று கூறிய இளங்கோவடிகள், காடுகாண் காதையில் 'குமரிக்கோடு' என்றார் (அடி20). 'குமரிக்கோடு' என்பதற்குக் குமரி எனும் 'ஊர்' என்று பொருள் கொள்வதே பொருந்தும். அடியார்க்கு நல்லார்தான் 'தொடியோள் பௌவம்' என்ற பகுதிக்குக் 'குமரி என்னும் ஆறு' என்றும் குமரிக் கோடு என்பதற்கு குமரி என்னும் மலை என்றும் பொருள் கொண்டார்.

கோடு என்பதற்குக் 'கரை' என்று அரும்பதவுரைக்காரர் கொண்ட பொருளே பொருந்தும் என்பதைக் குமரிப்பகுதியிலும் சேரநாட்டில் இளங்கோவடிகள் வாழ்ந்த பகுதிகளிலும் உள்ள இடப்பெயர்களால் உணரலாம். அதங்கோடு, புதாங்கோடு, மூதாலங்கோடு, திருவிதாங்கோடு, போன்ற பெயர்களையும் முயிரிக்கோடு, அழக்கோடு, திருமிற்றக்கோடு, காரிக்கோடு, வித்துவக்கோடு போன்ற ஊர்ப்பெயர்களையும் காண்க.

எனவே 'தொடியோள் பௌவம்' என்று இளங்கோ குமரியைக் கடலாகக் கூறியிருக்க, அக்கடலை ஆறாக மாற்றிய பெருமை அடியார்க்கு நல்லாரையே சேரும். அவ்வாறு செய்ய அவருக்கு அடிப்படையாயிருந்த இறையனார் களவியலுக்கு நக்கீரனார் (இளங்கோவடிகளுக்குப் பின்னும் அடியார்க்கு நல்லாருக்கு முன்னும் வாழ்ந்தவர்) கொண்ட உரையில் காணும் சங்கம் பற்றிய வரலாறும், தொல்காப்பியப் பாயிரத்திற்கு இளம்பூரணர் எழுதிய உரைப்பகுதியுமாகும். இதினின்றும் இன்னொன்றும் விளங்குகின்றது.

### முச்சங்கக் கதை

சிலப்பதிகார ஆசிரியரான இளங்கோவடிகள் காலத்திற்கும் அதன் முதல் உரைகாரரான அரும்பதவுரையாசிரியர் காலத்திற்கும் பின்னரும் அடியார்க்கு நல்லாருக்கு முன்னரும் வாழ்ந்தவர்கள் இறையனார் களவியல் உரைகாரர் நக்கீரனாரும், தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணஅடிகளும் என்பதுதான் அது. இளங்கோவடிகளின் குமரிக்கோடு கொடுங்கடல் கொண்ட கதைக்கும், நக்கீரனாரின் முச்சங்கக் கதைக்கும் அடிப்படை ஹாலாஸ்ய மஹாத்மியம் என்ற வடமொழி நூலும் பாண்டியன் மூன்றாம் இராஜசிம்மனின் சின்னமனூர்ச் செப்பேடுகளும் என்பதனை அவற்றை ஊன்றிப் படிப்பவர்களால் அறிந்துகொள்ளவியலும்.

மேலும் முச்சங்கங்களின் கதை கற்பனையே என்பது தெளிவு. சேரநாடு அடியார்க்கு நல்லார் காலத்தில் (கி.பி. 14 ஆம் நூற்றாண்டு) சிறுகச் சிறுக மலையாள நாடாக மாறிக் கொண்டிருந்த நிலைமையினைத்தான் ஏழ்தெங்கநாடு முதலிய நாற்பத்தொன்பது நாடுகள் கடலால் கொள்ளப்பட்டன எனப் புனைந்துரையாகக் கூறினார். அவர் கூற்று புனைந்துரையே என்பதில் ஐயத்திற்கிடமேயில்லை. ஏனெனின், அழிந்ததாகக் கூறிய தெங்க நாடு முதலிய ஏழு நாடுகளும் கி.பி. 9, 10 நூற்றாண்டுகளில் இருந்து, பின் அவர் உரை எழுதிய காலத்திற்குச் சற்று முன்னர்தான் வேறு பெயர்களைப் பெற்றன என்பது தெரிய வருகின்றது. ஏழு என்ற சொல்லின் அடைமொழி அல்லது மரபு எனக் கொண்டால் போதும்.[8]

## உரையாசிரியர் கூற்று

எனவே அடியார்க்கு நல்லார் கூற்றுப்படி ஏழ்தெங்கநாடு, ஏழ்மதுரைநாடு, ஏழ் முன்பாலைநாடு, ஏழ்பின்பாலை நாடு, ஏழ்குன்றநாடு, ஏழ்குண காரைநாடு, ஏழ்குறும்பனைநாடு என்பவை அழிந்து போயின. ஆனால் உண்மை என்ன? அடியார்க்கு நல்லார் காலத்திற்கு ஒன்றிரண்டு நூற்றாண்டுகள் முன்வரை இந்நாடுகள் இப்பெயரில் வழங்கின. பின்னர் இப்பெயர்களுள் பெரும்பாலானவை வேறு பெயர்களால் வழங்கலாயின. தெங்கநாடு என்ற பெயர் கி.பி. 925 ஆவது வரையிலுமாவது வழக்கிலிருந்தது என்பது அப்பகுதிக் கல்வெட்டுக்களாலும் செப்பேட்டுச் சாசனங்களாலும் அறியப்படும்.[9]

ஏழ்மதுரை நாடு, பாண்டி மண்டலத்தில் ஒரு வளநாடாக இருந்தது. பாண்டி மண்டலத்து மதுரோதய வளநாட்டுத் தென்கல்லக நாட்டுப் பராக்கிம பாண்டியபுரம்'' என்பதால்[10] பத்தாம் நூற்றாண்டிலும் மதுரைநாடு (மதுரோதய வளநாடு) இருந்தது என அறியலாம். முன்பாலை நாடு, பின்பாலை நாடு என்ற இரண்டும் வெண்புல நாடு என்பதன் திரிபே. வெண்புல (வேள்புல) நாடு, வெண்பாலி நாடாயதும், வெண்பாலி வெண்பாலையாகி அதுவே முன்பாலை நாடு, பின்பாலைநாடு என்றாகியிருக்கலாம்; அல்லது அடியார்க்கு நல்லாரே வெண்பாலியை, பின்பாலை, முன்பாலை எனக் கொண்டிருக்கலாம்.[11] குன்றநாடு என்பது மலைநாடே,[12] காட்கரை நாட்டைத்தான் அடியார்க்கு நல்லார் குணகாரை நாடு என்று கூறியிருத்தல் வேண்டும். அடியார்க்கு நல்லாரின் குறும்பனைநாடு சேரநாட்டின் ஒரு பகுதியான குறும்பொறை (குறும்பறை) நாடாக இருத்தல் கூடும்.[13] ஏழு நாடுகளில் பெரும்பாலானவற்றில் பெயர்களை அடியார்க்கு நல்லார் திரித்துக் கூறினாலும் நாற்பத்தொன்பது நாடுகளைக் கடல் கொண்டுவிட்டது என்ற அவர் கூற்று கற்பனை என்பதனை நிறுவிக்காட்ட தெங்கநாடு, மதுரோதய வளநாடு ஆகிய இரு நாடுகளே போதுமானது. குன்றநாடு குன்னத்துநாடாகும்.

இனிக் 'குமரிக் - கொல்லம் முதலிய பன்மலைநாடும் அழிந்ததாகவும் அவர் கூறுகின்றார். முதலாம் குலோத்துங்கன் கி.பி 1096இல் கொல்லத்தின்

மீது படையெடுத்துச் சென்று அதனை அழித்தான். சேர மன்னன் இராமவர்ம குலசேகரனின் (கி.பி. 1090 - 1102) சாவேற்றுப்படை முற்றிலும் அழிக்கப்பட்டது. இனி குலோத்துங்கனின் 'புகழ் சூழ்ந்தபுணரி' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியில் குறிக்கப்பட்டுள்ளது.[14] கொல்லம் நகரத்தைக் குலோத்துங்கன் அழித்த நிகழ்ச்சி வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். அவ்வாண்டு தொட்டுப் புதிதாக ஓர் ஆண்டினைத் தொடங்கினதாகவும் அது கொல்லம் அழிந்த ஆண்டு என அழைக்கப்பட்டதாகவும் தெரிகிறது. இவ்வாண்டு கன்னட நூல் ஒன்றில் குறிக்கப்பட்டிருப்பதாகப் பேராசிரியர் வெங்கடரமணய்யா கூறுவர்.[15] பன்று மலை இன்று பன்மனை என்றழைக்கப்படுகிறது.

எனவே குலோத்துங்க சோழனால் கொல்லம் அழிக்கப்பட்ட செய்தியினையே பின்னால் வந்த அடியார்க்கு நல்லார் கடல் கோளால் கொல்லமும் அழிந்தது என்று புனைந்துரைத்தார். குமரி கொல்லம் என்பதிலுள்ள குமரி, குமரிக்கோடு என்னும் குமரிக்கரையினையே குறிக்கும். பன்மலைநாடு என்பது கொல்லம் பகுதிக்குக் கிழக்கேயுள்ள மலைப்பகுதியாகும். அப்பகுதி இன்று 'பன்மன' என்னும் பெயரால் அழைக்கப்படுகின்றது. இதுகாறும் கூறியவற்றால் மதுரை நாடு தொட்டு குறும்பனைநாடு வரையுள்ள 49தநாடுகளைக் கடல் கொண்டது என்பது அடியார்க்கு நல்லாரின் புனைந்துரை என்பது பெறப்படும்.

அடியார்க்கு நல்லார் வாழ்ந்த காலத்தில் ( 14ஆம் நூற்றாண்டில்) மலைநாட்டுத் தமிழ் சிறுகச் சிறுகச் சோழ, பாண்டிய நாட்டுத் தமிழினின்றும் விடுபட்டு, வடமொழி உறவு கொண்டு மலையாள மொழியாக உருமாறிக் கொண்டிருந்தது. ஆட்சிமொழியும் எழுத்து மொழியும் தமிழாக இருந்த போதிலும் மக்கள் பேச்சுமொழி பாண்டி நாட்டுத் தமிழினின்றும் பெரிதும் மாறுபட்டிருந்தது.[16] எனவே தமிழ்நாடாக இருந்த சேரநாடு மலையாள நாடாக மாறிவிட்டதை உணர்ந்த அடியார்க்கு நல்லார் அப்பகுதி தமிழ்நாட்டினின்றும் மொழியடிப்படையில் மாறிவிட்டதை, 'அந்நாடு அழிந்தது' எனப் புனைந்துரைத்தார். பாண்டிநாட்டுப் பகுதியிலுள்ள ஒரு சில நாடுகள் (மதுரோதய வளநாடு) அப்பெயர் அவர் காலத்தில் வழங்காமையினால் அவற்றையும் அழிந்து போனதாகக் கூறிய நாற்பத்தொன்பது நாடுகளில் சேர்த்துவிட்டார்.

இறையனார் களவியல் உரைகாரரின் முச்சங்கக்கதையும், இளம்பூரணர் குமரியை ஆறாகக் கொண்ட செய்கையும் ஆகிய இவற்றைஎல்லாம் குழைத்து, மதுரை உள்ளிட்ட நாற்பத்தொன்பது நாடுகள் அழிந்தன என்று கற்பனையாகக் கூறினார். இதில் வியப்பைத் தருவது என்னவென்ற பண்டை (முச்சங்க)க் காலத்தில் இல்லாத கொல்லத்தையும் கடல் [illegible]ண்டுவிட்டது என்று எழுதியிருப்பதுதான்.

### கொல்லம் புதிது

கொல்லம் நகரம் கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது. சங்கச் செய்யுட்கள் ஒன்றேனும் கொல்லத்தைப்பற்றிக் குறிப்பிடவில்லை. பெரிபுளூஸ், தாலமி, பிளைனி போன்ற வெளிநாட்டுப் பிரயாணிகளின் குறிப்புக்களிலும் முசிரிஸ், டிண்டிஸ், கரௌரா, நௌரா, கொட்டனோரா, கோட்டியாரா போன்ற ஊர்ப் பெயர்கள் காணப்படுகின்றனவேயொழிய 'கொல்லம்' என்னும் ஊரின் பெயர் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆறாம் நூற்றாண்டில் கதம்ப அரசனான மயூரசன்மன் காலத்தில் துளுநாட்டின் வழியாகப் பெருவாரியான பிராமணர்கள் சேரநாட்டின் தென்பகுதியில் குடியேறிக் கொல்லாபுரியின் நினைவாகக் 'கொல்லம்' நகரத்தை ஏற்படுத்தினர் என்பதுதான் வரலாற்று உண்மை. இதனை யறியாமற்றான் கடல் கோளால் கொல்லமும் அழிந்தது என்று அடியார்க்கு நல்லார் எழுதினார்.

### மதுரை எரிந்ததா?

மதுரை அழிந்த செய்தியும் கற்பனையேயன்றி வேறன்று. கண்ணகி தன் மார்பைத்திருகி எறிந்ததனால் மதுரை எரிந்தது என்றால் அது நிகழக்கூடிய தொன்றன்று என்பது கூறாமலே விளங்கும். மன்னன் கோயிற்கு மக்களே தீயிட்டனர் என்று பாரதிதாசன் கூறினாலும் (கண்ணகி புரட்சிக் காப்பியம்) அக்கருத்தும் புரட்சிக் கருத்தேயன்றி வேறில்லை. இலக்கியத்திலும் சான்றில்லை. எனவே மதுரை எரியுண்டதோ இல்லையோ, எரியுண்ட நாளாகக் கூறப்பட்ட நாளின் விளக்கமிருக்கின்றதே, அதைப் பொய்யெனக் கொள்வதற்கில்லை.

> ''ஆடித்திங்கள் பேரிருட்பக்கத்
> தழல்சேர் கட்டத் தட்டமி ஞான்று
> வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண
> உரைசான் மதுரையோ டரைச கேடுறுமெனும்
> உரையுமுண்டே நிரை தொடியோயே''

(சிலம்பு கட்டுரை காதை 133 - 7)

என்ற கூற்றினைப் பார்க்கின்றபோது, அக்குறிப்பிட்ட நாளில் ஒரு நகரம் எரியுண்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆயின் மதுரை, எரிந்ததற்கு வரலாற்றுச் சான்றுகளே இல்லையன்றோ? இல்லை எனவே, எரிந்த நகரம் புகாரோ, சேரனின் தலைநகரோ ஆக இருக்கவேண்டும் என்ற சோழனின் யூகம் வலியுறுகின்றது. வரலாற்று அடிப்படையில் இலக்கியங்களிலும் வரலாற்று நூல்களிலும் புகார் அல்லது மதுரை எரியுண்டதற்குச் சான்றுகளில்லை. ஆயின் சேரர் தலைநகரம் எரியுண்டதாகச் சரித்திரம் கூறுகின்றது.

## எரியுண்ட நகரம்

முதலாம் இராசராசன் காலத்தில் அவன் சேரர் தலைநகரான மகோதயபுரத்தை எரியூட்டியதாக அவன் கல்வெட்டுகளும், கலிங்கத்துப்பரணி, மூவர் உலா போன்ற பன்னிரண்டாம் நூற்றாண்டு இலக்கியங்களும் சான்று பகர்கின்றன. இராசராசன் சேரநாட்டிற்கு அனுப்பிய தூதுவனைச் சேரமன்னன் முதலாம் பாற்கரரவி என்பான் அவமதித்ததன் காரணமாகப் பதினெண் சுரங்கள் வழியாகவும் படைநடத்திச் சென்று மகோதயபுரத்தை எரியுண்ணச் செய்த இராசராசனின் செய்கை திருக் கோவலூர்க் கல்வெட்டில் கூறப்பட்டிருக்கின்றது.

''சாரல் மலையட்டுஞ் சேரன் மலைஞாட்டுத்
தாவடிக் குவட்டின் பாவடிச் சுவட்டு
துடர் நெய் கனகந் துகளெழ நெடுநற்
கோபுரங் கோவை குலைய மாபெரும்
புரிசைவட்டம் பொடிபடப் புரிசைச்
சுதைகவின் பண்டத்த சூளிகை மாளிகை
உதைகை முன்னொள்ளெரி கொளுவி உதைகை
வேந்தைக் கடல்புக வெகுண்டு போந்து''

(Ins. 236.6.1902)

என்று அக்கல்வெட்டுச் சான்று பகருகிறது.

இந்நிகழ்ச்சி இராசராசனின் 27ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் காணப்படுகின்றது எனினும் இந்நிகழ்ச்சி கி.பி. 988-க்குப் பின்னாலும் 1008-க்கு முன்னாலும் நடைபெற்றிருக்கவேண்டும் என்று வரலாற்றாசிரியர் ஒருவர் கருதுகின்றார்[17]. இது இராசராசனின் பதினைந்தாம் ஆட்சி ஆண்டான கி.பி. 999இல் நடைபெற்றிருக்க வேண்டும் என்று கேரள வரலாற்று அறிஞரான ஆ. ஸ்ரீதரமேனன் கருதுகின்றார்.[18]

## காலக் கணக்கு

சிலம்பில் காணப்படும் காலக்குறிப்பு (ஆடி மாதத்தில் இருட்பக்கத்தில் வெள்ளிக்கிழமையும் பரணி - கார்த்திகை நட்சத்திரமும் அட்டமி திதியும் சேர்ந்து வருகின்ற நாள்) கி.பி. 756 ஆம் ஆண்டிற்கு ஒருவாறு பொருந்தும் என்பர் மறைந்த திரு. எல். டி. சாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள்.[19] அவர் ஒருவாறு பொருந்தும் என்றதனால் ஒருசில கூறுகளுக்கு முற்றிலும் பொருந்தி வரவில்லையென்பதும் பெறப்படும். மேலும் இளங்கோவடிகள் நாள், கிழமை, பக்கம், திதி போன்றவற்றைக் குறிப்பிட்டுக் கூறியிருக்கின்ற காலக் குறிப்பு பொய்யன்று.

இ. மு. சுப்பிரமணியபிள்ளை இக்காலக் குறிப்பு கி.பி. 144-க்குப் பொருந்தும் என்கிறார்.[20] தம் காலக்கணிப்புக்குப் பொருந்தும்படி இலங்கைக் கயவாகுவின் காலத்தைக் கி.பி. 144 - 170 என்று குறிப்பர். ஆயின் உண்மையில் கயவாகுவின் காலம் கி.பி. 173 - 190 ஆகும். எனவே சுவாமிக்கண்ணுப்பிள்ளையின் கி.பி. 756; சுப்பிரமணியபிள்ளையின் கி.பி. 144 ஆகிய ஆண்டுகள் வரலாற்றுப் பொருத்தமுடையன அல்ல. இதுவும் சிலப்பதிகாரத்தின் கற்பனைத் தன்மையினையே குறிக்கும். எனினும் இளங்கோவடிகள் கூறியிருக்கின்ற காலக்குறிப்பு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. அம்முறையில் அதனை ஆராய்ந்து பார்க்கும் வேளையில் அக்குறிப்பு கி.பி. 999 ஆடித்திங்கள் 2ஆம் நாள் வெள்ளிக்கிழமைக்கு முற்றிலும் பொருந்தி வருவதை அறியலாம். (கி.பி. 24.07.999)

இவற்றினின்றும் இளங்கோவின் காலக் குறிப்பின்படியுள்ள நாளில் ஒரு நகரம் எரிந்தது என்பது உண்மையாகின்றது. அது உண்மையில் மகோதயபுரமாயிருக்க, மதுரை எரிந்தது என்று கூறியதில்தான் அவர் கற்பனைத் திறனைக் காண்கிறோம். ஆகவே இராஜராஜ சோழன் நாட்டின்மீது பெரும் படை அனுப்பி அதன் கோநகரமான மகோதயபுரத்தை எரியுண்ணச் செய்தது கி.பி. 999ஆம் ஆண்டின் பிற்பகுதி என்பது உறுதியாகின்றது.[21] எரிந்தது மகோதயபுரமன்று, நாகர்கோயிலையடுத்த உதகைக் கோட்டையே என்று வாதாடக் கூடுமானாலும், திருக்கோவலூர்க் கல்வெட்டுக் கூறுகின்ற விளக்கங்களும், கலிங்கத்துப்பரணித் தாழிசைகளும், மூவர் உலா வரிகளும் காட்டும் விளக்கங்களும், சேரன் முதலாம் பாற்கரரவிவர்மனின் யூதச் செப்பேட்டின் வாசகமும், எரிந்த நகரம் மகா உதையபுரம் (மகோதைபுரம்) என்னும் உதகையே என்றும் வலியுறுத்திக் காட்டுகின்றன.

திருக்கோவலூர்க் கல்வெட்டுப் பகுதியில் வரும் புரிசை, சூளிகை, மாளிகை இவை ஒரு சாதாரணக் கோட்டையில் இருக்கமுடியாத உறுப்புகள். கோநகரத்தின் கோட்டையில் மட்டும் இருக்கக் கூடிய பகுதிகள். எனவே மகோதய புரத்தின் சுருக்கமே ‘உதைகை’. ‘சுந்தர மூர்த்தி நாயனார் காலத்து ‘மகோதை’ அல்லது மகோதயர்பட்டினம்’ வடமொழியில் மகோதயா (ர்) புரமாகி, பின்னர் அவர்கள் அதனை மஹா உதையபுரம் எனக் கொண்டதனால், அவ்வுதையபுரம் மீண்டும் தமிழில் சுருங்கி ‘உதகை’ யாயிற்று என்பதுதான் உண்மை.

அரசியல் பிழைத்த சேரவேந்தனை (தூதுவனைச் சிறையிலிட்டது)[22] இராசராசன் அறமாக நின்று தண்டித்த செயலைத் தம் கற்பனைக் கதையாக சிலப்பதிகாரத்தில் கண்ணகிக்கு முறைகேடு செய்த பாண்டியனைத் தண்டிக்கு மாற்றால் அவன் உயிரையும் போக்கி, அத்துடன் நில்லாது அவன் தலைநகரத்தைக் கண்ணகி எரியுண்ணச் செய்த நிகழ்ச்சியாகவும் மாற்றியமைத்தார்.

எனவே இதுகாறும் கூறியவற்றால் உண்மையில் மதுரை நகர் எரியுண்ணவில்லை என்பதும் இளங்கோவடிகள் காலத்தில் (கி.பி. 999 ஆடி

8ஆம் நாள்) (24 - 7 - 999 வெள்ளியன்று) மகோதயபுரம் எரிந்த நிகழ்ச்சியினையே மதுரை எரிந்ததாகத் தம் காப்பியத்தில் புனைந்துரைத்தார் என்பதும் புலப்படும்.

## குறிப்புகள்

1. Gajabahu I of ceylon ruled from A.D. 113 to 134. Dr. Hultz. S. I. I. ii, P. 378. கி.பி 148 முதல் 170 வரை சிலப்பதிகாரகாலம். இ. மு. சுப்பிரமணிய பிள்ளை - செந்தமிழ்ச் செல்வி சிலம்பு. 3, பரல். 2, பக்கம் 85; P. 53. 2Ed. 19d5. K.A.N. Sastri.

2. According to Geiger's crronology Gaybahu ruled from A.D. 171. 93. 'some contributions of South Indian culture' chapter iii. p. 17. Dr. Krishnaswamy Iyengar.

3. 'சிலப்பதிகாரகாலம்' இ. மு. சுப்பிரமணியபிள்ளை 'செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு. 3, பரல், 2. பக். 85.

4. The most powerful of the later Andhras was Gautami putra yanja Sri Satakarri who reigned from about 166 to 196 A.D. He recovered some of the provinves, lost by pulumayi, from the Successors of Rudradaman. Some of his coins bear the figure of a ship and this suggests that his power was not confined to the land - History of India (Hindu Period) by prof. L. Mukerjee. M.A. Mondal Brother & company Ltd, Calcutta - 12. [ Sri. Yajna Satakarni C. 170 - 99. A.D. was the last king to retain Control on both the Western and Eastern provinces' - A History of South India Page 92. K.A.N. Sastri Oxford University press 1958.

5. பல்லவர் வரலாறு: டாக்டர் மா. இராசமாணிக்கனார், கழக வெளியீடு, 1968. "நிற்க மன்னவர் நிரந்த வெண்குடைமிடைந்த நீள்கடை நெடுந்தகை" - நந்திக் கலப்பகம். செ. 26. "காவிரியில், குலவும் புயல் கண்டு புகார் மணலில்" Ibid. 48.

6. So far as the Tamil Country was concerned Kaveripattinam continued to be a port of importance till at least 9th Century A.D." - Kaveripoom Pattinam, a guide by R. Nagaswamy. state Department of Archeology Madras. 1973, page. 9.

7. கோஇராஜகேசரி வர்மரான ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது......அடி (17) அப்பக்காய கறியமுதுக்கு சர்க்கரை கசரையும்......(வரி. 19) அமுதுசெய்ய சர்க்கரை முக்கசும் ஆக சர்க்கரை முப்பலனே கசரைக்கு நெல்லுக்கு இரு நாடுரி......S. I. I. Vol. ii. pt. ii. No. 26P. 126. இங்கு கசரை, முக்கஃசு என்னும் சொற்கள் கஃசரை, முக்கஃசு என்னும் சொற்களின் திருந்திய வடிவமேயாகும் என்பதைக் கண்டு கொள்ளலாம்.

8. ஏழாண்டியற்றி (சிலம்பு) 1: 2: 10, இந்திரவிகாரம் ஏழு Ibid. 1: 10: 14; ஏழ்பிறப்பு (Ibid) 3: 25: 25: 56; ஏழ்கடல் தக்கயாகப்பரணி கோயில் பாடியது, 70ஆம் தாழிசையுரை.

9. "தெங்ஙநாட்டு வெண்ணீர் வெள்ளாளன் தெங்கநாடு கிழவனாயின சாத்தன் முருகன் ஆணத்தியாக ஆயமன்னன் கோக்கருநந்தடக்கனின் (கி.பி. 887 - 885) பார்த்திவசேகரபுரம் செப்பேடுகள். கி.பி. 869 T. A - S. Vol. I. P. 9;" "தெங்கநாடு

ஆய்குல மாதேவியாயின முருகஞ்சேந்தியைத் திருவடிசார்த்த'' ஆய்மன்னன் விக்கிரமாதித்ய வரகுணனின் (கி.பி. 885 - 925) ஹஜிர்க்கச்சேரி செப்பேடுகள் (கி.பி 893) T.A.S. Vol. I. No. 2. இத்தெங்கநாடு முதலாம் இராசராச சோழனின் காலத்திற்கு முன்னரே கூபக தேசத்தோடு (வேணாட்டோடு) சேர்க்கப்பட்டது. இத்தெங்கநாட்டின் தலைநகரமே தற்போது குமரிமாவட்டத்தில் தேங்காப்பட்டணம் என்ற பெயரில் வழங்கப்படுகின்றது.

10. E. I. Vol. xii, Ins. No. 17; பாண்டியர் வரலாறு, பாண்டியர் அரசியல், பக். 175. தி.வை. ச. பண்டாரத்தார், 1956 பதிப்பு; மதுரோதய வளநாடு என்று பாண்டியர் கல்வெட்டுக்கள் கூறும் குன்றநாடு இன்று குன்றம் + அத்து + நாடு = குன்றத்து நாடு என்று குன்றத்தூர் என்று கோட்டயம் பகுதியில் வழங்குகிறது.

11. சேரநாட்டுக் கோட்டயம் பகுதிகள் வேண்பை நாடு, வேம்பநாடு, வெண்பொலி நாடு என்ற பெயர்களில் அழைக்கப்பட்டது. வேண்(ம்) பொலிநாடு வடமொழியில் பிம்பலி தேசம் என மாறியது. வடமொழி பிம்பாலி தேசம் தமிழில் பின்பாலை நாடாயிற்று. பின்பாலை நாடொன்று இருந்ததைக் கண்ணுற்ற அடியார்க்கு நல்லார் அதற்கு மறுதலையாய முன்பாலை நாடொன்றினையும் கற்பனை செய்தார். இவை இரண்டனையும் ஏழ் முன்பாலை நாடு, ஏழ் பின்பாலை நாடென்று பதினான்காகப் பெருக்கினார். பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினொன்றாம் நூற்றாண்டின் முதலிலுமாகப் பின்பாலை நாடென்னும் வெண்பொலி நாட்டை 'கோதை சிரிகண்டன்' என்ற சாமந்தன்'' ஆண்டதாக (கி.பி. 1000-ல் எழுந்த) மட்டாஞ்சேரி கொச்சின் யூதச் செப்பேடுகள் குறிக்கின்றன. E. I. iii. P. P. 68 - 69.

12. சேர நாட்டின் இன்றைய தொடுபுழை, மூவாற்றுப்புழை ஆகிய வட்டங்கள் பத்தாம் நூற்றாண்டில் கீழ்மலை நாடெனப்பட்டது. மலை நாடு குன்ற நாடு தானே கீழ்க்குன்றநாடு அடியார்க்கு நல்லார் கையில் ஏழ்குன்ற நாடாயிற்று. இப்பகுதியைக் கி.பி. 946இல் திருக்குன்றப் போழன் என்னும் சாமந்தன் ஆண்டு வந்தான் என்பதை அவன் கல்வெட்டொன்று கூறுகின்றது. T. A.S. Vol. I. PP. 293 - 4.

13. குணகாரை நாடு நம்மாழ்வாரால் வாழ்த்தப்பட்ட கால்கரை (திருகாட்கரை) நாடாகும். ஏரணாகுளம் திருச்சூர் மாவட்டத்தின் தென்பகுதிகள் கொண்ட இடம். கி.பி. 960 - 71. காலத்திலும் இப்பகுதி இப்பெயரால் வழங்கிற்று என்பதைத் திருக்காட்கரைக் கல்வெட்டு (T.A.S. Vol. iii. P - 167 - 7) கூறும்.

13A. (ஏழ்) குறும்பனை(றை) நாடு கடல் தொண்டி (கடற்றொண்டி, கடலுண்டி)யை முக்கிய நகரமாகக் கொண்ட தென்வய(ல்) நாடாகும். குறும்புறையூர் என்று அழைக்கப்பட்ட பகுதி (E. I. Vol. xvipp - 343 - 4. 1021A.D.) பின்னர் குறும்பறையூர் நாடு, குறும்பறநாடு என வழங்கிற்று. குறும்பற நாட்டையே அடியார்க்கு நல்லார் குறும்பனை நாடாக்கினார்.

14. ''தென்னாட் டெல்லை காட்டிக் குடமலை

நாட்டுள்ள சாவே றெல்லாந் தனிவிசும் பேற''

- S. I. I. Vol. ii. pt. ii No. 58. Line - 58 - 9.

15. 'சடையவர்மன் பராக்கிரம பாண்டியனைக் (கி.பி. 1315 - 47) கொல்லம் அழிந்த ஆண்டு இருநூற்று இருபத்தேழுக்குச் சமமான சாலிவாகன சகாப்தம் ஆயிரத்து இருநூற்று நாற்பத்தாறு, ருதிரோத்காரி ஆனி மாதத்தில் (கி.பி. 1323இல், டெல்லியிலிருந்து வந்த அதிசுல்தான் முல்க்கும் நேமியும் சேர்ந்து சிறைப்படுத்து டெல்லிக்கு அனுப்பி வைத்துப் பாண்டி நாட்டைக் கைப்பற்றினார்.3 பாண்டியனைச் சிறைசெய்த ஆண்டு 1323 என்பதால், கொல்லம் அழிந்த ஆண்டு கி.பி. 1096 என்பது பெறப்படும். Early Muslim Expansion in South India, P. 70. Ed. 1942.

16. Evolution of Malayalam, p.p. 170 - 213. Anantaramayyar chandra sekher, Deccan Colloege Dissertaion series, poona 1953. இராமசரிதம், இராமகதைப் பாட்டு, கண்ணச்ச ராமாயணம் ஆகிய நூல்கள் மலையாள எழுத்தில் (கிரந்த எழுத்தில்) எழுதப்பட்டவை. ஆயின் அவற்றின் மொழி தமிழ்.

17. The chief event of this expedition which took place some time before the year 1008 A.D. was apparently the storming and capture of the strong fortress of udagai and the fortress of udagai must be looked for in the western ghats in that region, or perhaps a little to the south. colas P. 171, K.A.N. sastri, oxford university press Ed. 1955; S.I.I. ii. 1. para 51.

18. In 999 A.D. The 15th year of his reign, Rajaraja won a great Victory over the cheras and struck a blow at chera prestige. The year is referred to by Rajaraja in his insriptions as 'worthy of being worshipped by all other years as the year in the whole of eternity'. The chola inscriptions refer to the storming and capture of udagai and the foundation of the chadayam festival in the chera country. "A survey of kerala History P. 128 - 9 by A Sreedhara Menon, Ed. 1. 1967, N. B. S. kottayam.

19. An Indian Ephemeris Vol. I. part I app. iii. L. D. Swamykannu pillai P. 467. para No. 27.

20. "சிலப்பதிகார காலம்' இ.மு. சுப்பிரமணிய பிள்ளை, செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 3, பரல்: 2. பக். 85

21. 'வேங்கி நாட்டுப்படையெடுப்பில் வெற்றி பெற்ற இராசராசன் கி.பி. 999 ஆரம்பத்தில் சக்திவர்மனை வேங்கி நாட்டு மன்னனாக முடிசூட்டிய பிறகு ஊர் திரும்பியபோதுதான், சேரநாட்டிற்கு அனுப்பப்பட்ட தன் தூதுவன் அவமதிக்கப்பட்டுச் சிறையிடப்பட்டதை அறிந்திருக்க வேண்டும். அதனால் காலந்தாழ்த்தாது பெரும்படையினைப் பதினெண் சுரங்கள் வழியாக அனுப்பினான். இதை எதிர்பாராத சேரனால் எதிர்த்துப் போரிட முடியவில்லை. இராசராசன் படைகள் மகோதைய புரத்தை எரித்தன. இச்செய்தி கலிங்கத்துப்பரணி 201ஆம் தாழிசை, விக்கிரம சோழனுலா 32 - 34 அடிகள், குலோத்துங்க சோழனுலா 46 - 48 அடிகள், இராசராச சோழனுலா 40 - 42 அடிகள் இவற்றால் அறியலாம். 'உதைகை வேந்தை கடல்புக வெகுண்டு' என்ற திருக்கோவலூர்க் கல்வெட்டுச் செய்தி முதலாம் பாற்கரரவி வர்மனின் யூதச் செப்பேட்டுச் சாசனத்தில் வரும். "ஸ்வஸ்தி ஸ்ரீ கோக்கோன்மை கொண்டான் கோஸ்ரீ பாற்கரன் இரவிவர்மர் திருவடி பல நூறாயிரத்தாண்டும் செங்கோல் நடத்தியாளா நின்ற யாண்டு இரண்டாமாண்டைக்கெதிர் முப்பத்தாறாமாண்டு முயிரிக் கோட்டு இருந்தருளிய நாள் பிரசாதிச் சருளிய பிரசாதமாவது" என்ற பகுதியில் (E. I. Vol. iii. pp. 68 - 69)

உறுதிப்படும். இதனால், மகோதயபுரம் சோழப் படையினால் அழிக்கப்பட்டதனால் மன்னர் கடற்கரையிலுள்ள (முயிரிக்கோட்டி) அரண்மனைக்குச் சென்றுறைந்தார் என்ற செய்தித் தெரியலாகும்.

22. "இராசராச சோழனுக்கும் பாற்கர இரவிவர்மனுக்கும் பகைமை உண்டாகிப் போர் நடைபெற்றமைக்குக் காரணம் இவன் சேரநாட்டிற்கு அனுப்பிய தூதன் ஒருவனை அவன் அவமதித்து இழிவாக நடத்தி உதகையில் சிறையிட்டிருந்தமையேயாம்". "எறிபகலொன்றில் எச்சுரமும் போயுதகை நூறித் தன்றூதனை நோக்கினான்" என்ற குலோத்துங்க சோழனுலா அடிகளும் (46 - 48) இதனையே வலியுறுத்தும். ஆகவே உதகை மகோதய புரத்தின் மரூஉவாகும்.

# 5. சிலப்பதிகார வஞ்சி, கடல்பிறக்கோட்டிய குட்டுவனின் தலைநகரா?

சிலப்பதிகார, மணிமேகலைகளில் கூறப்படுகின்ற 'வஞ்சி மாநகரம்' சேர நாட்டின் மேலைக் கடற்கரையிலுள்ள பழைய முசிறியையடுத்து இருந்தது என ஒரு சாராரும் (டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் - சேரன் வஞ்சி) இல்லை, அது கொங்கு நாட்டுக் கருவூரேயாகும் என்று மற்றொரு சாராரும் (டாக்டர். மு. ராகவையங்கார் - சேரன் செங்குட்டுவன்) கூறுவர். சேரநாட்டுத் திருவஞ்சைக் களத்தையடுத்துள்ள 'கரூர்ப்படஞ்ஞ', (கருப்படந்ந) என்ற இடமே சிலப்பதிகார வஞ்சியென்று வாதிடும் கிருஷ்ணசாமி ஐயங்கார் அதற்கான சான்றுகளைச் சங்கப்பாக்களினின்றும் தருகின்றாரெனினும், அவை அவர் கொள்கையை முற்றிலும் நிறுவிக்காட்ட உதவுவனவல்ல என்பது உணர்ந்து கொள்ள முடியும்.

கி.பி. 23 முதல் 79 வரை வாழ்ந்த பிளினி முசிறியைப் பற்றியும் அதனையடுத்துக் கடற்றீவில் வாழ்ந்த கடற் கொள்ளைக்காரர்களைப் பற்றியும் கூறியுள்ளார். இக்குறிப்புக்களின் அடிப்படையில் பிளினியின் 'முசிறிஸ்' சேரரின் 'முசிறியே' என்பது உறுதிப்படும். இந்நகரம் ஓர் சிறந்ததுறைமுகப் பட்டினம் என்பதனையும் அயல் நாட்டோடுள்ள வாணிகம் இங்கு நன்முறையில் நடைபெற்று வந்தது என்பதனையும் பண்டைத் தமிழ் நூல்கள் எடுத்துக் கூறுகின்றன. பரணர், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் இவர்கள் முசிறியை வருணித்திருப்பதும், பிளினி, தாலமி போன்றோரின் வருணனையும் பொருந்தியிருப்பது இங்கு உணரத்தக்கது.

வடநாட்டில் சந்திரகுப்த மௌரியனின் அந்தண அமைச்சனான கௌடில்யன் தன்னுடைய அர்த்தசாஸ்திரம் என்னும் நூலில் தென்னாட்டில் முத்து விளையும் இடங்களில் ஒன்றாகச் சுள்ளியம் பேரியாறு கடலோடு கலக்கும் இடத்தையும் குறித்துள்ளார். சேரநாட்டு முத்து 'சௌர்ணேயம்' என்றழைக்கப்பட்டது. சுள்ளியாறு வடமொழியில் சூர்ணியாறு எனப்படும். சூர்ணியாற்றில் பிறக்கும் முத்து சௌர்ணேயம்: சௌர்ணேயம் கௌர்ணேயமாயிற்று - சேரலம் கேரளம் ஆனாற்போல. பேரியாற்றுக்குச் சுள்ளியாறு அல்லது சூர்ணியாறு என்னும் பெயர் இப்பொழுது வழக்கிலில்லையெனினும் அதன் கரையிலுள்ள ஓர் ஊருக்கு இப்பொழுதும் 'சூர்ணிக்கரை' என்றே பெயர் வழங்கப்பெறுகின்றது. எனவே கி.மு. நான்கு

அல்லது மூன்றாம் நூற்றாண்டளவிலேயே சேரநாட்டு முசிறியும், சுள்ளியாறும் புகழடைந்திருந்த நிலைமையினை உணருகிறோம்.

ஆயின் சங்க இலக்கியங்களிலாகட்டும், மேலைநாட்டுப் பிரயாணிகளின் குறிப்புகளிலாகட்டும், முசிறிக்கோ அல்லது அதனையடுத்த ஏதேனும் ஊருக்கோ 'வஞ்சி' என்னும் பெயர் இருந்ததாகச் சான்றில்லை. 'வஞ்சி' என்று இலக்கியங்களில் வருகின்ற இடங்களிலெல்லாம், அந்நகரம் கடற்கரையினின்றும் வெகு தொலைவில் மாறி, உள்நாட்டில் ஆற்றங்கரையில் இருந்த ஒரு நகரம் என்று குறிக்கப்பட்டிருக்கின்றதே தவிர, அது கடற்கரைப்பட்டினம் என்று கொள்வதற்குரிய எச்சான்றும் இல்லை என்பது நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய ஒன்று. பண்டைப் பெயர் தெரியா ஆசிரியர் எழுதிய 'பெரிப்ளூஸ்மரி எரித்ரியா' என்ற நூலிலும், அதனையடுத்துக் கிரேக்க ஆசிரியர்களில், பிளினிக்கு அடுத்து வாழ்ந்திருந்து கி.பி. 70-ஐ அடுத்து எழுதிய தாலமியின் 'பூகோள விவரணம்' என்னும் நூலிலும் கொரவூர (Karoura) என்னும் ஓரிடத்தைக் குறிப்பிடுகின்றார். இதன் இட அமைப்பு நிரை கோடு (Longitude) 119 பாகை, நேர்கோடு (Latituble), 16 பாகை 20 தற்பரைக்குச் சரியானதென்று அவர் தெரிவிக்கின்றார். முசிறியின் அமைப்பு நிரைகோடு 117 பாகை, நேர்க்கோடு 14 பாகை ஆனபடியால், இக் கொரவூரா முசிறியினும் மிகு தொலைவில் உள்நாட்டில் இருந்தது எனத் தெரியவரும். எனவே தாலமி கூறும் 'கொரவூரா' உள்நாட்டு ஊரான திருச்சிராப்பள்ளிக் கருவூர் என்பதில் ஐயத்திற்கு இடமேயில்லை. சங்கச் செய்யுட்களும் கருவூர்க் கடற்கரைப்பட்டினம் அன்று, ஆற்றங்கரை நகரமே அது என்பதையே எடுத்துக் கூறுகின்றன.

''கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறை
தெண்ணீர் உயர்கரைக் குவை இய
தண்ணான் பொருநை மணலினும் பலவே''

(அகம். செய். 93. வரி 20 - 22. நக்கீரர்)

என்ற பாடலில் 'கருவூர்' தண்ணான் பொருநை (அமராவதி) யாற்றங்கரையில் இருக்கின்றது என்பது தெளிவாக்கப் பட்டிருக்கின்றது. கருவூர்க் கண்ணம் பாளனார் என்னும் புலவர் அகநானூறு 263ஆம் பாட்டில் கோதை ஓம்பிக் காக்கும் வஞ்சியின் சீர்மையினைப் புகழ்ந்துள்ளார்.

''நீடு நிலையா அத்து கோடு கொளருஞ்சுரம்
கொண்டனன் கழிந்த வன்கட் காளைக்கு
அவள் துணிவு அறிந்தனென் ஆயின், அன்னோ
ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும்
வஞ்சி அன்ன என் வளநகர் விளங்க''

என்று அப்பாடலில் கூறப்பட்டுள்ளது. இவ்வஞ்சியை இளங்கோவின் மேலைக்கடற்கரை வஞ்சியென எவ்வாறு கொள்வது? இச்செய்யுள், பாலைத்திணையில் மகட்போக்கிய தாய் சொல்லியதாக வருவதனால் அப்பாலைத் திணைக்குரிய அருஞ் சுரத்தைக் கடற்கரையில் காணமுடியாதல்லவா? மேலும், இதன் ஆசிரியர் கருவூரைச் சேர்ந்தவராக இருப்பதனாலும், இப்புலவர் வாழ்ந்த கருவூருக்கு வஞ்சி என்னும் பெயரும் இருந்த காரணத்தாலும், சேரர்களில் இரும்பொறை மரபினர் கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தமை உண்மையாதலாலும், கோதை யோம்பிக் காக்கும் வஞ்சி கருவூரேயாம்.

கருவூருக்குத்தான் வஞ்சியென்னும் பெயர் இருந்தது என்பதனை மிகத்தெளிவாக எடுத்துரைக்கும் செய்யுள் புறநானூற்றில் உள்ளது. [2]சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதனைக் குண்டுகண் பாலியாதன் என்னும் புலவர் ''பூழியர் பெருமகன்' எனப் புகழ்ந்து கூறி, அவனுடைய கோநகரம் வஞ்சி நகரம். அதன் மதிலை ஆன்பொருநையாற்று அலைவந்து மோதும் என்று மிகத்தெளிவாக எடுத்துக் கூறியிருப்பதைக் கண்ட பின்னரும் வஞ்சி மேலைக் கடற்கரை நகரம் என எவ்வாறு கொள்வது?

கிரேக்க ஆசிரியர்களான பிளினி, தாலமி போன்றோர் மேலைக் கடற்கரை நகரங்களான நித்ரியாஸ், திண்டிஸ், முஸிரிஸ், பரேகா நியாஸிண்டின்- போன்ற நகரங்களைக் கூறுகின்றனரே யன்றி அவ்வரிசையில் 'கரௌரா' அல்லது - 'கொரவூரா' வைப்பற்றிக் கூறவில்லை என்பது இங்குச் சிந்திக்கத்தக்கது. முசிரிஸுக்குப் பதிலாக வஞ்சி என்ற சொல்லையும் அவர்கள் பயன்படுத்தவில்லை என்பதனையும் நினைவில் வைத்துக் கொள்ளல் வேண்டும்.

சங்கச் செய்யுட்களிலும் வேல்கெழு குட்டுவனின் தலைநகரம் முசிறி என்றுதான் பரணர் கூறுகின்றார். எருக்காட்டூர்த் தாயங்கண்ணாரும் அம்முசிறி சுள்ளியம் பேரியாறு.[3] கடலோடு கலக்கும் இடத்தில் உள்ளது என்கிறார்.[4] கடல்பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவனைப் பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்தில் பரணர் பாடினார். ஏழாம்பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடினார். குட்டுவன், நெடுஞ்சேரலாதன் மரபையும், செல்வக்கடுங்கோ இரும்பொறை மரபையும் சேர்ந்தவர். பரணரும், கபிலரும் ஏறத்தாழ சமகாலத்தவர். பரணரின் இளமைக் காலத்தில் கபிலர் முதுமையெய்தியிருக்கவேண்டும். எனவே செல்வக் கடுங்கோவின் முதுமைப் பருவத்தில் குட்டுவன் இளைஞனாக இருத்தல் வேண்டும். இருவரும் ஒரே பரம்பரையில் வந்த இருவேறு மரபைச் சேர்ந்தவர்களாயிருந்து ஒருவர் (குட்டுவன்) முசிறியையும் (புறம். 343. அகம் 149), இன்னொருவர் (செல்வக்கடுங்கோ) கருவூர் வஞ்சியையும் (அகம். 93; புறம் - 387) தலைநகராகக் கொண்டு ஆண்டனர். எனவே செல்வக்கடுங்கோ வாழியாதன் வஞ்சி என்னும் பெயருள்ள கருவூரைத் தலைநகராக்கி ஆண்டு கொண்டிருந்தபோது அவன் சமகாலத்தவனான குட்டுவன் முசிறியைத்

தலைநகரமாகக் கொண்டு ஆண்டிருக்கிறான். ஆகவே கருவூருக்கு மாற்றுப் பெயராக இருந்த வஞ்சி என்னும் பெயர் முசிறிக்கும் அதே காலத்தில் இருந்திருக்க முடியாதன்றோ?

நிலைமை இவ்வாறிருக்க, செங்குட்டுவனின் (கடல்பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவன்) தலைநகரம் வஞ்சி மாநகரென இளங்கோவடிகள் எவ்வாறு கொண்டார் என்பதற்குரிய விடையினைக் காண்போம்.

சேரர் குடியின் இரு பிரிவுகளில் ஒன்று முசிறியைத் தலைநகராகக் கொண்டும், இன்னொன்று கருவூரைத் தலைநகராகக் கொண்டும் ஆண்டனர். முசிறி, கி.மு. 3ஆம் நூற்றாண்டு தொட்டு ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டு வரையிலும் அதேபெயரிலும், பின்னர் கி.பி. 1000 ஆண்டு வரையிலும் முயரிக் கோடு என்னும் பெயரிலும் அறியப்பட்டு வந்தது. பாண்டியரின் தலைநகரமான கூடலுக்கு வழங்கி வந்த இன்னொரு பெயரான மதுரையென்பது தலையாலங்கானத்துப் செருவென்ற நெடுஞ்செழியன் காலந்தொட்டு வழங்கத் தொடங்கி, இன்னும் அதேபெயர் நிலைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆனால் கூடல் என்னும் பெயர் வழக்கொழிந்து போய்விட்டது. 'புகார்' என்ற பெயரிலறியப்பட்ட பட்டினம் கரிகாற் பெருவளத்தான் காலந்தொட்டு, ஏறத்தாழ கி.பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதிவரையிலுமாவது விளங்கியிருத்தல் வேண்டும். கி.பி. 850-ஆம் ஆண்டிலும் புகார் பட்டினம் நல்ல நிலையில் இருந்ததென நந்திக் கலம்பகம் 48ஆம் செய்யுளால் அறியலாம். 1127-லும் அது ஊராக இருந்தது.

எனவே கரிகால் சோழன், சேரன் கடல்பிறக் கோட்டிய வெல்கெழு குட்டுவன் ஆகிய இவர்கள் காலத்து நிகழ்ச்சியாகச் சிலப்பதிகாரத்தை இளங்கோவடிகள் எழுதியபோது, கரிகாலன், நெடுஞ்செழியன், வெல்கெழு குட்டுவன் இவர்கள் கோநகரங்களின் பெயர்களையே தம் காப்பியத்தின் மூன்று காண்டங்களுக்கும் பெயராகச் சூட்டினார். முதற்காண்டத்தில் புகார் நகரச் செய்திகளைத் தாம் எம்முறையில் விளக்கினாலும் அதனை மறுத்துக் கூறுவதற்கு யாரேனும் உளரானால், அவர்கள் சான்று காட்டிப் பேசுவதற்கு அப்புகார் பட்டினம் தம் காலத்தில் (11ஆம் நூற்.) இல்லாமையின் அப்புகாரையே முதற்காண்டத்திற்குப் பெயராக இளங்கோவடிகள் வைத்தார். அவர் காலத்தில் தஞ்சையும், கங்கைகொண்ட சோழபுரமும்தான் சோழர் தலைநகராக விளங்கின என்பதும் இங்கு நோக்கத்தக்கது.

### முசிறிக்காண்டம்...?

மதுரை பண்டைக் காலத்திலும், இளங்கோவடிகள் வாழ்ந்த காலத்திலும் அதே பெயரில் அறியப்பட்டமையின் இரண்டாம் பகுப்புக்கு மதுரைக்காண்டமெனவே பெயர் வைத்தார். கடல்பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவனின் தலைநகரம் முசிறி என்பது ஐயத்திற்கிடமின்றித் தெளிவாகியிருப்பதனால், உண்மையில், இளங்கோவடிகள் தமது மூன்றாம் பகுப்புக்கு 'முசிறி'க்காண்டமென்றே பெயர் சூட்டியிருக்கவேண்டும்.

அவ்வாறு செய்யாமல் இரும்பொறை மரபினைச் சேர்ந்த மன்னர்களின் தலைநகரமான திருச்சிராப்பள்ளிக் கருவூருக்கு இருக்கும் இன்னொரு பெயரான வஞ்சியை வஞ்சிக் காண்டம் என 3ஆவது காண்டத்திற்கு இடம் அமைத்ததற்குக் காரணம் இருக்கின்றது. பண்டைக்காலச் சேரர் தலைநகரத்தினை வருணிக்கும்போது, வருணனை சிறுகச் சிறுக மொழி, பண்பாடு, பழக்கவழக்கங்கள் இவற்றால் மாறுபட்டுக் கிடந்த தம் கால மகோதயபுரத்திற்குப் பொருந்தாமலிருப்பதனையும், ஆனால் எவ்விதமொழி வேறுபாடும் இன்றித் திகழும் கருவூருக்கு அது பொருந்திவருவதையும் உணர்ந்து கொண்டதால்தான், இளங்கோவடிகள் 'முசிறிக்காண்டம்' என்னாமல் 'வஞ்சிக்காண்டம்' எனப்பெயர் வைத்தார். ஆனால் தலைநகரின் வருணனைகள் முசிறிக்கும், கருவூருக்கும் பொருந்தும்படி அமைத்தார்.[5] இதன் காரணமாக வஞ்சிமாநகரம் கருவூரேயென்றும் மேலைக்கடற்கரை நகரமான கரூர்ப்படந்நயே என்றும் உள்ள வாதப் பிரதிவாதங்கள் எழுந்தன.[6]

இவ்வாறு இருசாராரும் மோதிக் கொள்ளும்படியாகத் தம் கற்பனைத் தலைநகரை அமைத்த இளங்கோவடிகளின் திறம் வியத்தற்குரியது.

## வஞ்சி எனும் வழக்கு

இனி வஞ்சி என்னும் பெயர் முசிறிக்கோ, அதனையடுத்த ஏதேனும் பகுதிகளுக்கோ, இலக்கிய வழக்கிலேனும், உலக வழக்கிலேனும், பண்டைக்காலத்திலோ, அன்றிப் பிற்காலத்திலோ இருந்திருக்கின்றதா எனக் காண்போம்.

கி.பி. ஆரம்ப நூற்றாண்டுகளுக்குப் பிறகு, வஞ்சி என்னும் பெயர், பெருமாள் திருமொழி, சேரமான் பெருமாள் நாயனார் பாடல்கள், சுந்தரர் தேவாரப் பதிகங்கள், முத்தொள்ளாயிரம் ஆகியவற்றில்தான் வருகின்றது. இவ்விலக்கியங்கள் எட்டாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டவை என்பதை மறத்தல் கூடாது. புறத்திரட்டில் வரும் 862ஆம் செய்யுளான முத்தொள்ளாயிரச் செய்யுளில் வரும் ''பூம்பொழில் வஞ்சியகம்'' கருவூரில் இருந்ததா அல்லது முசிறியில் இருந்ததா என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியவில்லையானாலும், முத்தொள்ளாயிரத்தின் மற்ற செய்யுட்களின் போக்கைக் கொண்டு 'வஞ்சி' கருவூரே எனத் துணியலாம்.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் எழுந்த பெருமாள் திருமொழியில் குறிக்கப்பெறும் ''கொல்லிநகர்க்கிறை (ஆறாம் திருமொழி; செய். 10) கொல்லிக்காவலன் (ஏழாம் திருமொழி; செ. 11) ஆகிய தொடர்களில் வரும் 'கொல்லி', 'கொல்லிநகர்' ஆகிய பெயர்கள் திருச்சிமாவட்டத்திலுள்ள கொல்லிமலையைக் குறிக்காமல், சேரநாட்டுக் கொடுங்கோளூராம் கொல்லிநகரைக் குறித்து நிற்றல் காணலாம்.

இக்கொல்லி நகரம் தமிழ்க்கொல்லியூரேயாம். கொல்லியூர் உலக வழக்கில் கொல்லூர்'' ஆவது இயல்பு. அந் நகரத்தின் கீழ்ப்பகுதி

கீழ்க்கொல்லூர் என்றும் (தற்போது கிளிகொல்லூர்), (மேற்பகுதி குடக்கொல்லூர் தற்போது கொடும் கொல்லூர்) என்றும் வழங்கப்பட்டது. இக்கொல்லியூர் அல்லது கொல்லிநகர் சேரவரசர்களான, பெரு 'மாக்கோதையாரின்'' தலைநகராக இருந்த காரணம் பற்றி ''மகோதய(ர்) பட்டினம்'' என்றும் 'மகோதயபுரம்' என்றும் வழங்கலாயிற்று. தமிழில் ''மகோதை'' என வழங்கிற்று.

எனவே கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், குலசேகர ஆழ்வார் காலத்தில் (கி.பி. 800 - 820) குடநாட்டுச் சேரர் கோநகரம் 'கொல்லியூர்' என்றும், 'கொல்லிநகர்' என்றும் அழைக்கப்பட, அவர் மகன் சேரமான் பெருமாள் நாயனார் காலத்தில் (கி.பி. 821 - 844) அப்பெயருடன் 'மகோதை' (மகோதயபுரம்) என்னும் பெயராலும் அழைக்கப்படலாயிற்று என இலக்கியம் கூறுகின்றது.[7]

இம்மகோதையில் சிவபெருமானுக்குரிய கோவில் அமைந்த இடம் 'அஞ்சைக்களம்' என்றழைக்கப்பட்டது.[8] இறைவன் அஞ்சைக்களத்தப்பன் என்றும் அழைக்கப்பட்டார். இந்த அஞ்சைக்களம் 'திரு' என்னும் அடைமொழியினைப் பெற்றபோது 'வ' கர உடன்படுமெய் பெற்றுத் 'திருவஞ்சைக்கள'மாயிற்று. அதுவே பத்தாம் நூற்றாண்டில் 'திருவஞ்சிக்கள' மாயிற்று.[9] முதலாம் இராசராசன் காலத்தில் (கி.பி. 975 - 1014) தான் திருவஞ்சிக்களம் 'வஞ்சி' என்றும் சுருக்கி அழைக்கப்படலாயிற்று.[10] எனவே, பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் 'வஞ்சி' என்று கூறினால் அது மேலைக் கடற்கரை - திருவஞ்சிக்களம் என்னும் சிவத்தலத்தை உள்ளிட்ட மகோதயபுரம் என்னும் கொடுங்கோளூரையே குறித்தது என்பது தெளிவுபடும். இதே பத்தாம் நூற்றாண்டில் திருச்சிராப்பள்ளிக் கருவூர் 'வஞ்சி' என்னும் பெயரால் அறியப்படவில்லை என்பதும் இங்கு நோக்கத்தக்கது.[11]

எனவே, தாம் வாழ்ந்து கொண்டிருந்த 11ஆம் நூற்றாண்டில் மகோதயபுரத்துச் சேரவரசர்களின் தலைநகரத்திற்கு இருந்த மாற்றுப் பெயரான 'வஞ்சி' என்பதனையே (தற்போது திருவஞ்சிக்களம்) தம் காப்பியத்தின் மூன்றாம் பகுப்புக்கு இட்டு வஞ்சிக் காண்டமென அழைத்தார்.

இளங்கோவடிகள் உண்மையில் இரண்டாம் நூற்றாண்டினராக இருந்தால், அன்று மேலைக்கடற்கரை முசிறியே சேரர்களின் கோநகரமாக இருந்த காரணத்தால், அவர்தம் காப்பியத்தின் மூன்றாம் பகுப்புக்கு முசிறிக்காண்டம் என்றல்லவா பெயர் சூட்டியிருக்க வேண்டும்? அவ்வாறு அவர் செய்யாமலிருந்ததே அவர் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் அன்று என்பதனைத்தானே எடுத்துக்காட்டுகிறது?

வாதத்திற்காக, கடல்பிறக்கோட்டிய குட்டுவனின் தலைநகரைக் கரூர் வஞ்சி எனக் கொள்ளினும் சிலப்பதிகாரத்தில் விதந்து கூறப்படும் பேரியாறு கருவூரில் ஏது? கருவூரின் மதிலையலைத்துச் செல்வது தண்ணான் பொருநையாறல்லவா? அவ்வாற்றைப் பேரியாறு எனலாமா?

பேரியாறு என்னும் பெயர், சுள்ளியம் பேரியாற்றுக்கல்லவா இருக்கின்றது? குட்டுவனின் மரபைச் சேர்ந்தவனும், குட்டுவனை 5ஆம் பத்தில் பாடிய பரணரின் காலத்தவரான கபிலரால் பதிற்றுப் பத்து ஏழாம்பத்தில் புகழ்ந்து பாடப்பட்டவனுமான செல்வக்கடுங்கோ வாழியாதன், தண்ணான் பொருநையாற்றின் கரையிலுள்ள அயிரை மலைக்குத் தலைவன் எனக் கபிலர் (பதிற்றுப்பத்து ஏழாம் பத்து, இறுதிச் செய்யுள்) கூறுகின்றாரே. எனவே சமகாலத்தவரான குட்டுவனும், செல்வக் கடுங்கோவும் எவ்வாறு ஓரிடத்தையே தலைநகராகக் கொண்டிருக்க முடியும்?.

## மகோதயபுரம்-உதகை

இனிப்பண்டைக் காலத்தில் முசிறியென்றும், குலசேகர ஆழ்வார் காலத்தில் கொல்லியூர், கொல்லிநகர் என்றும் சேரமான் பெருமாள் - சுந்தரமூர்த்தி இவர்கள் காலத்தில் மகோதை என்றும், அங்கு சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோட்டம் அஞ்சைக்களம் என்றும், பின்னர் திருவஞ்சிக்களம் என்றும், முதலாம் இராசராசன் காலத்தில் 'வஞ்சி' என்றும் (திருக்கோவலூர்க் கல்வெட்டு)[11A] அதே காலத்தில் வடநூலாரால் மகோதயபுரம் என்றும் அழைக்கப்பட்ட அம்மகா உதியரின் (உதியர் - சேரர்) புரமே 'உதகை' என அழைக்கப்பட (திருக்கோவலூர்க் கல்வெட்டு), பின்னர் முதலாம் குலோத்துங்கன் காலத்திலும் (கலிங்கத்துப்பரணி பாடல் 201), இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலும் (இரண்டாம் குலோ. உலா; வரி 47), இரண்டாம் இராசராச சோழன் காலத்திலும் (இரா. உலா. வரி. 42) மகோதயபுரத்தை உதகையென்றே தமிழகத்தில் குறிப்பிட்டனர்.

## கொடுங்கோளூர்

மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில்தான் முதன்முதலில் கொடுங்கோளூர் என்னும் பெயர் சேரர் தலைநகரத்திற்கு வழங்குவதைத் தமிழிலக்கியத்தின் வாயிலாகக் காண்கிறோம்.[12] அப்பொழுதும் 'மகோதை யென்னும் பெயரும் அதற்கிருந்தது.[13] எனவே, இராசராசன் காலந்தொட்டு 'வஞ்சி', 'உதகை' என்னும் பெயர்களால் அறியப்பட்ட சேரர் தலைநகரம் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில், அப்பெயர்களோடு 'மகோதை', 'கொடுங்கோளூர்' என்னும் பெயர்களாலும் வழங்கலாயிற்று என்பது பெறப்படும். அதனால் சேக்கிழார் காலத்திற்குச் சில பல ஆண்டுகட்கு முன்னர் தொட்டு "கொடுங்கோளூர்" என்னும் பெயர் சேரர் தலைநகரத்திற்கு வழங்கியிருத்தல் வேண்டும் என்பது துணியப்படும்.

"குடக்கொல்லூர்" என்னும் தொடரே மருவி கொடும் கொல்லூர் என ஆயிற்று.

குடக்கொல்லூர் - குடங்கொல்லூர் - கொடுங்கல்லூர் - கொடுங்நல்லூர் அஞ்சைக்களம், அஞ்சிக்களமாகி, திரு அடைமொழி சேர்த்து திருவஞ்சிக்களமாகித் "திருவஞ்சிக் குளமாயிருத்தலும் காண்க.

முதலாம் இராஜேந்திர சோழனின் கங்கைப் படையெடுப்பிற்குப் பிறகு தான் (கி.பி. 1028ஆம் ஆண்டிற்கும் 1060 ஆம் ஆண்டிற்கும் இடையே) இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை யாத்தார். அதன் பிறகு, பல ஆண்டுகளுக்குப் பின்னால், கொடுங்கோளூர்க் கோயிலிலிருந்த பகவதியை [14] மக்கள், பாண்டியனை வஞ்சம் தீர்த்த கண்ணகியாக உருவகித்து நினைக்கத் தலைப்பட்டு, அவன் பாண்டியனின் அரண்மனையில் வழக்குரைத்த ரௌத்திர 'பாவத்தை' மனதிற்கொண்டு, கொடுங்காளி யாக்கினார். கொடுங்காளியின் ஊர் தமிழகத்தில் கொடுங்காளியூர் - கொடுங்கோளியூர் - கொடுங்கோளூராகவும் மலைநாட்டுத் தமிழில் முன்னர்க் காட்டியபடியே குடக் கொல்லூர் - கொடுங்கோலூராகவும் வழங்கத்தலைப்பட்டது.

கொடுங்கோளூர் என்னும் வழக்கு மலைநாட்டு மொழியில் இல்லாமலிருக்க, தமிழகத்தில் மட்டும் வழங்கி வந்ததும் இங்கு உணர்தற்குரியது.

ஆகவே இதுகாறும் கூறியவற்றிலிருந்து சேரரின் மேலைக் கடற்கரை நகரான முசிறிக்கு ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரையிலும் 'வஞ்சி' என்னும் மாற்றுப் பெயர் இருந்ததில்லை என்பதும்,

எட்டாம் நூற்றாண்டின் முடிவில் அஞ்சைக் களமாக இருந்தது, பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் திருவஞ்சைக்களமாகி, திருவஞ்சிக்களமாகிச், செய்யுள் வழக்கில் 'வஞ்சி' என்று சுருங்கி வழங்கிற்று என்பதும்,

எனவே திருவஞ்சிக்களத்தை 'வஞ்சி' என்று வழங்கினாரே யன்றி, முசிறியை வஞ்சியென எக்காலத்தும் வழங்கவில்லை என்பதும்,

முதலாம் இராசராசன் காலத்திலும், முதலாம் இராசேந்திரன், முதலாம் இராசாதிராசன் காலத்திலும் வாழ்ந்தவர் இளங்கோவடிகள். அதனால் தம் காப்பியத்தின் இறுதிக் காண்டத்திற்கு அவர் 'வஞ்சிக் காண்டம்' எனப்பெயர் சூட்டினார் என்பதும்,

மகோதயபுரம் என்றழைக்கப்பட்ட நகரமே சோழ நாட்டில் இலக்கிய வழக்கில் 'உதகை' என வழங்கப்பட்டது என்பதும் உறுதிப்படும்.

## குறிப்புகள்

1. புறநானூறு பாடல் 343. அடி - 1 - 10. பரணர்; அகநானூறு பாடல் 149 அடி. 7 - 11; எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்.

> ''சேரலர் பேரியாற்று வெண்ணுரை கலங்க
> சுள்ளியம் யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> வளங்கெழு முசிறி''

2. ''ஊழி வாழி பூழியர் பெருமகன்
பிணர் மருப்பியானைச் செருமிகு நோன்றாட்
செல்வக் கடுங்கோ வாழியாதன்
ஒன்றாத் தெவ்வருயர் குடை பணித்தவன்
விடுவர் மாதோ நெடிதே – நி ....
புல்லிலை வஞ்சிப் புறமதிலலைக்கும்
கல்லென் பொருநை மணலினு மாங்கண்

- புறம். 387. குண்டுகண் பாலியாதன்

கரூர் பெருமாள் கோயில் கற்றூண்கல்வெட்டு. மா. இராசசேகர தங்கமணி, அரசு கல்லூரி - கரூர். கல்வெட்டில் வஞ்சிதான் கரூர் என்று குறிக்கப்பட்டுள்ளது.

3. ''புனலம் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
முழங்கு கடன் முழவின் முசிறி''

- புறம்: 343, அடி: 9 - 10 பரணர்

4. ''சேரலர், சுள்ளியம் பேராற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு, பெயரும்
வளங்கெழு முசிறி''

- அகம் 149: அடி. 7 - 11; - எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்.

5. சிலப்பதிகாரம் காட்சிக் காதையில் விளக்கப்படும் பேரியாற்று அடைகரையும், இளங்கோவடிகள் துறவு பூண்டிருந்த குணவாயிற் கோட்டமும், சேனாமுகம் எனும் படைவீடும். மேலைக்கடற்கரை நகரமான கொடுங்கோளூரிலும் அதனையடுத்த பகுதிகளிலும் காணப்படும் இடங்கள் கருவூரிலும் அதனையடுத்த பகுதிகளிலும் உள்ளவை என்பர் மு. ராகவையங்கார்.

6. டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் வஞ்சிமாநகரம் மேலைக்கடற்கரையில் கொடுங்கோளூருக்கு அண்மையிலுள்ள கருப்படஞ்ஞ (கருப்படந்ந) என்று 'சேரன்வஞ்சி' என்னும் தம் நூலில் சாதித்துள்ளார்; ராவ்சாகிப் மு. ராகவையங்கார் திருச்சிராப்பள்ளிக் கருவூரே சிலப்பதிகாரத்தில் கூறப்படும் வஞ்சிமாநகரம் என்று 'சேரன் செங்குட்டுவன்' என்னும் தம் நூலில் சான்று காட்டிச் சாதித்துள்ளார். செங்குட்டுவனின் தலைநகரமான வஞ்சி மாநகரம் என்ற ஒன்று உண்மையில் இருந்திருப்பின் இத்தகைய முரண்பாடுகள் ஏன்?

7. ''அலைக்குங் கடலங்கரைமேல் மகோதை'' - சுந்தரர் தேவாரம், திருவஞ்சைக்களம் பதிகம்: செய்யுள் அடி. 7 செய்யுட்கள், 2, 4, 5, 6, 7, 8, 9.

''அஞ்சைக்களத்துள்ளார் ஐயாற்றுள்ளார்
தஞ்சைத் தளிக்குளத்தார் தக்களூரார்'' 'ருத்தாண்டகம் - அப்பர்

''குள மூன்றும் களமைந்தும் பாடி நான்கும்'' - சம்பந்தர்.

8. ''அணியார் பொழில் அஞ்சைக் களத்தப்பனே''

Ibid செய். 1 - 1 - 9, அடி. 8.

9. ''ஸ்ரீ தநுவில் விளாழந் நில்க்கச் செய்த (பரிசரி)வது திருவஞ்சிக் கலித்து இராயிங்கப் பெருந்தச்சனுக்கு ......A. R. E. 1895, No. 225 and S. I. I. Vol. I

10. ''வஞ்சியில் காஞ்சி வகுத்த செஞ்சிலை'' - திருக்கோவலூர்க் கல்வெட்டு (கி.பி. 1012) இராஜராஜன், S. I. I. Vol. iii. No. 863; S. I. I. Vol. iii. No. 205.

11. திருச்சிராப்பள்ளிக் கருவூருக்கு வஞ்சி என்னும் மாற்றுப் பெயரும் உண்டு என்பதை அகம். 263 ஆம் செய்யுள், புறம். 387 ஆம் செய்யுள் எடுத்துக் கூறுகின்றன. பிற்கால முத்தொள்ளாயிரம் வஞ்சியைப் பற்றிக் கூறுகின்றது. ஆனால் ஏழாம் நூற்றாண்டினரான ஞானசம்பந்தர் தேவாரத்தில் கொங்கு நாட்டுக் கருவூர் அப்பெயராலேயே குறிக்கப்படுகின்றதே தவிர (திருக்கருவூரானிலைப் பதிகம். 1 - 9) வஞ்சியென்னும் பெயரை அவர் பயன்படுத்தவேயில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது. எனினும்.

அடி. 12 ''புனற்பொன்னி வடகரையிற் பொழிற்புடை சூழ் மதில் வஞ்சி
கனற்படவிழித் தெரிந்த வீரர் கவந்தமாட கண்சிவந்தும்

சின்னமனூர்ச் செப்பேடு. மூன்றாம் இராசசிம்மப்பாண்டியன் S.I.I. Vol. III No. 206 ·கி. பி. 916.

11A. ''பொழுதியல், வஞ்சியில் காஞ்சி வகுத்த செஞ்சிலை'' முதலாம் இராசராச சோழனின் திருக்கோவலூர்க் கல்வெட்டு, அடி. 13. (கி.பி. 1012) - Ins. No. 236 of 1902. குலசேகரர், கூடல் நாயகன், கொல்லிக்காவலன் கோழிக்கோன் என்கிறார். கொல்லியூர் வடமொழியில் கொல்லிநகர்; எனவே குலசேகரஆழ்வார் தன்னைக் கொல்லி நகர்க்கிறை என்றார். கொல்லிக்காவலன், கூடல்நாயகன், கோழிக் கோன் குலசேகரன். - பெருமாள் திருமொழி 2: 10: 3; கோழியர்கோன் 9: 11: 3: 10: 11: 3.

கொல்லியூர் மேல், கீழ் என்று இரு ஊர்கள் மேற்கொல்லியூர் கொடுங்கொல்லியூர் என்றும், கீழ்ப்பகுதி கீழ்க்கொல்லியூர் என்றும் கீழ்க்கொல்லியூர் கீழ்கொல்லூர் - கிழி கொல்லூர் - கிளிகொல்லூர் - கொடுங்கொல்லியூர் - கொடுங்கோலூர் - கொடுங்கோளூர் கொல்லிக்கோன்; கொல்லியூர் - கொடுங்கொல்லியூர்- கொடுங்கோலூர் - கொடுங்கோளூர்

2. கூடல் - இருஞாலக்கூடல் - இரிஞ்ஞாலக்கூடல் - இரிஞ்ஞாலாக்குடா.

. கோழியூர் குறுங்கோழியூர். சேரமான் பெருமாள் நாயனார் புராணம்; செ. 1. அடி. 7 - 8.

12. கோழிக்கூடல் - கோழிக்கோடு கோவீற்றிருந்து முறைபுரியும்
குலக்கோமூதூர்க் கொடுங்கோளூர் - பெரியபுராணம்.

13. ''கோதையரசர் மகோதையெனக்குலவு பெயரும் உடைத்துகில்'' Ibid செய் 4. அடி. 7 - 8.

14. பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் சமணம் சேரநாட்டில் வீழ்ச்சியுற்றபோது, சமணக் கோவில்களிலுள்ள பத்மாவதி தேவிபோன்ற பெண்தெய்வங்கள் 'பகவதி' என்ற பெயரில் இந்துக் கடவுளாக மாறின. பார்சுவநாதர், சுபார்சுவநாதர், வ்ருஷபதேவர் போன்ற தீர்த்தங்கரர்கள், சிவனாகவும், திருமாலாகவும் உருமாறி இந்துக் கடவுளர் ஆயினர். கி.பி. 925 வரையிலும் சமணப் பெண் தெய்வமாக இருந்த திருச்சாரணத்து மலையில் உள்ள பத்மாவதிப் (பட்டினி) படாரர் 'இந்து' பகவதியாக மாறிய நிலை இங்கு உன்னுதற்குரியது.

ஆகவே இளங்கோவடிகளின் இளமைப் பருவத்திலோ அதற்குமுன்னரோ சமணக்கோயிலாக இருந்த கொடுங்கோளூர்க் கோயிலின் 'பட்டினிப்படாரர்'' பத்மாவதி தேவி, பகவதியாக மாற்றப்பட்டிருக்க வேண்டும். இதைப் பொறாத இளங்கோவடிகள் பட்டினித் தெய்வமான பத்மாவதி தேவியின் (ப்ராக்ருதப் 'பதைனி', தமிழில் பட்டினியாகி, பத்தினியாயிற்று) புகழினை ஏத்துவதற்கு (உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்த)ச் சிலப்பதிகாரத்தைப் பாடினார். கொடுங்கோளூர் கோயிலில் உள்ள 'பகவதி' படிவம் கண்ணகியினுடையது அல்ல என்பது பார்ப்போருக்கு உடனே விளங்கக் கூடிய ஒன்று.

கொடுங்கோளூர் பகுதியைச் சார்ந்த லோகமல்லேஸ்வரம், கோத்ரமல்லேஸ்வரம், பாலகிரீடேஸ்வரம் ஆகிய இடப்பெயர்களும் சமணக்கோயில்கள் அங்கு இருந்தமையைப் புலப்படுத்தும். லோகமல்லேஸ்வரம் எவ்வாறு லோகேஸ்வரர் என்னும் புத்தரின் கோயிலாக விளங்குகிறதோ அவ்வாறே கோத்ரமலேசுவர் சமண கோமடேசுவரராக இருக்கலாம். (குந்தவர்மராய IIன் காலத்தில் தான் மங்கலாபுரத்தில் லோகேஸ்வரரின் சிலையை கி.பி. 967யில் பிரதிட்டை செய்தார். லோகேஸ்வரர் இளங்குளம் கேரள சரித்திர பிரச்னைகள் P.17.

கார்கள 'கோமடேசுவரர்சிலை' 42 அடி உயரம். மூடபத்ரியின் சாகரகம்பஸதி மங்கலாபுரத்து அடுத்து கத்ரி (கதிரி)யில் புத்தகுகைகள் பிரசித்தகமானவை. மாயாகளவில் - மங்கலாதேவி கோயில். இது பௌத்தரின் தாராபகவதியின் பிரதிட்டையே என்பதற்குச் சான்றுண்டு. 1065இல் உள்ள சாசனம் மங்கலாதேவி, தாராபகவதியும், லோகமல்லேசுவரனையும் - ( 697 AD) புத்தனையும் குறிப்பிடும் அல்பருனி (கி.பி. 1000) மங்கலாபுரம் கொடுங்கல்லூர், கொல்லம் இவ்விடங்களில் புத்தமதத்தினர் அதிகம் என்றெழுதியுள்ளார்.

பகவதி கோயிலில் கிழக்கு வாசல் அருகேயுள்ள ஆலமரத்தடியில் கிடைத்த கற்சிலையில் தலைப்பகுதிமட்டும் 5 அடி 26 இஞ்சு கனம். 50 இஞ்ச் அகலம் இருக்கிறது. இது புத்தரின் சிலை என்று ஊகிக்கப்படுகிறது. 1000ஆண்டுகள் பழமை இருக்கலாம். ஐம்பது மனிதரின் முயற்சியால் இத்தலைப்பகுதி அப்புறப் பட்டுத்தப்பட்டுள்ளது. இதனால் லோகேஸ்வரம் என்று அழைக்கப்படும் கோயில் இக்கோயிலே என்றும், பிரதிட்டை லோகேஸ்வருடையது எனவும் பெண்தெய்வம் (பகவதி) தாராதேவி எனவும், கொள்ளலாம்.

கொடுங்கோளூரில் இன்றும் லோகேஸ்வரம் என்ற பெயரில் ஒரு கிராமமும் அப்பெயரில் ஓர் இடமும் உள்ளது. லோகேஸ்வரரின் கோயில் இருந்த இடமே லோகமல்லேஸ்வரம் என அழைக்கப்பட்டது.

# 6. சிலப்பதிகாரத்தில் வஞ்சியும் புத்த சேதியமும்

பண்டைத் தமிழிலக்கியங்களில் புத்த சேதியங்கள், சமணப்பள்ளிகள் இவைபற்றிய குறிப்புகள் அருகியே காணப்படுகின்றன. எனவே அக்காலத்தில் பௌத்த, சமண மதங்கள் தமிழ்நாட்டில் - சிறப்பாகச் சேரநாட்டில் அவ்வளவு தூரம் வளர்ச்சி பெறவில்லை எனலாம். முதன் முதலில் சேரநாட்டிற்குப் பௌத்தம் அறிமுகமானது - அசோகச் சக்கரவர்த்தியின் காலத்திலாகத் தானிருக்க வேண்டும். அசோகரின் மகதை நாட்டிற்கும் சேரநாட்டிற்குமிடைய வாணிபத் தொடர்பு இருந்ததாக, கௌடில்யன் தனது அர்த்த சாத்திரத்தில் கூறியிருக்கிறான் - (அர்த்த சாத்திரம் viii. 12 - 30 - 34) அசோகரின் கல்வெட்டுகளிரண்டில் சேரநாட்டை (கேரளத்தை)ப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. எனவே கி. மு. மூன்று அல்லது இரண்டாம் நூற்றாண்டில் பௌத்தமதம் சேரநாட்டில் பரவியிருக்க வேண்டும். சேரநாட்டில் 'எடக்கல்' என்னும் இடத்திலுள்ள குகையில் காணப்படும் பிராமிமொழிக் கல்வெட்டு கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலேயே அங்கு பௌத்தம் பரவியிருந்தது என்பதனை உறுதிப்படுத்துகிறது. (Indian Antiquary Vol. xxx).

இத்தகைய பௌத்தமதம் சேரநாட்டில் ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டு வரையிலும் வளர்ச்சி பெற்று வந்தது. பின்னர் அதனுடைய வளர்ச்சி அவ்வளவு முன்னேற்றகரமானதாக இருக்கவில்லை. எனினும், அம்மதம் பத்தாம் நூற்றாண்டின் இறுதி வரையிலுமாவது சேரநாட்டில் ஓரளவு செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதனை வரலாற்றுச் சான்றுகளால் அறியலாம்.

திருசிவபேரூருக்கு (திருச்சூர்) 21 கல் கிழக்கேயுள்ள பருவாச்சேரி என்னும் இடத்தில் (இன்று பாலக்காடு மாவட்டத்தில் உள்ளது) துர்க்கை கோயிலிலிருந்து தியானத்திலிருக்கும் புத்தர் சிலையொன்று கிடைத்திருக்கின்றது. குன்றத்தூர், கருநாகப்பள்ளி வட்டங்களிலிருந்தும் ஆலப்புழை மாவட்டத்தில் மாவேலிக்கரை, அம்பலப்புழை வட்டங்களிலும் 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று கருதப்படும் புத்தர் சிலைகள் ஏராளமாகக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை சேரநாட்டின் இப்பகுதிகளில் பௌத்தமதம் பெற்றிருந்த செல்வாக்கினையே எடுத்துக்கூறும்.

திருமூலபாதம் (ஸ்ரீமூலவாசம்) என்னும் பௌத்தப்பள்ளி பத்தாம் நூற்றாண்டளவில் புகழ்வாய்ந்த இடமாக இருந்தது. இப்பள்ளி பின்னால் உண்டான கடல்கோளால் அழிந்துபோயிற்று. காந்தார (Kandahar) தேசத்தினின்றும் எம். ஃபூஷே (M. Fushe) என்பவரால் கண்டெடுக்கப்பட்ட மிகப் பழமையான 'லோகேஸ்வரர்' படிமத்தில் ''தக்ஷிணாபதே, மூலவாஸே, லோகநாதே'' என்று எழுதப்பட்டிருப்பதிலிருந்து திருமூலவாதத்தின் புகழ் வடமேற்கே ஆப்கானித்தானம் வரையிலும் பரவியிருந்தது என்பதனை அறிகின்றோம்.

கி.பி. பத்தாம் நூற்றாண்டில் சேரநாட்டின் தென்பகுதியை ஆண்டுவந்த ஆய் மன்னனான விக்கிரமாதித்திய வரகுணன் (கி.பி. 885 - 925) திருமூலபாதத்துப் பள்ளிக்குப் பல நிவந்தங்களைத் தந்து பல வகையிலும் அதற்குப் பாதுகாப்பளித்த செய்தி கல்வெட்டுகளாலும் செப்பேட்டுச் சாசனங்களாலும் அறியக் கூடியது ஆகும். வாலியம் சாசனம் அத்தகைய தொன்றாகும். இதன்படி கி.பி. 925 மகரம் (தைத்திங்கள்) 7ஆம் தேதி விக்கிரமாதித்த வரகுணன் தன் நாட்டின் தென் கோடியிலுள்ள பெருமளவு நிலங்களை ஸ்ரீமூலவாசம் பௌத்தப்பள்ளிக்குத் தானமாகத் தந்தான்.[1]

செப்பேட்டுச் சாசனத்தின் வடமொழியிலமைந்த இரண்டாம் செய்யுள் பகவான் புத்தரையும், தருமத்தையும் சங்கத்தையும் புகழ்ந்து கூறுவது நோக்கத்தக்கது.[2] பதினொன்றாம் நூற்றாண்டில் மூஷிக மன்னன் ஸ்ரீகண்டனின் (இவன் முதலாம் இராசராசன் காலத்தவன்) ஆஸ்தான கவியான அதுல மகாகவியால் இயற்றப்பட்ட 'மூஷிகவம்சம்' என்னும் வடமொழிநூலிலும் திருமூலபாதத்தைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன.[3]

கோலத்து அரசனான விக்கிரம ராமனையடுத்து ஆட்சிக்கு வந்த இராமகுடமூவர் திருவடி இப்புகழ் வாய்ந்த பள்ளியை (விகாரையை) கடலலைகளினின்றும் காப்பாற்றப் பெரிய கன்மதிலைக் கட்டினார். பின் இன்னொரு மன்னனான வல்லபன் முதலாம் இராசேந்திர சோழன் மகோதய புரத்துச் சேரரோடு போர் தொடுத்தபோது, சேரவரசனுக்கு உதவி செய்யப் பெருஞ்சேனையோடு சேரநாட்டின் தென்பகுதிக்குச் செல்ல, இடையே இராமக்குடமூவர் கண்டங்காரிவர்மன் இறந்த செய்தியைக் கேட்டுத் தன் படையினைத் திருப்பிக் கோலத்து நாட்டிற்கே அழைத்து வருகின்ற பொழுது, வழியில் திருமூல பாதத்துப் படாகரைத் தரிசித்தான் என்று அம்மூஷிக வம்சம் என்னும் நூல் கூறுகின்றது. இவற்றால் கி.பி. 1043 வரையிலுமாவது திருமூலபாதம் பௌத்த விகாரை நன்னிலையில் இருந்தது என்பது பெறப்படும்.

மூஷிக வம்சத்திலிருந்து கிடைக்குஞ் சான்றுகளினடிப்படையில் 'திருமூலபாதம்' சேரநாட்டின் வடபகுதியில் இருந்திருக்க வேண்டும் எனக் கொள்ள வேண்டியிருக்கின்றது. கொடுங்கோளூருக்கு வடக்கேயும், கோலத்து நாட்டின் தலைநகருக்குத் தொண்டிக்குத் தெற்கேயும் திருமூலபாதம் பள்ளி

இருந்திருக்கலாம் என்று டாக்டர். கே. கே. ராஜா, எஸ். சங்கு ஐயர் போன்றோர் கூறுவர்.[4] ஆனால் தி. அ. கோபிநாத ராயரவர்கள், இத்திருமூலபாதம் பள்ளி மகோதய புரத்திற்குத் தெற்கே இருந்தது என்பர். மாவேலிக்கரை, குன்னத்தூர் அம்பலப்புழை வட்டங்களிலிருந்து கிடைத்துள்ள புத்தர் சிலைகளின் எண்ணிக்கையை வைத்துக்கொண்டு, அப்பள்ளி ஆலப்புழைப் பகுதியில் இருந்திருக்கலாம் என்று ஸ்ரீதரமேனன் கருதுகிறார்.[5]

மேற்கூறியவற்றினின்றும் கிறித்துவ ஆண்டு - முதல் சில நூற்றாண்டுகளில் சிலப்பதிகார - மணிமேகலைகளில் கூறுகின்ற அளவுக்கு வளர்ச்சி பெற்ற புத்த விகாரை சேரர் தலைநகரான வஞ்சியில் - மகோதயபுரத்தில் - இருந்ததில்லையெனவும், கி.பி. 1043 வரையிலுமாவது நன்னிலையில் இருந்த ஸ்ரீமூலவாஸம் என்னும் திருமூலபாதத்துப் புத்தசேதியமே மணிமேகலையில் வஞ்சிமாநகரத்துப் புத்தசேதியமாகக் கொண்டார் என்பதும், அதனையே இளங்கோவடிகளும் கோவலன் தந்தை மாசாத்துவான் துறவெய்தி இருந்த இடமெனக் கொண்டார் என்பதும் பெறப்படும்.

## குறிப்புகள்

1. "........மற்றுங் கோயிற்குரிய தெல்லா மகப்படதிருமூல பாதத்துப் படாராகக் கொடுத்து......" பாலியம் செப்பேட்டுச் சாசனம், முதல் ஓலை, முதல் பக்கம், அடி 10, T.A.S Vol. No. xii, p.p. 187 - 93

2. "ஆத்மாகார க்ரஹண விமுகாவாஹதா பாங்கலீநௌ
ப்ராப்தௌ நித்யம் ஸ்ருதி மதரத்ருஷாணேகருபாவபௌ தௌ
தேய்யா பூமேர்ந்நிகில குமதித்வாந்தரோ தாந்வி தாயா
நேத்ராயே தாம் ஜிதகுவலயௌ தர்மஸங்கௌஸிராயா"

3. Musikavamsa T. A. Gopinatha Rao. T. A. s. Ibid Vol. ii pt. I P.P 87 - 113 Madras Ed. 1916.

4. 'மாத்ருபூமி' வார இதழ், 1946 மார்ச்சு 26, டாக்டர் கே. கே. ராஜா, 'கேரளமும் பௌத்தமதமும்' பக். 49. 58. சங்கு ஐயர்.

5. "Historicaly it seems to be more correct to locate Srimulavasam somewhere in the region between Ambalapuzha and Trikkunnapuzha, which was the cradle of Buddhist faith in ancient days as is testified by a large number of Buddhist images discovered from the Area" - A survey of kerala History, Confluence of Religions P. 92 by A. Sreedhara Menon.

# 7. சிலப்பதிகாரத்தில் மதுரை

மதுரை மிகத் தொன்மையானதோர் நகரம். கூடல், ஆலவாய், மதுரை என்பன பாண்டியர் தலைநகராகிய மதுரையைக் குறிப்பதற்கு எழுந்த சொற்கள். மதுரையைப் பற்றிச் சங்கஇலக்கியங்களேயன்றி, தேவாரம், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களும் எடுத்தியம்புகின்றன.

## மதுரையின் இலக்கியப் பெயர்கள்

மதுரையை நெடுநகர்க் கூடல் (அகம். 296) என்றும், மாடமலி மறுகின் கூடல் (அகம். 346) என்றும் மதுரைப் பேராலவாயரும் நக்கீரரும் குறிப்பிடுவர். காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் புறம். 58ஆம் செய்யுளில் 'தமிழ்கெழு கூடல்' என்கிறார். கலித்தொகையில் பாலைபாடிய பெருங்கடுங்கோ, 'நீர்மாடக் கூடல்' (பாலைக் கலி. 35) என்றும், கபிலர் 'தென்னவன் உயர் கூடல் (குறிஞ்சிக் கலி. 57) என்றும் குறிப்பிடுகின்றனர். பரிபாடலில் குன்றத்தால் கூடல் வரவு ( 8 வரி: 28), கலிகெழு கூடல் (20: வரி: 106) என்று நல்லந்துவனார் கூறுவர். ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் 'தென்கூடல்' என்றும், ஞானசம்பந்தர் 'கடிம்மதில்கூடல்' என்றும் கூறுவர் (ஆலவாய்ப்பதிகம்).

எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த குலசேகர ஆழ்வாரும் 'கூடற்கோமான்'' (பெருமாள் திருமொழி, ஆறாம் திருமொழி: செய்: 10) என்பர். மேற்கூறிய எடுத்துக் காட்டுகளினின்றும் பண்டைக் காலந்தொட்டு எட்டாம் நூற்றாண்டின் இறுதிவரையிலும் பாண்டியன் கோநகரைக் குறிக்கச் செய்யுள் வழக்கில் வந்த சொல் 'கூடல்' என்பது பெறப்படும். அரிதாக 'மதுரைக் காஞ்சியில்' ஒரேயொரு இடத்தில் மட்டும்தான் (வரி 699) கூடலைக் குறிக்க மதுரையென்னும் சொல் ஆளப்பட்டுள்ளது; பரிபாடலிலும் மதுரை என்னும் பெயர் (12: 9) வந்துள்ளது. எனவே, இவற்றினின்றும் இன்னொன்றும் உய்த்துணரக் கிடக்கின்றது. செய்யுள் வழக்கில் 'கூடல்' என்னும் சொல் பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வந்தபோது, உலக வழக்கில் 'மதுரை' என்னும் சொல்லே பயின்று வந்திருக்கின்றது என்பதுதான் அது. மதுரையில் பிறந்த தமிழ்ப்புலவர்கள் தங்கள் பெயருக்கு முன்னால் 'கூடல்' என்னும் சொல்லைப் பயிலாது, 'மதுரை' என்னும் சொல்லைப் பயின்றிருப்பதும் இதனை வலியுறுத்தும்.

## இருவேறு காலங்களில் மதுரை

இனிச் சிலப்பதிகாரத்தில் மதுரைக் காண்டத்தில் பேசப்படுகின்ற மதுரைக்கும், மதுரைக் காஞ்சியில் பேசப்படுகின்ற சங்ககால மதுரைக்கும் உள்ள தொடர்பினைக் காணலாம்.

சிலப்பதிகாரத்தில் வரும் மதுரையைப் பற்றி விளக்கிக் காட்டுவதற்கு இளங்கோவடிகளுக்குப் பெரிதும் உதவியது மதுரைக் காஞ்சியே என்பதில் ஐயமில்லை. மதுரைக் காஞ்சியில் குறிக்கப்படும் பல செய்திகள் சிலப்பதிகாரத்திலும் காணலாகும். ஆயின் சிலப்பதிகாரத்தில் காணப்படும் பல நிகழ்ச்சிகளை மதுரைக் காஞ்சியில் காணவியலாது.

எடுத்துக்காட்டாக, மதுரைக் காஞ்சியில் மதுரையில் வாழும் பரத்தையரைப் பற்றிய குறிப்பொன்று வருகிறது. மதுரையின் சிறப்பினைக் கூறவந்த இடத்தில், அது விழா நின்ற தெருவினையும், துணங்கை, குரவை முதலிய கூத்தினையும், மணம் வீசும் பரத்தையர் சேரியினையும், புது வருவாயினையும் உடைய ஊரின்கண் பல குடிகள் திரண்டு நெருங்கியிருக்கப் பெற்றது'' என்று அதன் ஆசிரியர் மாங்குடி மருதனார் சிறப்பிக்கின்றார்.

## பரத்தையர் பெற்றிருந்த சிறப்புகள்

இங்கு அவர் மதுரையில் பரத்தையர் சேரி இருந்தது என்று மட்டும் கூறிச் செல்கின்றார்.[1] ஆயின் நாம் சிலப்பதிகாரத்தில் ஊர்காண் காதையில் காண்பதென்ன? சமுதாயத்தில் செல்வமும் செல்வாக்கும் பெற்று, வேளிர்களும் பிரபுக்களும் மட்டும் அடையக்கூடிய விருதுகளையும், வசதிகளையும், வாளை ஏந்திச் செல்லும் உரிமையினையும் மன்னனிடம் பெறுகின்ற பத்தாம் நூற்றாண்டின் தேவதாசியரைத்தான் காண்கிறோம்.

''வையமுஞ் சிவிகையு மணிக்கா லமளியும்
உய்யா னத்தி னுறுதுணை மகிழ்ச்சியும்
சாமரைக் கவரியுந் தமனிய வடைப்பையும்
கூர்நுனை வாளுங் கோமகன் கொடுப்பப்
பெற்ற செல்வம் பிறழா வாழ்க்கைப்
பொற்றொடி மடந்தையர்'' (வரி 126 - 131)

என்று இளங்கோவடிகள் கூறுவது காண்க. மதுரை நகரத்துப் பரத்தையர் மன்னரிடம் இறையிலி நிலத்தைப் பெற்றவர்கள், சிவிகையில் ஏறிச் செல்லும் உரிமை, மன்னனைப் போன்று ஆசனத்தில் அமரும் உரிமை, சோலையில் சேவிப்பாருடனிருந்து வினோதம் காண்டலையும், கவரிமானின் மயிரினாலான சாமரையும் பொன்னாலான பொக்கிஷப் பெட்டியினையும் உடையவர்கள். இந்நிலை பரத்தையிருக்குக் கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் இருந்தது என்று நினைக்கவும் முடியாது.

அக்காலப் பரத்தையர் நிலையைத்தான் மாங்குடிமருதனார் மதுரைக்காஞ்சியில் மிகத் தெளிவாகக் கூறியிருக்கின்றாரே[1]. எனவே சிலப்பதிகாரத்தில் காணும் பரத்தையர் நிலை, பத்தாம் நூற்றாண்டில் தென்னாட்டில் பரத்தையர் பெற்றிருந்த நிலையேயாகும்.

ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனாரின் மனைவியான பரவையார் இத்தகைய செழுமையான நிலையில் இருந்தவர். ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் பத்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும்தான் செல்வச் செழுமை பெற்ற பரத்தையர் குடித் தேவதாசியருக்கு, முன்னர் கூறிய வெகுமதிகளையும், உரிமைகளையும், விடுபேற்றினையும் அளிக்கத் தொடங்கினர். இதற்கு முதலாம் ஆதித்த சோழனின் (கி.பி. 861 - 901) திருநெய்த்தானம் கல்வெட்டே (கி.பி. 890இல் எழுந்தது) சான்றாகும்.[2]

## தலைக்கோல் பரிசு

இக்கல்வெட்டன்றி, இன்னும் பல கல்வெட்டுகளும் பரத்தையர்க்கு சிலப்பதிகாரம் ஊர்காண் காதையில் பாண்டியனால் அளிக்கப்பட்டது போன்ற விடுபேறுகளை அளித்ததனையே கூறும். அவற்றிலிருந்து, நாட்டியத்தில் வல்லார்க்கு "தலைக்கோலி" என்னும் தானத்தை (ஸ்தானத்தை, பட்டத்தை) அளிக்கும் வழக்கம் பிற்காலச் சோழர் ஆட்சியின் போதுதான் ஏற்பட்டது என்பதனை அறியலாம்.

பதியிலளான நக்கன் அரங்கமான செயங்கொண்ட சோழத் தலைக்கோலி, நக்கன் பவழக்குன்றான மதுராந்தகத் தலைக்கோலி" என்ற கல்வெட்டுப் பகுதிகள் இராசராசன் காலத்தில் அவ்வழக்கம் தொடர்ந்து நடைபெற்றது என்பதனை அறிவிக்கின்றன. இக்கல்வெட்டுக்களில், பதியிலார் என்ற பரத்தையருக்குச் சோழர்கள் அளித்த பட்டமும் விடுபேறுகளும்தாம், சிலப்பதிகார ஊர் காண்காதையில் பாண்டியனால் மதுரை நகரத்துப் பரத்தையர் பெற்ற பட்டமும் விடுபேறுகளும் என்று காணும்போது, சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளால் வருணிக்கப்படுகின்ற மதுரைதான் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனது மதுரையென்று எவ்வாறு கொள்ளமுடியும்?

## இடம், காலம் மாறுதல்

இனி, மதுரைக்காஞ்சியில் கூறப்பட்டுள்ள பல நிகழ்ச்சிகளைச் சிலப்பதிகார ஆசிரியர் மாற்றியமைத்துப் புகார் நகரத்து வருணனையில் சேர்த்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. வழுதியினுடைய கூடல் மாநகரில் நாளங்காடி இருந்தது என்பதை நக்கீரரின் அகம் - 93ஆம் பாட்டால் தெரியலாம்.[3] மதுரைக் காஞ்சியும் "ஓவுகண்டன்ன இருபெரு நியமத்துள்" ஒன்றான அல்லங்காடியை (வரி 524 - 544) வருணிக்கின்றது. எனவே, அகநானூற்று வரியினாலும், மதுரைக் காஞ்சி வரிகளினாலும் மதுரையில்

நாளங்காடி, அல்லங்காடி என்ற இரு பெரு நியமங்கள் இருந்தன என அறியலாம். ஆனால் சிலப்பதிகார ஆசிரியர் இவ்வங்காடிகள் மதுரையில் இருந்ததாகக் கூறாமல் புகார் நகரத்தில் இருப்பதாகக் கூறியிருப்பது சிந்திக்கத் தக்கதாகும்.

புகார் நகரத்தைப்பற்றிப் பாடுவதற்கென்றே யெழுந்த பட்டினப்பாலையிலும்கூட, அங்கு அங்காடி யிருந்ததாகக் குறிப்பு வருகின்றதே யொழிய, நாளங்காடி, அல்லங்காடிகள் இருந்ததற்குச் சான்றில்லை.[4] ஆயின் சிலப்பதிகாரத்தில் 'நாளங்காடி' என்றதனால் 'அல்லங்காடி'யும் உண்டு என்பது பெறப்பட்டது. அடியார்க்கு நல்லாகும், ''அல்லங்காடியுமுண்டாதலின் இதை நாளங்காடி என்றார்'' என்கிறார் - (சிலம்பு: பக். 258. உ. வே. சா. பதிப்பு 1961). புறஞ்சேரியிறுத்த காதையில் அல்லங்காடியிலிருந்து வரும் பலவாகிய நறுமணப் புகையைப் பற்றிக் (வரிகள் 122 - 9) கூறப்பட்டிருப்பதும் காண்க.

மதுரை, சிலப்பதிகாரத்தில் விளக்கம் பெற்றிருக்கும் அளவுக்கு மதுரைக்காஞ்சியில் விளக்கம் பெறவில்லையென்பது குறிப்பிடத்தக்கது, எனினும், சிலம்பில், புகார்க் காண்டத்தில் விளக்கிக் கூறப்படுகின்ற நாளங்காடி, அல்லங்காடிப் பகுதி விளக்கங்களுக்கு மதுரைக் காஞ்சியே அடிப்படை. ''ஓவு கண்டன்ன இருபெரு நியமித்து'' (மது. காஞ்சி. 365) என்று நாளங்காடி அல்லங்காடிகளை அந்நூல் அறிமுகப்படுத்துகின்றது. பின்னர் ''மதுரையின் நாளங்காடிக் கம்பலை, விழவின் நாடார்த்த ஆரவாரத்தைப் போலிருந்தது'' என்றும் கூறுகின்றது.

''மழைகொளக் குறையாது புனல்மிக மிகாது
கரைபொரு திரங்கு முந்நீர் போலக்
கொளக் கொளக் குறையாது தரத்தர மிகாது
கழுநீர் கொண்ட எழு நாளந்தி
ஆடுதுவன்று விழவின் நாடார்ந்தன்றே
மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்
நாளங்காடி நனந்தலைக் கம்பலை

என்பது அவ்வரிகள் (424 - 30).

இரு பெரு நியமித்து ஒரு கூறாகிய அல்லங்காடியில் ''அழிதரு கம்பலை தூரியங் கறங்குகையினாலும் கோதையில் பெருநாளிருக்கையில் விழவுகொள் கம்பலை கடுப்பக் கல்லென் கையினாலும், பண்டம் இழிதரு பட்டினத்து ஒல்லென் இமிழிசைமானக் கல்லென் கையினாலும், பல்வேறு புள்ளினிசை யெழுந்தாற் போன்ற கம்பலையினை யுடையது, அவ்வல்லங்காடி'' என்று அதே நூல் அல்லங்காடியை விரித்துக் கூறுகின்றது (மது: காஞ்சி: வரிகள் 524 - 44).

''வங்கம் கொணர்ந்த பண்டம் இழிதரும் பட்டினத்து ஒல்லென முழங்குகின்ற ஓசைகளின் சாயலை (மது: காஞ்சி; 536 - 44) சிலம்பில் மதுரைக் காண்டத்தில் காணவியலாது எனினும், புகார்க் காண்டத்தின் கடலாடு காதையில் காணலாகும் (வரிகள் 11 - 25; 35 - 67). ஆக, பட்டினப்பாலையில் இருபெரு நியமத்தைப்பற்றிக் குறிப்பிடாதிருக்க, மதுரைக்காஞ்சியில் வரும் இருபெரு நியமத்தின் அடிப்படையில், சிலம்பில் மதுரையிலன்றிப் புகார் நகரத்திலே அவ்விருபெரு நியமத்தையும் (நாளங்காடி, அல்லங்காடிகளைப்) புகுத்திய இளங்கோடிவகளின் திறம் வியத்தற்குரியது.

இனி மதுரைக் காஞ்சியில், மன்று தொறும் குரவைக் கூத்தினை 'இரவு தொறும் ஆடினமை'யை மாங்குடி மருதனார் கூறினாராக, அது போன்ற நிகழ்ச்சியை (அந்தரிக் கோலம் பூண்டு ஆடும் கொற்றவைக் கூத்தினை) சிலம்பில், புறஞ்சேரியிறுத்த காதையில் காணலாம் (வரிகள் 104 - 13).

கரிகாலன் காலத்தில், பூம்புகாரில், சமண பௌத்த மதங்கள் இந்து மதத்தைப் போன்று செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை யென்பதனைப் பட்டினப்பாலையின் மூலமாக அறியலாம். கடியலூர் உருத்திரங்கண்ணனார் சமண, பௌத்தப்பள்ளிகளைப்பற்றிக் குறிப்பிட வந்தபோது ''தவப்பள்ளி'' (வரி. 52) என்னும் சொல்லினால் சுட்டிச் செல்கின்றார். ஆனால் பட்டினப்பாலை காலத்திற்கு ஒன்றிரண்டு தலைமுறைகளுக்குப் பின்னர், தென்னகத்தில், குறிப்பாகப் பாண்டிநாட்டில் அம்மதங்கள் ஓரளவு வேரூன்றிய நிலையில் இருந்தன என்பதனை மதுரைக்காஞ்சி எடுத்துக் கூறுகின்றது.

''திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
ஓம்பினர் தழீ இத் தாம் புணர்ந்து முயங்க
தாதணி தாமரை போது பிடித் தாங்குத்
தாமுவரும் ஓராங்கு விளங்கக்
காமா கவனிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்து புறங்காக்கும் கடவுட் பள்ளியும் (வரி. 461 - 6)
என்று பௌத்த பள்ளியையும்
வண்டு படபழுநிய தேனார் தோற்றத்துப்
பூவும் புகையுஞ் சாவகர் பழிச்ச
.......................................................................
செம்பியன்றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்கு விசை தவிர்ப்ப மேக்குயர்ந்தோங்கி
இறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையும் (வரி 475 - 87)

என்று சமணப் பள்ளியையும் அந்நூல் குறிப்பிடுகின்றது.

ஆனால் நாம் சிலப்பதிகாரத்தில் பார்ப்பதோ, மிகமிக வளர்ச்சி பெற்ற சமணமதக் கருத்துக்களையும், வைதீக மதக் கருத்துக்களையுமே யாகும். சிலப்பதிகார ஆசிரியரின் நண்பரான மதுரைச்சாத்தனார் தமது நூலான மணிமேகலையிற் பௌத்த மதக்கருத்துக்களைப் பரவலாக விளக்கியுள்ள காரணத்தால், இளங்கோவடிகள், அம்மதக்கருத்துகளைத் தம்காப்பியத்தில் விளக்கமுற்படவில்லை என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதொன்றாகும். எனினும் இளங்கோவடிகள் புத்தனைப்பற்றி,

''பணியைந் தோங்கிய பாசிலைப் போதி
அணிதிகழ் நீழலறவோன் றிருமொழி
அந்தர சாரிக ளறைந்தனர் சாற்றும்
இந்திர விகார மேழுடன் போகி'' (நாடுகாண்காதை 11 - 14)

என்றும், அருகனைப் பற்றி,

ஏழுஜிநேந்தில்ரர் : 1. சமந்தபத்திரர், 2. வச்சிரபாணி, 3. ரத்நபாணி, 4. பத்மபாணி (அவலோகி தேசுவரர்) 5. விச்வபாணி, 6. கௌதம புத்தர், 7. மைத்திரேயர். புத்தர்களுக்கு ஜிநேந்திரர் என்ற பெயர் உண்டு. ஏழு ஜிநேந்திரருக்குக்கட்டிய விகாரம் இந்திரவிகாரம் ஏழு என்றார். அல்லாது இந்திரன் கட்டியது அன்று

''புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவலநீத் தறிந்த தடங்கிய கொள்கை
மெய் வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய
ஐவகை நின்ற வருக தானத்துச்
சந்தி யைந்துந் தம்முடன் கூடி
வந்துதலை மயங்கிய வான்பெரு மன்றத்துப்
பொலம்பூண் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்
நீரணி விழவினும் நெடுந்தோம் விழவினும்
சாரணர் வரூஉந் தகுதியுண்டாமென
உலக நோம்பிக ளொருங்குட னிட்ட
இலங்கொளி சிலாதலந் தொழுது வலங்கொண்டு

(சிலம்பு: நாடுகாண்காதை, வரிகள்: 15 - 25)

என்றும் வரி 160 ''பெரும் பெயர் ஐயர் ஒருங்குடனிட்ட

175. ஒருங்குடனில்லா உடம்பிடையுயிர்கள் - என்று கூறியவர், மீண்டும்

176. ''அறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்''

191. போதார் பிறவிப் பொதியறை யோரென - என்று பாடி மீண்டும்,

194. ஒருமுன் றவித்தோ னோதிய ஞானத்

195. திருமொழிக் கல்லதென் செவியகத் திறவா

207. மறுதர வோதியென் மனம் புடை பெயரா

208. தென்றவன் இசைமொழி கேட்ட

செய்தியினைக் கூறுமுகத்தான் சமணமதக் கடவுளின் புகழினை இளங்கோவடிகள் ஏத்துகின்றார் என்பதினின்றும், சிலப்பதிகார ஆசிரியர் காலத்தில் சமணமதம் பெற்ற வளர்ச்சியினைத் தெள்ளிதின் உணரலாகும்.

இதினின்றும் மதுரைக் காஞ்சிக் காலத்தில் அமண் பள்ளிகள் இருந்த நிலைமைக்கும், இளங்கோவடிகள் காலத்தில் அமண்பள்ளிகள் இருந்த நிலைமைக்கும் இடையேயுள்ள குன்றன்ன வேறுபாட்டினை உணரமுடிகின்றது. இவ்வேறுபாடு - வளர்ச்சி பல நூற்றாண்டுகளின் காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சியே யன்றி வேறன்று.

எனவே இதுகாறும் கூறியவற்றால் கடியலூர் உருத்திரங்கண்ணனார் காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் பௌத்தப்பள்ளியும் அமண்பள்ளியும் பெயரளவிலேயே இருந்தன. அதனாற்றான் அவர் 'தவப்பள்ளி' என்ற ஒரு சொல்லினாலேயே சுட்டிப் போந்தார் என்பதும், அவருக்கு ஒன்றிரண்டு தலைமுறைகளுக்குப் பின்னால் வாழ்ந்த மாங்குடி மருதனார் காலத்தில் - கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் - மதுரை மாநகரத்தில் பௌத்தப்பள்ளிகளும் அமண பூ சேக்கைகளும் ஓரளவுக்கு வளர்ச்சி பெற்றிருந்த நிலையினை அடைந்திருந்தன என்பதனை மதுரைக் காஞ்சி விளக்கங்களினாலும், பின்னர் எட்டு, ஒன்பது, பத்து நூற்றாண்டுகளில் வைதீக மதத்தோடு போட்டி போட்ட அம்மதங்கள் இலக்கியங்களின் வாயிலாக அவற்றின் தத்துவங்களையும் கொள்கைகளையும் வளர்ப்பதிலும் பரப்புவதிலும் வெற்றி பெற்றன என்பதைச் சிலப்பதிகாரத்தில் காணும் அம்மதங்களின் - சிறப்பாகச் சமண மதத்தின் கொள்கை விளக்கங்களினாலும் அறியலாம்.

## குறிப்புகள்

1. ''முழ விமிழும் அகலாங்கண்
விழவு நின்ற வியன் மறுகில்
துணங்கையந் தழூ உவின் மணங்கமழ்சேரி
இன்கலி யாணர்க் குழூ உப் பல பயின்றாங்குப்
பாடல் சான்ற நன்னாட்டு நடுவண்''

(மதுரைக் காஞ்சி. 327 - 31)

2. ''ஸ்வஸ்தி ஸ்ரீ தொண்டைநாடு பரவின சோழன் பல்யானைக் கோக்கண்டனாயின இராஜகேசரிவர்மனாலும் சேரமான் கோத்தாணு இரவியாலும், தவிசும், சாமரையும்,சிவிகையும், திமிலையும், கோயிலும், போனகமும், காளமுங் களிற்று நிரையும் செம்பியன் தமிழவேளென்னும் குலப்பெயரும் பெற்ற

விக்கியண்ணன்'' S. I. I. Vol. iii. No. 89. P. 221; இக்கல்வெட்டில் போரில் காட்டிய வீரம் காரணமாக விக்கியண்ணன் என்பான் செம்பியன் தமிழ்வேள் என்னும் குலப்பெயரினையும், கல்வெட்டில்காணும் வீடுபேற்றினையும் பெற்றான். தஞ்சைப் பதியிலாரான பரத்தையர் தங்கள் இசை நாட்டியப் புலமையின் காரணமாகத் 'தலைக்கோல்' என்னும் விருதினையும் முன்னர்க் கூறிய விடுபேறுகளையும் பெற்றனர். முதல் இராசாதிராச சோழன் ஆட்சிக் காலத்தில் திருவொற்றியூரிலிருந்த தேவரடியாளான சதுரன் சதுரி என்பவள் நாகன் பெருங்காடனுடைய இல்லாள் என்று அவ்வூர்க் கல்வெட்டொன்று (Ins. 147061912 ப. பி. சோ. ச. பகுதி iii, பக். 100) கூறுகின்றது. இவ்வழக்கத்தையொட்டியே மாதவி கோவலனைத் தன் கணவனாக வரித்து மணிமேகலை என்ற மகளையும் பெற்றாள் என இளங்கோவடிகள் வரைந்தார்.

3. **''வாடா வேம்பின் வழுதிகூடல்**
**நாளங்காட''......அகம்;** அடி - 9 - 10

**-கணக்காயனார் மகனார் நக்கீரனார்.**

4. **''குழலகவ யாழ்முரல முழவதிர முரசியம்ப**
**விழவறா வியலாவணத்து''**

- பட்டினப்பாலை. அடி. 156 - 7.

# 8. சிலம்பில் வரலாற்றுப் பாத்திரங்கள்

சிலப்பதிகாரத்தைப் பொறுத்த வரையிலும் இலங்கைக் கயவாகு மன்னன் மிக முக்கியமான வரலாற்றுப்பாத்திரம் ஆகும். சிலப்பதிகாரக் கதையின்படி அவனுக்கு ஒரேயொரு நிகழ்ச்சியோடுதான் தொடர்பு இருக்கிறது. அது கண்ணகிக்குக் கோவிலெடுத்து அவள் படிமத்தைப் பிரதிட்டை செய்தபோது இலங்கைக் கயவாகு வேந்தனும் செங்குட்டுவனோடு வஞ்சி மாநகரில் இருந்தான் என்பதாகும். கயவாகு வேந்தனோடு, குடகக் கொங்கரும் மாளுவ வேந்தனும் இருந்ததாகச் சிலம்பு கூறும்,

> ''குடகக் கொங்கரும் மாளுவ வேந்தரும்
> கடல்சூ ழிலங்கைக் கயவாகு வேந்தனும்''

- (சிலம்பு: 30: 59 - 60)

இக்கயவாகு வேந்தன், மற்ற மன்னர்களான வெற்றிவேற் செழியன், கொங்கிளங்கோசர், சோழன் பெருங்கிள்ளியைப் போலக் கண்ணகிக்குத் தன் நாட்டில் வழிபாடு செய்ததாக உரைபெறு கட்டுரை கூறுகிறது. சிலம்பில் வரந்தருகாதை, உரைபெறு கட்டுரை ஆகிய இவ்விரு இடங்களிற்றான் கயவாகு என்ற பெயர் காணப்படுகின்றது. கடல் சூழிலங்கை என்ற தொடர்கூட திருமங்கையாழ்வாரிடமிருந்து கொண்டது என்று தெரிகிறது.

எனவே கண்ணகிக்குக் கோயிலெடுத்தபோது கயவாகு உடனிருந்தான் என்பதும், பின்னர்த் தன் நாட்டிலும் அவளுக்குக் கோயிலெடுத்து வழிபட்டான் என்பதும் சிலம்பு கூறும் செய்திகள். ஆகவே இலங்கைக் கயவாகுவின் காலத்தில், கோவலனும், கண்ணகியும், மாசாத்துவானும் மாநாய்கனும், மாங்காட்டு மறையோனும் கோசிகமாணியும், மாதரியும், இளங்கோவடிகளும் மதுரைச் சாத்தனாரும் வாழ்ந்திருக்க வேண்டும் என்றாகிறது.

இலங்கையை ஆண்ட மன்னர்களில் 'கயவாகு' என்னும் பெயரில் இருவர் இருந்தனர். சிலப்பதிகாரக் கதைப்படி ஒருவர் இளங்கோ காலத்திலும், இன்னொருவர் அவருக்குப் பின்னால் பத்து நூற்றாண்டுகள் கழித்தும் வாழ்ந்தவர். இவ்விருவரைப் பற்றியும் டாக்டர். உ. வே. சாமிநாதையர் கூறுவதாவது: இற்றைக்குச் சற்றேறக்குறைய 1800 வருடங்களுக்கு முன் கயவாகுவென்னும் அரசனொருவன் இருந்தானென்று இலங்கைச் சரித்திரமாகிய மகாவம்சத்தாற் புலப்படுகின்றது. பின்னும் சற்றேறக்குறைய

800 வருடங்களுக்கு முன்பு கயவாகுவென்று மற்றோரரசன் இருந்ததாகவும் அச்சரிதத்தால் தெரிய வருகிறது. ஆயினும், இந்நூல் கூறிய வேறு சில அரசர்களுடைய காலத்தை ஆராயும்போது இந்நூலாசிரியர் காலம் முதற்கயவாகுவின் காலமென்றே துணியப்படுகின்றது.[1] ஐயரவர்கள் கருத்தையொட்டிப் பின்னால் வந்த தமிழறிஞர்களில் பெரும்பாலோரும் செங்குட்டுவனும் முதற்கயவாகுவின் காலத்திலேயே வாழ்ந்தவனாதல் வேண்டும் எனக் கொண்டனர்.[2]

இவ்விரு கயவாகு வேந்தர்களில் முதற்கயவாகு வேந்தன் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் (173 - 195) இலங்கையை ஆண்டவன். எனவே சிலப்பதிகாரச் செங்குட்டுவனின் காலமும் ஏறத்தாழ அதே காலமாகத்தானிருக்க வேண்டும் என்பது மேலே கூறிய அறிஞர் பெருமக்களின் கொள்கை. ஆனால் வரலாற்றறிஞர்களில் சிறந்தவரான டாக்டர் உல்ஷ் போன்றவர்கள் மேற்கூறிய கருத்தினை ஏற்றுக் கொள்ளவில்லை என்பது நோக்கத்தக்கது.[3]

## கயவாகு - காவல்வேந்தன்

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை யாத்தபோது, ஐந்தாம் மகிந்தன் என்னும் இலங்கை யரசனொருவன் முதலாம் இராசேந்திர சோழனால் சிறைப்படுத்தப்பட்டுச் சோழ நாட்டில் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்து இறக்கவும் செய்தான்.[4] இவனை மனதிற் கொண்டே இலங்கை வேந்தன் ஒருவன் கண்ணகியின் படிமப் பிரதிட்டையின்போது வஞ்சியில் இருந்ததாக இளங்கோவடிகள் எழுதினார். ஆனால் அவர் அரசரின் பெயர் குறிக்கவில்லை. கடல் சூழிலங்கைக் காவல் வேந்தனும் என்றே எழுதினார். பின்னால் ஏடெழுதியவர்கள் (இரண்டாம் கயவாகுவின் காலத்தில் வாழ்ந்த தமிழ்நாட்டுப் புலவரொருவர்) தான் 'கயவாகு' என்னும் பெயரை எழுதியிருக்க வேண்டும்.

கி.பி. 5ஆம் நூற்றாண்டில் எழுந்த இலங்கை வரலாற்று நூலான மகாவம்சத்தில் கயவாகு தன் நாட்டில் கண்ணகிக்குக் கோயில் எடுத்ததாகச் செய்தியேயில்லை. இருப்பதெல்லாம் தம் அன்னைக்குக் கோயில் எடுத்தமையே ஆகும் - என்ற டாக்டர் எஸ். கிருஷ்ணசுவாமி ஐயங்கார் கூற்று மேற்சொன்ன கொள்கையினையே அரண் செய்கின்றது.[5]

கி.பி. பதினோராம் நூற்றாண்டில் எழுதப்பட்ட 'இராசவழி' என்னும் இலங்கைச் சரிதமே கயவாகு வேந்தனைக் கண்ணகி வழிபாட்டோடு பிணைத்துக் காட்டுகின்றது. எனவே இராசவழி, இயற்றுவதற்குச் சற்று முன்னால் 2ஆம் கயவாகுவின் காலத்தில் 'காவல் வேந்தன்' என்ற தொடர் 'கயவாகு வேந்தன்' என்று மாற்றப்பட்டிருக்கின்றது.

உண்மையில் இளங்கோ அடிகளே கயவாகு வேந்தன் என்று எழுதியிருப்பாரானால் 5ஆம் நூற்றாண்டு மகாவம்சத்திலாவது அல்லது அதற்கும் பின்னர் எழுந்த சுள்ள வம்சத்திலாவது இச்செய்தி

குறிக்கப்பட்டிருக்கும். அவ்வாறு அவற்றில் குறிப்பிடப்படவில்லை என்பதும், 16ஆம் நூற்றாண்டு இராசவழியில்தான் காணப்படுகின்றது என்பதும், 'கயவாகு' எனும் சொல் 'காவல்' எனும் சொல்லுக்குப் பதிலாக 2ஆம் கயவாகு காலத்தில் அல்லது அதற்குப் பின்னர் செருகியிருக்க வேண்டும் என்பதும் உறுதிப்படுகின்றது. அதனால் அதனை வரலாற்று உண்மை எனக் கொள்ளல் தகாது.

எனவே மேற்கூறியவற்றினின்றும் இளங்கோவடிகளின் சிலப்பதிகாரச் செங்குட்டுவன், உண்மையில் வரலாற்று மன்னனான முதலாம் கயவாகுவின் காலத்தில் வாழ்ந்தவன் அல்லன் என்பதும், சிலப்பதிகாரக் கண்ணகியின் படிமப் பிரதிட்டையின்போது கயவாகு மன்னன் சேரர் தலைநகரத்தில் இருந்தான் என்பனவெல்லாம் வரலாற்றுண்மைகள் ஆகா வென்பதும் உணரக்கிடக்கின்றது.

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் 'கயவாகு' வென்னும் பெயர் எவ்வாறு வந்தது? அது எந்தக் கயவாகுவைக் குறித்து நின்றது? இளங்கோவடிகள் கயவாகு வென்னும் பெயரைப் பயன்படுத்தினாரா? என்னும் கேள்விகள் இயல்பாகவே எழுகின்றன.

இளங்கோவடிகள் 'கயவாகு' என்னும் பெயரினைப் பயன்படுத்தினாரா என்பது ஐயத்திற்கிடமானதொன்று. சிலம்பில், 'கயவாகு' என்னும் பெயர் வரக்கூடிய இடங்கள் இரண்டு. உரைபெறுகட்டுரையில் 3ஆவதான, ''அதுகேட்டு இலங்கைக் கயவாகு வென்பான் நங்கைக்கு நாட்பலி கோட்ட முந் துறத்தாங்கு, பிழையா விளையுள் நாடாயிற்று'' என்ற பகுதியிலும், வரந்தரு காதையில் ''குடகக் கொங்கரு மாளுவவேந்தரும், கடல்சூழிலங்கைக் கயவாகு வேந்தனும்'' என்னும் வரியில், 'கயவாகு' என்னும் சொல்லுக்குப் பிரதிபேதமாக 'காவல்' என்னும் சொல் தரப்பட்டுள்ளது.[4] எனவே கயவாகு வேந்தன் என்பதற்குப் பதிலாகக் 'காவல்வேந்தன்' என்று சில பிரதிகளிலாவது காணக்கிடக்கிறது என்பது உண்மையாகின்றது.

## பொதுப்பெயர்கள்

'கயவாகு வேந்தன்' பொதுப்பெயர்கள், 'காவல்வேந்தன்' என்ற இரண்டில் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் எதை எழுதினார் என்பது கேள்வி. அவர் கடல் சூழிலங்கைக் காவல் வேந்தனும் என்று காவல் வேந்தன் என்றே எழுதியிருத்தல் கூடும். ஏனெனில், சிலப்பதிகாரத்தில் சேரமன்னனையும் காப்பியத்தலைவியையும் குறிப்பதற்குப் பயன்படுத்திய பெயர்களே இயற்பெயர்கள்; பிற இடங்களில் வரும் பெயர்கள் பெரும்பாலானவையும் பொதுப்பெயரேயன்றி உண்மையில் இயற்பெயரன்று. எனவே செங்குட்டுவன், கண்ணகி, வஸந்தமாலா போன்ற பெயர்கள் தவிர மாசாத்துவான், மாநாய்கன், கோவலன், மாதவி, கவுந்தி போன்ற பிறபெயர்கள் அனைத்தும் பொதுப்பெயர்களே. கண்ணகியின் பிரதிமத்தை நிறுவும் நிகழ்ச்சியில் கலந்து கொண்டவர்களைக் குறிப்பிடும்போது, குடகர் என்றும்

கொங்கர் என்றும் மாளுவவேந்தர் என்றும் இயற்பெயர் சுட்டாமலே கூறிச் சென்றனராகக் கடல் சூழிலங்கை வேந்தன் பெயரைமட்டும் குறிப்பிட்டார் எனக்கொள்வது பொருந்துவதன்று.

வஞ்சிக்கு முந்நூறு கல் தொலைவில் அமைந்த தென்னிலங்கை மன்னன் பெயரைச் சுட்டினரென்றால், வஞ்சிக்கு ஆயிரத்தறுநூறுகல் வடக்கேயிருந்து வந்த மாளுவ வேந்தனின் பெயரைச் சுட்டாமல் சென்றிருக்கமாட்டார். மேலும் தம் அண்மை நாட்டவரான குடகர், கொங்கர் ஆகியோரது பெயர் இளங்கோவடிகட்குத் தெரியாமற் போயிருக்க, இலங்கை வேந்தன் பெயர் மட்டும் தெரிந்திருப்பது விந்தையேயாகும்.

வேறேதேனும் சிறப்பின் காரணமாக இலங்கை வேந்தனின் பெயரைத் தெரிந்து வைத்திருந்தார் என்று கொள்ளவும் வழியில்லை.

ஏனெனின் இளங்கோ சமணர்; கயவாகு பௌத்தர்; சைவனான செங்குட்டுவனின் தலைநகரத்திற்கு வருவதற்குண்டான காரணம் எங்கேயும் விளக்கப்படவில்லை. இவற்றிற்கெல்லாம் மேலாக, இலங்கை மன்னன் வஞ்சி வந்ததற்கு இலங்கை வரலாறோ தென்னிந்திய வரலாறோ சான்று பகரவில்லை என்பது நினைவில் கொள்ளத்தக்கது ஒன்றே. இவற்றையெல்லாம் நோக்கத், தம் கற்பனைக் காப்பியத்தில் இளங்கோவடிகள் 'கயவாகு வேந்தன்' என்றெழுதவில்லை என்பது உறுதிப்படுகின்றது.

எனவே 'காவல்' என்று இளங்கோவடிகள் வரந்தருகாதையில் எழுதிய சொல் எவ்வாறு 'கயவாகு' என்று மாறியது என்பதைக் காண்போம். இளங்கோவடிகள் உண்மையான சமணர். பொய் கூறாதவர்; ஏதோ தாம் எடுத்துக்கொண்ட கொள்கையினை விளக்குவதற்காக என்றாலும், மறந்தும் அவர் எங்கேயும் உண்மைக்கு மாறாக எதையும் கூறவில்லை. ஆகவேதான் கண்ணகியின் சிலைபிரதிட்டை செய்தபோது வந்திருந்ததாகக் கூறப்படும் அரசர்களின் பெயர்களைக் கூறாது குடகரும், கொங்கரும், மாளுவவேந்தரும் கடல் சூழ் இலங்கைக் காவல் வேந்தனும் என்று பொதுப்படையாகவே கூறிச் சென்றார்.

## வேறுவேறு காலச் சுவடிகள்

பின்னாளில் ஏடெழுதிய புலவர் யாரோ ஒருவர், தாம் வாழ்ந்திருந்த காலத்து இலங்கை அரசனான இரண்டாம் கஜபாகு (இவர் கி.பி. 1133 தொட்டு 1155 வரை இலங்கையை ஆண்டவர்) விற்குப் பெருமை தேடித் தர வேண்டுமென்று இளங்கோவின் சிலப்பதிகாரத்தைப் படி(பிரதி)யெடுத்தபோது இளங்கோவடிகள் எழுதிய ''காவல்வேந்தன்'' என்னும் தொடரிலுள்ள காவல் எனும் சொல்லை நீக்கிப், பதிலாகக் 'கயவாகு' எனும் பெயரினைப் புகுத்தினார். இவர் எடுத்த சிலப்பதிகாரப் பிரதியைப் பார்த்துப் படியெடுத்தவர்கள் இவர் மாற்றி எழுதிய 'கயவாகு' எனும் பெயரினையே தங்கள் படிகளிலும் எடுத்தெழுதினர்.

ஆகவே இரண்டாம் கயவாகு காலத்திற்கு முன் எடுத்த பிரதிகளிலெல்லாம் 'காவல் வேந்தன்' என்றும் இரண்டாம் கயவாகு காலத்திலும் அதற்குப் பின்னரும் புலவரின் பிரதியைப் படியெடுத்தவர்கள் சுவடிகளில் 'கயவாகு வேந்தனும்'' என்ற தொடரும் காணப்பட்டது.

கி.பி. 173 முதல் 196 வரையிலும் ஒரு கயவாகு வேந்தனும் கி.பி. 1133 முதல் 1155 வரையிலும் இன்னொரு கயவாகு வேந்தனும் இலங்கையை ஆண்டதாகக் கூறுவதால் இவ்விரு கயவாகு அரசர்களில் யார் இளங்கோவடிகள் காலத்தவர் என்ற கேள்வி இயல்பாகவே எழுகிறது.

சிலப்பதிகாரத்தில் கரிகாலன் என்ற பெயரும், காதையிறுதியில் காணப்படும் வெண்பாக்களில் நெடுஞ்செழியன் என்ற பெயரும், உரைபெறு கட்டுரையில் வெற்றிவேல் செழியன், கொங்கிளங்கோசர், பெருங்கிள்ளி[7] போன்ற பெயர்களும் காணப்படுவது கொண்டு கி.பி. 1892 இல் உ. வே. சாமிநாதையரவர்கள் சிலப்பதிகாரத்தை முதன் முதலில் பதிப்பித்தபோது கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கயவாகுவின் காலத்தில் இயற்றப்பட்டதுதான் சிலப்பதிகாரம் என்ற யூகத்தில் சிலப்பதிகாரம் இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த காப்பியம் என்று எழுதினார். இதனையே இன்று வரையிலும் உள்ள அத்தனைத் தமிழாசிரியர்களும் ஒருசில வரலாற்றாசிரியர்களும் பின்பற்றி வருகிறார்கள்.

ஆனால் சிலப்பதிகாரக்காதைகளின் இறுதியில் காணப்படும் வெண்பாக்களும் உரைபெறு கட்டுரையிலும் பாடபேதமாக வருந்தரு காதையிலும் 'கயவாகு' எனும் சொல்லும் இடைச் செருகல்கள், பின்னால் - கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காணப்படாமல் கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் (பன்னிரண்டாம் நூற்றாண்டுப் புலவரின் இடைச் செருகலுக்குப்பின்) எழுந்த கி.பி. பதினாறாம் நூற்றாண்டு இராஜவழி (இராசாவலி)யில் மட்டும் காணப்படுகிறது என்ற உண்மையினை அன்று (கி.பி. 1892இல்) டாக்டர். அய்யரவர்கள் உணர்ந்திருப்பாரானால் அவர் உறுதியாகச் சிலப்பதிகாரம் கி.பி. 2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று சொல்லியிருக்க மாட்டார். ஏனென்றால் வெண்பாக்களும் காதையிறுதியில் வரும் கட்டுரைகளும் உரை பெறு கட்டுரையும் செருகல்கள் என்பது தெளிவாகின்றது.

ஆகவே மதுரைக் காண்டத்தின் இறுதிக் காதையான (23) கட்டுரைக் காதையின் முடிவில் வெண்பாவிற்குப் பின்னால் காணப்படும் கட்டுரையில் மட்டும்தான் பாண்டிய ன் நெடுஞ்செழியன் எனும் பெயர் காணப்படுகின்றது. மாறாகச் சிலப்பதிகாரத்தின் முப்பது காதைகளில் ஓரிடத்திலாவது நெடுஞ்செழியன் எனும் பெயர் காணப்படவில்லை. ஆகவேதான் உண்மையே பேசும் பண்பினரான இளங்கோ தம் நூலுள் எவ்விடத்தும் கரிகாலன் என்றோ, கயவாகு என்றோ நெடுஞ்செழியன் என்றோ கூறவில்லை. அரங்கேற்றுக் காதையில் 'சூழ் கழல் மன்னற்கு' (அடி 11) என்பதற்குக் கி.பி.

14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அரும்பதவுரைக்காரர்தான் 'சோழன் கரிகாற் பெருவளத்தான் என்று பொருள் கூறுகிறார்.

மதுரைக் காண்டம் 21-வது வஞ்சினமாலையில் ஆதிமந்தியார் கதையைக் குறிப்பிடுமிடத்தில் மட்டும்தான் கரிகாலன் பெயரை (அடி 11) இளங்கோ கூறுகின்றார். இங்கேயும் ஒரு பழைய நிகழ்ச்சியை கூறுமுகத்தான் அப்பெயரைக் குறிப்பிடுகின்றார்.

ஆகவே கரிகாலன் இளங்கோவடிகள் காலத்தவரன்று. மேலும் கரிகாலன் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என்றுதான் வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர். (Historical sketchess of Aneiant Deccan P. 391. K.V.S. Iyer 1917) இவற்றால் இளங்கோ கயவாகு எனும் பெயரை எழுதவில்லை; அதனால் அவர் கயவாகு காலத்தவராகார்.

. இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் முழுவதிலும் யாண்டும் சோழன் பாண்டியன் ஆகிய மன்னரது இயற்பெயர் கூறவில்லை என்பதேயது.

பாண்டியன் நெடுஞ்செழியன் என்று பெயர் கூறிய ஓரிடமும் (2: 23: கட்டுரை 17 - 18) இடைச் செருகல் என்று நினைக்க வேண்டியதாயுள்ளது.[9]

வாதத்திற்காக இடைச்செருகல் இல்லை என்று கொண்டாலும், வெண்பாவில் கூறப்படும் நெடுஞ்செழியன் எந்த நெடுஞ்செழியன் என்ற கேள்வி எழுகின்றது. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனா? அல்லது ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனா? இவ்விருவரும் எவ்வாறு துஞ்சினார்கள் என்பதற்கு இலக்கியத்தில் ஆதாரம் இல்லை. அவ்வாறிருக்க, சிலப்பதிகாரக் கதையின்படி பாண்டிய மன்னன் சிங்காதனத்தில் அமர்ந்திருந்தபடியே உயிர் துறக்கின்றான் என்பதால், அவனை, அரசு கட்டில் துஞ்சிய நெடுஞ்செழியன்' என வெண்பா ஆசிரியர் கூறினாலும் அதற்குச் சங்க இலக்கியங்களில் எவ்விதச் சான்றுகளும் இல்லை என்பது இங்கு நோக்கத்தக்கது.

அதேபோல் சிலப்பதிகார வரந்தரு காதையில் இலங்கை வேந்தன் தன்னாட்டகத்துக் கண்ணகிக்குக் கோவில் எடுத்ததாகக் கூறப்படாதிருக்க உரைபெறு கட்டுரையில் மட்டும்தான் அச்செய்தி கூறப்பட்டிருக்கிறது என்பது சிந்தித்தற்குரியது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மகாவம் சமென்னும் இலங்கை வரலாற்று நூலில் இச்செய்தி கூறப்படாதிருக்க, பதினாறாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இலங்கையின் இன்னொரு வரலாற்று நூலான 'இராஜவழி' என்னும் நூலில்தான் இச்செய்தி காணப்படுகின்றது என்பதும்,[10] உரைபெறு கட்டுரை முதலியன இடைச்செருகல்கள் என்ற கொள்கையினையும் 'கயவாகு வேந்தன்' என்ற திருத்தம் பதின்மூன்றாம் நூற்றாண்டளவில் ஏடெழுதிய புலவரொருவரால் செய்யப்பட்டது என்ற உண்மையினையும் தான் அரண் செய்கின்றன.[11]

இனி, கடல்பிறக்கோட்டிய வெல் கெழுகுட்டுவன் காலத்தவராக இருந்த சோழபாண்டிய அரசர்களைப் பற்றிக் காண்போம்.

கடல் பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவனையும் அவன் தந்தை குடக்கோ நெடுஞ்சேரலாதனையும் பாடியவர் பரணர். அவர் கரிகாலன் தந்தையான உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியை, புறம் 4ஆம் பாட்டில் பாடியுள்ளார்; குடக்கோ நெடுஞ்சேரலாதனும் வேல் பல் தடக்கைப் பெருவிறல் கிள்ளியும் பொருது வீழ்ந்தபோது (புறம் 63ஆம் பாட்டில்) அவர்களையும் பாடியுள்ளார். இவர்களைப் புறம் - 368ஆம் பாட்டில் கழாத் தலையாரும் பாடியுள்ளார். இக்கழாத்தலையாரும் சேரமான் பெருஞ்சேரலாதன் கரிகாலனொடு பொருது புறப்புண்பட்டுக் கிடந்தபோது அவனைப் புறப்பாட்டு 65இல் புகழ்ந்து பாடியுள்ளார்.

இதினின்றும், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனொடு பொருத சோழன் வேல்பல் தடக்கைப் பெருவிறல் கிள்ளியும் உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னியும் ஒருவர் என்பதும் கரிகாலனால் வெல்லப்பட்டு, புறப்புண் நாணி வடக்கிருந்த சேரமான் பெருஞ்சேரலாதன் குடக்கோ நெடுஞ்சேரலாதன் அன்று என்பதும், அரிசில் கிழாரால் பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தில் புகழப்பட்ட பெருஞ்சேரல் இரும்பொறையே என்பதும் பெறப்படும்.[12] இளஞ்சேட் சென்னியை 266ஆம் புறப்பாட்டில் பாடிய பெருங்குன்றூர்க்கிழார், அவன் மகன் கரிகாலனைப் பாடாமைக்குக் காரணம், தான் ஒன்பதாம் பத்தில் புகழ்ந்து பாடிய இளஞ்சேரலிரும் பொறையின் தந்தையான பெருஞ்சேரலிரும்பொறையை (குடக்கோப் பெருஞ்சேரலாதனை)ப் புறப் புண்பட்டு வடக்கிருக்கும்படிச் செய்தமையே யென்பதும் உய்த்துணரப்படும்.

மேற்கூறியவற்றினின்றும், குட்டுவனும், கரிகாலனும் சமகாலத்தவர் எனினும், கடல் பிறக்கோட்டிய குட்டுவனின் முதுமைப்பருவத்திலும் பரணரின் முதுமைப்பருவத்திலும்தான் கரிகாலன் வாழ்ந்திருக்க வேண்டும் என எண்ணுதல் தகும்.

ஆனால் சிலப்பதிகாரத்தைப் பொறுத்த மட்டிலும் அதில்வரும் சேரவரசனான செங்குட்டுவன் காலத்தில் வாழ்ந்தவர் கரிகாலன் என்று அந்நூலுள் யாண்டும் கூறப்படவில்லை யென்பதை அறியலாம். உரையாசிரியர்தாம் கரிகாலன் என்னும் பெயரை எடுத்தாண்டுள்ளார். சிலப்பதிகாரத்தில் 'கரிகாலன்' எனப்பொருள் கொள்ளத்தகும் இடங்கள் இவை,

| | |
|---|---|
| 'பெருநில முழுதாளும் பெருமகன்' | சிலம்பு 1 : 1 : 31 |
| 'செருமிகு சினவேற் செம்பியன் | „ 1 : 1 : 67 |
| சூழ்கழல் மன்னற்குக் காட்டல் வேண்டி | „ 1 : 3 : 11 |
| கொடுவரி யொற்றிக் கொள்கையாற் | |
| பெயர் வேற்கு' | „ 1 : 5 : 98 |

இருநில மன்னற்குப் பெருவளங்காட் „ 1 : 5 : 212
உழைப்புலிக் கொடித்தேர் உரவோன் „ 1 : 10 : 142
வேந்துறு சிறப்பின் விழச் சீரெய்திய „ 2 : 15 : 21

மேற்கூறிய வரிகளில் வரும் பெருமகன், செம்பியன், மன்னன், உரவோன் ஆகிய சொற்களும் 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த உரையாசிரியர்தாம் கரிகாலன் எனப்பொருள் எழுதியுள்ளார்.

**கரிகாலன் யார்?**

இனிக் 'கரிகாலன்' என்ற பெயர் எடுத்தாளப்படும் இரண்டிடங்களிலும், கரிகாலனை நேரடியாகச் சிலப்பதிகாரக் கதையோடு தொடர்புடையவனாகக் காட்டாமல், இளங்கோவடிகள் இறந்த கால நிகழ்ச்சிகளைச் சுட்டிக்காட்ட வந்த நிலையில்தான் அப்பெயரினைப் பயன்படுத்தியுள்ளார் என்பது அறியத் தக்கது. கடலாடு காதையில் கடற்கரை ஆரவாரத்தைப் பற்றிக் குறிப்பிட வந்தபோது,

'விண் பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்
தண்பதங் கொள்ளுந் தலைநாட் போல
வேறுவேறு கோலத்து வேறு வேறு தும்பலை'

- சிலம்பு 1 : 6 : 158 - 60.

என்றும் கூறியுள்ளார்.

இளங்கோவடிகள் இறந்த கால நிகழ்ச்சிகளைக் கூறுமுகத்தான் 'கரிகாலன்' என்ற பெயரைப் பயன்படுத்தியிருக்கின்றாரே யன்றி, நேரடி நிகழ்ச்சியின் பொருட்டு அப்பெயரைப் பயன்படுத்தவில்லை யென்பது கண்கூடு. மேற்கூறிய எடுத்துக்காட்டுகளினின்றும், இளங்கோவடிகள் வரலாற்று வேல்கெழு குட்டுவனின் காலத்தவனான கரிகாலனின் பெயரை நூலில் நேரடியாகக் கூறாமைக்குக் காரணம், தன் காப்பியத் தலைவன் செங்குட்டுவனோ வரலாற்றுக் கரிகாலன் காலத்தில் வாழவில்லை. ஆகவே தம் காலத்தில் கரிகாலன் வாழ்ந்தான் என்று எழுதினால் அது உண்மையாகாது, பொய்சொன்ன குற்றத்திற்குத் தாம் ஆளாக நேரிடும் என்ற அச்சம்தான், தாம் கற்பனையாகப் படைத்த காப்பியமான சிலம்புக்குப் பழமைகாட்ட வேண்டிய வரலாற்றுப் பாத்திரங்களைப் படைத்தாரேயன்றி வேறன்று என்பது, அவர் நூன் முழுவதும் இயற்பெயர் சூட்டிச் செல்லாத போக்கினாலும் உறுதியாகின்றது.

இனி, வரலாற்றுக் குட்டுவன், கரிகாலன் இவர்கள் காலத்துப் பாண்டியன் யாரெனக் காண்போம். படுகடல் ஓட்டிய வெல்கெழு குட்டுவனைப் பரணர் பதிற்றுப் பத்து ஐந்தாம்பத்தில் பத்துப் பாட்டுகளிலும், புறநானூற்றில் ஒரு (369ஆம்) பாடலிலும் பாடியுள்ளார். இதே பரணர் வேல்கெழு குட்டுவனின் தந்தையான குடக்கோ நெடுஞ்சேரலாதனையும் புறம் - 63ஆம் பாடலில்

பாடியுள்ளார். இச் சேரனைக் கழாத்தலையாரும் புறம் - 62ஆம் பாடலிலும் 368ஆம் பாடலிலும் பாடியுள்ளார்.

சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார், முடத்தாமக்கண்ணியார், வெண்ணிக் குயத்தியார் ஆகியோர் முறையே, பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை, 66ஆம் புறப்பாடல் என்பவற்றிலும், கழாத்தலையார் புறம் - 65ஆம் பாடலிலும், கருங்குழலாதனார் புறம் - 224 -லிலும் பாடியுள்ளார்.

## நெடுஞ்செழியன் காலம்

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கரிகாலன் காலத்தவன் என்றால் அவனைப் பாடிய இப்புலவர்களில் யாரேனும் ஒருவர் இவனைப் பாடாமலிருப்பாரா? ஆயின் யாருமே நெடுஞ்செழியனைப் பாடவில்லை என்பது கண்கூடு.

பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார் மதுரைக் காஞ்சியிலும், புறம் - 24, 26 ஆகிய பாடல்களிலும், கல்லாடனார், புறம் - 23, 25 பாடல்களிலும், இடைக்குன்றூர்க்கிழார் புறம் - 76 முதல் 79 வரை உள்ள பாடல்களிலும் பாடியுள்ளனர். ஆனால் இவர்கள் யாருமே சேரன் கடல்பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவனையோ, சோழன் கரிகாலனையோ பாடவில்லை என்பது நோக்கத்தக்கது. இதனின்றும், குட்டுவனும், கரிகாலனும் வாழ்ந்த காலமும், பாண்டியன் நெடுஞ்செழியன் வாழ்ந்த காலமும் வேறு என்பது பெறப்படும்.

பரணர் அகம். 208ஆம் பாடலில் ஓரியின் கொல்லிமலையைப் புகழ்ந்துள்ளார். ஆயின் கல்லாடனார் அகம் - 209 ஆம் செய்யுளில் அவ்வோரியைக் காரி கொன்றுவிட்டதாகக் கூறுகின்றார். இதனாலும் கல்லாடனார் பரணருக்கு ஒரு தலைமுறைக்கேனும் பிந்தியவர் என்று தெரிகின்றது.

அன்னி மிஞிலியையும், ஆய் எயினன் அத்தகைய பரணர் ஒரு நிலையில் வைத்துக்கூற, அவர்களை நக்கீரர் அகம். 126 ஆம் பாடலில் வேறொரு நிலையில் வைத்துக் கூறுகிறார். களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் நன்னனை யொழித்த செய்தியை, இறந்த காலத்தில் வைத்து, கல்லாடனார் (அகம் 199) கூறுவதினின்றும் அவரும், நக்கீரரும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும், குட்டுவன், கரிகாலன் இவர்கட்கு ஒரு தலைமுறைக்கேனும் பிற்பட்டவர் என்பது உறுதிப்படும்.

கடல்பிறக் கோட்டிய வெல்கெழு குட்டுவன், சோழன் கரிகாலன் ஆகிய இவர்கள் காலத்தில் வாழ்ந்த பாண்டியனாக ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனைச் சிலர் கொண்டாலும்[13] அது பொருந்தாது. ஏனெனில் கல்வியின் சிறப்பினைப்பற்றி எடுத்தோதிய (புறம். 183) அப்பாண்டியனா, குற்றத்தை ஆராயாது பொற்கொல்லனின் சொற்கேட்டுக் கோவலனைக்

கொல்வித்தவன்? - என்று நடு நின்ற நெஞ்சம் ஐயுறும்; மேலும் குட்டுவனையும் கரிகாலனையும் பாடிய புலவர்கள் யாரும் அவனைப் பாடவில்லை என்பதும் கண்கூடு.

இனி, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் பிணிக்கப்பட்ட யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையைக் குறுங்கோழியூர்க் கிழார் புறம் - 16ஆம் பாடலில் பாடியுள்ளார். அவ்விரும் பொறையைப் பொருந்திலிளங்கீரனார் பாடும்போது (புறம் - 53) கபிலன் உயிரோடு இல்லை என்பதைக் குறிப்பிடுகின்றார். கபிலன் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பதிற்றுப்பத்து ஏழாம்பத்தில் பாடினார். செல்வக்கடுங்கோவை யடுத்துப் பெருஞ்சேர லிரும்பொறையும் அவனுக்குப்பின் அவன் மகன் இளஞ்சேர லிரும்பொறையும் ஆண்டனர். அவனுக்குப் பிறகுதான் மாந்தரஞ்சேர லிரும்பொறை ஆட்சிக்கு வருகிறார்.

இவனையே நெடுஞ்செழியன் பிணித்தான் என்பதால் கடுங்கோ வாழியாதனுக்கு மூன்று தலைமுறைகளுக்குப் பின்னரும், கரிகாலனுக்கு இரண்டு தலைமுறைகளுக்குப் பின்னரும் வாழ்ந்தவன் நெடுஞ்செழியன் என்பது பெறப்படும். இக்கொள்கை இன்னொன்றாலும் வலியுறும். வெல்கெழு குட்டுவனைப் பாடிய பரணர், பசும்பூண் பாண்டியனை அகம் - 162, 266 என்னும் பாடல்களில் பாடினார். அப்பாண்டியனை மதுரைக் கணக்காயனார் அகம் - 348ஆம் பாடலில் பாடியுள்ளார். கணக்காயனார் மகனார் நக்கீரனார் அகம் - 46ஆம் பாடலில் ஆலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியுள்ளார். இதனாலும் பரணர் காலத்திற்குப் பிற்பட்டவன் நெடுஞ்செழியன் என்பது உறுதிப்படுகிறது.

### கற்பனைப் பாத்திரங்கள்

இனி, கோவலனைக் கொல்வித்த பாண்டியனுக்குப் பிறகு கொற்கையிலிருந்து வெற்றிவேற் செழியன், பொற்கொல்லர் ஆயிரவரைத் திருமாபத்தினிக்கு ஒரு நாளில் உயிர்ப்பலியூட்டினான் என்று நீர்ப்படைக் காதையிலும் (வரி 127 - 3), "நங்கைக்கு விழவெடுக்க நாடுமலிய மழை பெய்து நோயும் துன்பமும் நீங்கியது" என்று உரைபெறு கட்டுரையிலும் சொன்னாலும், அதே உரைபெறு கட்டுரையில்[(2)] பெருங்கிள்ளி கோழியகத்து எத்திறத்தானும் வரந்தருமிவளோர் பத்தினிக் கடவுளாகுமென்று நங்கைக்குப் பத்தினிக் கோட்டமும் சமைத்து நித்தல் விழாவணி நிகழ்வித்தான்' என்று சொன்னாலும், வெற்றிவேற் செழியனும், பெருங்கிள்ளியும் வரலாற்றுப் பாத்திரங்களல்லர் என்பது உண்மை.

கரிகாலனுக்குத் தந்தை இளஞ்சேட்சென்னி என்பதற்கு ஆதாரம் (பொருநராற்றுப்படை வரி 13) இருக்கிறதே தவிர, தம்பி மகன் என்ற உறவு முறையில் பெருங்கிள்ளியைக் காட்டும் சான்றுகள் ஒன்றுமே இல்லை என்பது மனத்தில் நிறுத்த வேண்டியதொன்று.

இதே போன்று, உரைபெறு கட்டுரையில்[3] கயவாகும் நங்கைக்கு, ''நாட்பலி பீடிகைக் கோட்டமுந் துறத்தாங்கு, அரந்தை கெடுத்து வரந்தருமிவளென ஆடித்திங்களாக வையினாங்கோர் பாடிவிழாக் கோள் பன்முறையெடுப்ப; மழைவீற்றிருந்து வளம் பல பெருகிப் பிழையாவிளையுள் நாடாயிற்று' என்று கூறப்படினும், வரந்தரு காதையில் இலங்கை வேந்தன் தன்னாட்டில் கண்ணகிக்குக் கோயிலெடுத்ததாகக் கூறாததனாலும் அதே காதையில் 'கயவாகு' என்ற சொல்லிற்குப் பதிலாக 'காவல்' என்ற சொல் பிரதிபேதமாகக் காணப்படுவதாலும், இளங்கோவடிகள் சிலம்பில் 'கயவாகு' வேந்தன் என்று எழுதவில்லை என்றே கொள்ளல் வேண்டும்.

எனவே இதுகாறும் கூறியவற்றிலிருந்து, சோழன் கரிகாலன், பாண்டியனைத் தலையாலங்கானத்துச் செருவென்ற (அல்லது ஆரியப்படை கடந்த) நெடுஞ்செழியன், சேரன் கடல் பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவன் ஆகிய வரலாற்று மன்னர்களை, இளங்கோவடிகள் தம் கற்பனைக் காப்பியத்தின் பாத்திரங்களான சோழன் திருமாவளவன், பாண்டியன் அடுபோர்ச் செழியன், சேரன் செங்குட்டுவன் ஆக மாற்றிப் படைத்தாரே யன்றி, அவ்வரலாற்று வேந்தர்கள் வாழ்ந்த காலத்தில் சிலப்பதிகாரக் கதை நிகழ்ச்சி நடைபெறவோ, அல்லது இளங்கோவடிகள் வாழவோ செய்யவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது. ஆகவே சிலப்பதிகாரத்தில் உலவும் செங்குட்டுவன், திருமாவளவன், அடுபோர் (அல்லது அரசு கட்டில் துஞ்சிய) செழியன் என்ற பாத்திரங்கள் வரலாற்று மன்னர்களின் தழுவல்களேயன்றி வேறன்று என்பதும் உறுதியாகின்றது.

## பேகன் - கண்ணகி

இக்கருத்து இன்னொரு சான்றினாலும் உறுதிப்படும்.

கடல் பிறக்கோட்டிய குட்டுவனை ஐந்தாம் பத்தில் பாடியவர் பரணர். பரணர் காலத்தில் வாழ்ந்தவர் கபிலர். அரிசில் கிழாரும் இவ்விருவர் காலத்தவரே. இந் நால்வர் காலத்தில் வாழ்ந்த கண்ணகி - பேகன் தம்பதியரிடையே நேர்ந்த பிணக்கினைத் தீர்த்து இருவரையும் ஒன்று சேர்க்கப் பரணர், கபிலர், அரிசில்கிழார் ஆகிய மூவரும் முயன்றனர் என்பதைப் புறநானூறு 141, 142, 143, 144, 145, 146 ஆகிய ஆறு பாடல்களினால் அறிகின்றோம். ஆனால் அவர்கள் முயற்சி பலனளிக்காமற் போகவே கண்ணகி பேகனிடமிருந்து பிரிந்து வாழும் துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் தனது இடமார்பினை அறுத்து உயிரைப் போக்கினாள் என்பது கண்ணகிக்கும் ஒரு நூற்றாண்டிற்கும் பின்னால் வாழ்ந்த மாங்குடி கிழாரின் மகன் மருதனிள நாகனார் பாடிய நற்றிணை 216ஆம் பாடலால் அறியலாகும்.

இங்கு எழுகின்ற கேள்வி இது, கண்ணகியும் அவள் கணவனும் கடல் பிறக்கோட்டிய (படுகடல் ஓட்டிய) குட்டுவனின் காலத்தில் வாழ்ந்தவர்களாக இருக்க, அதே குட்டுவனை - அவன் கதையைப் பாடிய சிலப்பதிகாரத்தில் மட்டும் இக் கண்ணகியும் பேகனும் எவ்வாறு கண்ணகியும் கோவலனுமாக

உரு மாறினார்கள்? (செங்) குட்டுவன் காலத்தில் கண்ணகி - பேகன், கண்ணகி - கோவலன் என்று இரு தம்பதியர் இருந்தனரா?

## இளங்கோ எங்கே?

கடம்பர் மீது சேரலாதன் பெற்ற வெற்றியினைக் குமட்டூர் கண்ணனாரும் பரணரும் இரண்டு, ஐந்து ஆகிய பதிற்றுப்பத்தில் பாடியிருக்க, இக்கடம்பர்மீது அதே சேரலாதன் கொண்ட வெற்றியை அவ்வாறே பாடும் சிலப்பதிகாரத்தில் மட்டும் பரணர் எப்படிக் காணாமல் போனார். நமக்கு இன்று கிடைத்திருக்கும் பதிற்றுப்பத்துப் எண்பது பாடல்களிலும், மற்றும் புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை ஆகிய சங்கப்பாடல்களிலும் இப்பேர்ப்பட்ட பெருங்காப்பியத்தைப் பாடிய இளங்கோவடிகள் பெயர் மட்டும் எவ்வாறு இல்லாமல் போயிற்று? இவர் பாடிய பாடல்கள் ஒன்றேனும் சங்கப்பாடல்களில் இல்லாமல் போனது ஏன்?

## இளங்கோ செயல்

இவை அனைத்திற்கும் ஒரே விடைதான் இருக்கமுடியும்; அது கண்ணகிக்கதை நிகழ்ந்தபோது இளங்கோவடிகள் இருக்கவில்லை. மிகப் பிற்காலத்தில் அவர் அக்கதையைத் தான் எடுத்துக்கொண்ட கொள்கையினை நிலைநாட்டும் கருவியாக ஏற்றுக் கொண்டபோது கண்ணகி - பேகன் என்ற இருவரில் பேகன் பெயரைக் கோவலன் என்று மாற்றினார். ஒரு முலை அறுத்து உயிர்துறந்த கண்ணகியின் செயலை, மதுரையை எரிப்பதற்காக அவ்வாறு செய்ததாகக் கற்பனை செய்தார். வையாவி நாட்டின் கதையை முத்தமிழ் நாட்டின் கதையாக விரித்துக் கூறினார் என்பது ஆகும். இக்காரணங்களால்தான் இளங்கோவடிகள் எழுதிய பாடல்கள் சங்கச் செய்யுட்களில் இல்லாமல் போயிற்று. சிலப்பதிகாரத்தில் குட்டுவனின் அவைப்புலவரான பரணர் காணாமல் போனார். இதனால் சிலப்பதிகாரம் வரலாற்று நூல் அன்று, கற்பனைக் கதையேயாகும் என்பது தெளிவாகின்றது.

## குறிப்புகள்

1. சிலப்பதிகாரம் உ. வே. சாமிநாதையர், தியாகராச விலாச வெளியீடு, ஏழாம்பதிப்பு - 1960; பக். xvii.

2. His (Gajabhahu) rule According to geiger is chronology lasted from A. D. 171 - 193 (some contribution of South India to Indian Culture. chapter iii. page 87, by Dr. S. Krishnaswamy Iyengar. Gajabhahu II ruled Ceylon on 1132 to 1153.

3. When the suggestion was made that Gayabhahu the king of Ceylon. Who was the contemporary of the Cera king Senguttuvan was no other than Gayabhahu 1 of the Mahavamsa who ruled from. A. D. 113 - 135, Dr. Hultysch entered a cave at saying (S. I. I. ii. P. 378) "with due respect to Mr. Kumarasawamy's sagacaty I am not prepared to accept this view, unless the Identity of name, but proved by Internal

reasons and until the chronlogy of the earlier History' - Colas P. 53, second Ed. 1955, K. A. N. Sastri Mads. Uty. Historical series - 9.

4. பி. சோ. சரித்திரம். பகுதி I. பக். 147. தி. வை. ச. பண்டாரத்தார்.

5. Mahavamsa itself has very little to say of him (Gayavahu 1) except that he built vihara in honour of his mother and a stupa" - some contribution of South India to Indian Culture. Chap. iii. p. 87. Dr. S. Krishnaswamy Iyengar.

6. The Mahavamsa a Fifth Century hisotrical account of Ceylon does not say anything about the king is (Gayabhahu 18) attendence during the conceralting ceremony at the Cera capital or about his intoducing Kannagi worship in his own Country. It is only Rajavali, a late chronicle of the sixteenth century that connects kannagi worship with Gayavhahu and this is not of any historical value and cannot be relied on' (History of Tamil Language and Literature, P. 142, S. Vaiyapuri Pillai. வேந்தன் என்ற தொடர் 'கயவாகு' வேந்தன் என்று மாற்றப்பட்டிருக்கின்றது. உண்மையில் இளங்கோ கயவாகு வேந்தன் என்று எழுதியிருப்பாரானால் 5 ஆம் நூற்றாண்டு மஹாவம் சத்திலாவது அல்லது அதற்கும் பின்னர் எழுந்த சுள்ள வம்சத்திலாவது இச்செய்தி குறிக்கப்பட்டிருக்கும். அவ்வாறு அவற்றில் குறிப்பிடவில்லை என்பதும் 16ஆம் நூற்றாண்டில் எழுந்த 'இராசவழி' யில்தான் காணப்படுகின்றது என்பதும், 'கயவாகு' எனும் சொல் காவல் எனும் சொல்லுக்குப் பதிலாக 2ஆம் கயவாகு காலத்தில் அல்லது அதற்கும் பின்னர் செருகியிருக்க வேண்டும் என்பதும் உறுதிப்படுகின்றது.

P. T. ஸ்ரீநிவாச அய்யங்காரும் History of Tamils என்ற நூலில் 'காவல்' எனும் சொல் இருப்பது கொண்டு 'கயவாகு' ஓர் இடைச் செருகல் என்பதனால் அதன் அடிப்படையில் முதல் கயவாகு காலம் எனக் கொள்ள முடியாது என்பார்.

4. சிலப்பதிகாரம் பக். 585. அ. கு. 3, உ. வே. சாமிநாதையர், ஏழாம்பதிப்பு. 1960, தியாகராச விலாசம் வெளியீடு.

5. "ஸ்ரீ ஜயபாகு தேவர்க்கு யாண்டு எட்டாவது பாண்டியனார் வீரப்பெருமாள் நம்பிராட்டியார் குலோத்துங்க சோழர் திருமகளார் சுத்தமல்லியாழ்வார் மாகலான விக்கிரமசலா மேகபுரத்து விக்கிரம சலாமேக ஈஸ்வரமுடையார்க்குச் சந்திராதித்தவல் நின்றெரிய இட்ட திரு நந்தா விளக்கொன்று இட்ட காசு பத்து முச்சாண் நீளத்தில் தராநிலை விளக்கொன்று' - Epigraphia Zelanica Vol. iii p. p. 308 - 312.; பி. சோ. ச. பகு. ii. பக். 54, தி. வை. ச. பண்டாரத்தார்.

6. Epigraphia Zelanica Vol. iii No. i. பி. சோ. ச. பகுதி ii, பக். 31. தி. வை. ச. பண்டாரத்தார்.

7. சுத்தமல்லி யாழ்வார் இலங்கை வேந்தனாகிய வீரபாகுத் தேவனுக்கு மணஞ்செய்து கொடுக்கப்பெற்றமை ஈழநாட்டிலுள்ள ஓர் கல்வெட்டால் வெளியாகின்றது. பி. சோ. ச. பகு. ii. பக். 55. தி. வை. ச. பண்டாரத்தார்.

8. க்ஷயம் என்னும் வடசொல் தமிழில் சயம் என வழங்கும். அதுவே கயம் எனவும் வழங்கும். உரையிற் கோடலால் க்ஷீரம் கீரம் என முப்பத்தைந்தாம் மெய்மொழி முதலில் ஒரு ககரமுமாகுமெனக் கொள்க (நன்னூல், பதவியல் 20 : சூத்திரம் : உரை; காண்டிகை யுரை - 25ஆம் பதிப்பு 1968.,

9. உரைபெறு கட்டுரையும் வெண்பாக்களும் இடைச்செருகல் என நினைக்க இடம் உள்ளது. முப்பது காதைகளில் பதினெட்டுக் காதைகளில் வெண்பாக்கள் இல்லை. சில காதைகளில் அடியார்க்கு நல்லார் உரைக்குப் பிறகு காணப்படுகிறது : (காதை 4, 6). இரண்டு, இருபத்தொன்று ஆகிய காதைகளில் வரும் வெண்பா பல பிரதிகளில் காணப்படவில்லை. இருபத்து மூன்றாம் காதை வெண்பாவில், திருக்குறளில் 55 ஆம் குறளின் முதலடி மாறுதலின்றி அப்படியே பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இரண்டாம் நூற்றாண்டில் எழுந்தது எனப்படும் சிலப்பதிகாரத்தில் ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டு குறட்பா வரி எவ்வாறு வரும்? இவற்றையெல்லாம் நோக்க மேலே குறிப்பிட்ட உரைபெறு கட்டுரை, மற்ற மூன்று கட்டுரைகள் இடைச்செருகல்கள் என்ற கொள்கை உண்மையாதல் காண்க.

10. "It is only Rajavali, a late chronicle of the sixteenth Century that connects kannagi worship with Gayabhahu and this is not of any historical value and cannot be relied on" - History of Tamil Language and Literature page 142, S. Vaiyapuri Pillai, New Century Book House. Mds.

11. உரைபெறு கட்டுரை இடைச் செருகல் என்பதற்கு இன்னொரு காரணத்தையும் காட்டலாம். சிலப்பதிகார காதைகள் யாதொன்றினுள்ளும் 'பெருங்கிள்ளி' என்னும் பெயர் காணப்படவில்லை. அவ்வாறே கொங்கிளங்கோசரும், உரைபெறு கட்டுரைக்கும் அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் உரைசெய்திருக்கின்றமையால் அவர்கள் காலமாகிய 13, 14 ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் இவ்விடைச் செருகல்கள் நடைபெற்றிருக்க வேண்டும் என ஊகிக்க இடமுள்ளது.

12. செல்வக் கடுங்கோ வாழியாதன் மகன் பெருஞ்சேரலிரும் பொறை அவன் மகன் இளஞ்சேரலிரும் பொறை என்றும் பதிற்றுப் பத்து கூறும். கோ ஆதன் சே(ர)ல் இரும்பொறை, அவன் மகன் பெருங்கடுங்கோன், அவன் மகன் இளங்கடுங்கோன் என்று புகலூர்க் கல்வெட்டு கூறுகின்றது. (An Important Brahmi - Tamil Inscription; Iravatham Mahadevan, I. A. S. In Hindu dt. 7. 3. 1965). எனவே பதிற்றுப்பத்து கூறும் பெருஞ்சேரலிரும் பொறையும் கரிகாலனிடம் பொருது புண்பட்ட பெருஞ்சேரலாதனும் புகலூர்க் கல்வெட்டுக் கூறும் 'பெருங்கடுங்கோனும் ஒருவனே என்பது போதரும்.

13. "சேரன் செங்குட்டுவன்" பக். 68. மயிலை சீனி. வேங்கடசாமி, சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, 1966

# 9. இளங்கோவடிகள் யார்?

சிலப்பதிகாரக் காப்பியத்தை எழுதிய இளங்கோவடிகள், அக்காப்பியத்தில் வரும் சேரநாட்டு வேந்தன் செங்குட்டுவனின் உடன் பிறந்தார்; இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மகன்; செங்குட்டுவனுக்காக அரசைத் துறந்தவர் என்றெல்லாம் அக்காவியம் கூறுகிறது. ஆயின் அக்காப்பியத்தில் காணப்படாத சில விஷயங்களையும் அதன் உரைகாரர் (அரும்பத உரைகாரர்) கூறியிருப்பது இங்குச் சிந்திக்கத் தக்கது.

சிலம்பின் இறுதிக் காதையான வரந்தரு காதையில் தெய்வம் சொன்னதாக வருகின்ற இளங்கோவின் துறவு வரலாற்றில் அவரே,

''வஞ்சிமூதூர் மணிமண்டபத்திடை
நுந்தை தாணிழ லிருந்தோய் நின்னை
அரைசு வீற்றிருக்குந் திருப்பொறியுண்டென்
றுரைசெய்தவன் மேலுறுத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர் தானைச்
செங்குட்டுவன் றன் செல்லனீங்கப்
பகல்செல் வாமிற் படியோர் தன்முன்
அகலிடப் பார மகல் நீங்கிச்
சிந்தை சொல்லாச் சேணெடுந்தூரத்
தந்தமிலின்பத் தரசாள்வேந்தென்
றென்றிற முரைத்த விடையோ ரிளங்கொடி
தன்திற முரைத்த தகைசானன் மொழி''

(வரி 173 - 84)

என்று கூறியிருக்க, அரும்பத வுரைகாரர், ''நுந்தையாகிய சேரலனிடத்தே நீயிருக்க, ஒரு நிமித்திகன் வந்து நின்னைப் பார்த்து அரசு வீற்றிருக்கும் இலக்கணம் உன்னிடம் உண்டென்று சொல்ல, என் தமையனாகிய செங்குட்டுவன் இருக்க இவ்வாறு முறைமை கெடச் சொன்னாயென்று அந்நிமித்திகனை வெகுண்டு நோக்கி......'' என்கிறார். இவரே பதிகத்தில் வரும் 'குடக்கோச்சேர விளங்கோவடிகட்கு' என்ற பகுதிக்குச் சேரலென்றது செங்குட்டுவனை; சேரற்கு இளங்கோவாகிய அடிகட்கென்க என்கிறார். இளங்கோவடிகள், சிலப்பதிகாரத்தில் எவ்விடத்தும் தான் செங்குட்டுவனுக்கு

இளவல் என்று கூறாதிருக்க, அரும்பதவுரைகாரர்தாம் இளங்கோவைச் செங்குட்டுவனுக்குத் தம்பியாக்கிவிட்டார் என்பதே உண்மை.

இளங்கோ என்பது அடிகளாரின் இயற்பெயர் அன்று; 'இளவல்' என்று பொருள்படும் காரணப்பெயரும் அன்று; அது இன்னொரு பெயரின் ஏகதேச மொழிபெயர்ப்பு என்று தோன்றுகிறது.

இளங்கோவடிகள் என்பது சிலப்பதிகாரம் இயற்றிய புலவரின் புனைபெயர் என்பார். எல். டி. சாமிக்கண்ணுபிள்ளையவர்கள்.[1] அடிகள் என்பது கி.பி. 7ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு இறைவனுக்கும் ஒன்பது, பத்தாம் நூற்றாண்டு முதற்கொண்டு, அரசர், அதிகாரிகள், வணிகர், படைவீரர்களுக்கும் இட்டு வழங்கும் வழக்கம் இருந்தது.[2] அக்காலத்துச் சமண, பௌத்த துறவியரும் தங்கள் பெயர்களுக்குப் பின்னால் 'அடிகள்' எனும் தகுதிப் பெயரை வைத்துக் கொள்வது வழக்கம் என்பது வரலாற்றால் அறியலாகும் செய்தியாகும். வச்சிரநந்தி அடிகள், சந்திர நந்தி அடிகள், அஜ்ஜ நந்தி (அச்சணந்தி) அடிகள் என்பவை சமணத்துறவிகளின் பெயர்களில் சிலவாகும். இம்மரபினை ஒட்டியே இளங்கோவடிகளும் கந்தியைக் கவுந்தி அடிகள் என்றார். எனவே முன்னர் கூறிய அப்பதிக வரிக்குக் 'குடக்கோச் சேரனாகிய இளங்கோ அடிகட்கு' என்றுதான் பொருள் கொள்ளவேண்டும். அதுவே உண்மையும் கூட. அவ்வாறு கொண்டிருந்தால் வரந்தருகாதையில் செங்குட்டுவனை, என் தமையனாகிய செங்குட்டுவன் என்று அரும்பதவுரைகாரர் உரை எழுதியிருக்க நேர்ந்திராது.

இளங்கோ எனும் சொல்லுக்கு 'இளவல்' இளவரசன் என்றெல்லாம் பொருள் இருப்பதனால் அடிகளாருக்கு வேறு இயற்பெயர் ஏதேனும் இருந்ததாகக் கொள்ளக்கிடக்கின்றது. குஞ்சிக்குட்ட வர்மனாயின வீரக்குறும்பொறையார் அடிகள் என்று முதலாம் பாற்கரரவிவர்மனின் மகன் அறியப்படுவதால் இந்தக் குஞ்ஞுக்குட்டன் என்னும் பெயரைத்தான் சிறந்ததமிழ் மொழி பெயர்ப்பாக 'இளங்கோவடிகள்' என்று தாமாகவே மாற்றிக் கொண்டாரோ என்று எண்ணவேண்டியதாயுள்ளது. குட்டன் எனும் சொல் குழந்தை எனப் பொருள்பட்டுத் திருமாலைக் குறிக்கக், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதற்கொண்டு ஆழ்வார்கள் பயன்படுத்தி வருவது திவ்வியப் பிரபந்தத்தால் தெரிய வருகிறது.

'என்சிறுகுட்டன், எனக் கோர் இன்ன தென்பிரான்', என்று பெரியாழ்வார் கூறுவது காண்க. குஞ்சு எனும் தமிழ்ச் சொல்லே குஞ்ஞு என்று கி.பி. ஒன்பது, பத்து நூற்றாண்டுகளில் சிதைந்து வழங்குவதாயிற்று. இச்சொல் தமிழகத்தில் குழந்தை என்று பொருள்பட்டு ஆண் மக்களுக்குப் பெயராக இட்டு வழங்கும் வழக்கம் இன்றும் காணலாம். ஆகவே குழந்தை, குஞ்சு, குட்டன், உண்ணி என்பன ஒரு பொருட் பன்மொழிகளாம். எனவே குஞ்ஞுகுட்டன் என்ற தனது இயற்பெயரைத்தான் இளவரசர் இளங்கோ என்று தூய தமிழில் காப்பியத்தில் வழங்கினார் என்று கொள்வது பொருந்தும்.

இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழறிஞர்கள் பலர் தமிழ்ப்பற்றுக் காரணமாகத் தங்கள் வடமொழிப் பெயர்களைத் தூய தமிழ்ப் பெயர்களாக்கி வழங்கினர் என்பது யாவரும் அறிந்ததே.

இவ்வாறு சூரிய நாராயண சாஸ்திரி - பரிதிமாற் கலைஞர் என்றும், கல்யாணசுந்தரம் - மதியழகன், ஞானசுந்தரம் - அறிவழகன், வேதாசலம் - மறைமலை என்றும் பெயர்மாற்றம் பெற்றனர். கம்பர் காலத்தில் அவர் தூமகேது - புகைக்கொடியோன், வஜ்ர தந்தன் - வச்சிரத்தெயிற்றன், யக்ஞசத்ரு - வேள்விப்பகை என்று தமது இராமாயணத்தில் பயன்படுத்தியுள்ளமை காணலாம். அவருக்கு முன்னால் வாழ்ந்த யாப்பருங்கலக் காரிகை ஆசிரியர் அமிதசாகரன் என்ற தமது பெயரை நூலில் அளப்பருங் கசற்பெயரோன் என்று மாற்றியிருப்பதும் காணலாம்.

ஆகவே பிற்காலச்சோழர் காலத்தில் இத்தகையதொரு வழக்கம் இருந்தது. இதனையொட்டிய சிலப்பதிகார ஆசிரியரும் குஞ்நுக் குட்டனெனும் தமது இயற்பெயருக்குப் பழமைதேட விரும்பி ஏகதேசமொழி பெயர்ப்பாக இளங்கோ என்று நூலில் மாற்றியிருத்தல் வேண்டும். இக்கொள்கையினை அரண் செய்வதே போன்று காலஞ்சென்ற எல். டி. சாமிக்கண்ணு பிள்ளையவர்கள் சங்ககாலம் என்பது கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து எட்டாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையுள்ள காலப்பகுதியாகும். ஆகவே கனகசபையின் ஆயிரத்தொண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் என்ற நூற்பெயர் ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் என்று மாற்றப்படல் வேண்டும் என்றும், கண்ணகி கதை முதலாம் கஜபாகுவின் காலமான கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் நிகழ்ந்ததாக இருக்கலாம்; ஆனால் அதனை அடிப்படையாகக் கொண்டு இளங்கோவடிகளால் இயற்றப்பட்ட சிலப்பதிகாரம் எவ்வகையாலும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னால் இயற்றப்பட்டிருத்தல் இயலாது என்று கூறியிருத்தல் காண்க.[3]

## பெயர் மாற்றம்

ஆகவே குஞ்ஞிக்குட்டன் எனும் பெயரினைத் தூய தமிழில் 'இளங்கோ' என்று மொழி பெயர்த்து - தம் நூலுள் இளங்கோவடிகள் பயின்றுள்ளமை அவர் காலத்தில் வாழ்ந்து அவருக்கு நண்பராகவும் இருந்த மதுரைக் கூலவாணிகன் சாத்தனாரும் மணிமேகலை எனும் தமது நூலிலும் எடுத்தாண்டுள்ளமை அறியலாம்.

சிலப்பதிகாரத்திற்கும், மணிமேகலைக்கும் பதிகங்களை எழுதித்தந்த மதுரை தண்டமிழ் ஆசான் சாத்தன் மணிமேகலைப்பதிகத்தில் 'இளங்கோவேந்தன்' என்று கூறியிருப்பது இங்குச் சிந்திக்கத் தக்கதாம். உண்மையில் இளங்கோவடிகள் அரசாட்சி செய்யாமல் துறவை மேற்கொண்டிருந்தால் அவரை நோக்கி 'இளங்கோவேந்தன்' என்று கூறியிருப்பது பொருந்தாதல்லவா?

தண்டமிழ் ஆசான் சாத்தன் முனிவரை (இளங்கோவை) இளங்கோ வேந்தன் என்று பதிகத்தில் குறிப்பிட்டதினின்றும் துறவினை மேற்கொள்வதற்கு முன் இளங்கோ அரசனாக இருந்தார் என்று தானே கொள்ள வேண்டியிருக்கின்றது? குறும்புறை நாட்டை இளவரசராக இருந்து ஆண்டதன் பிற்பாடுதான் குஞ்ஞிக்குட்டவர்மன் என்கின்ற இளங்கோ தம்பிக்காக நாட்டைக் கொடுத்துத் துறவு பூண்டார் என்ற வரலாற்று உண்மை மேற்கூறியதனைத்தானே வலியுறுத்துகின்றது?

மேலும் செங்குட்டுவனுக்கு இளவலாக இருந்து அண்ணனுக்காகத் துறவை மேற்கொள்வதில் என்ன பெருமை இருக்கமுடியும்? அதிலும் மக்கட்தாயம் நிலவியிருந்த மூவரசரிடையே இளங்கோ துறவு பொருளற்றதாக வல்லவா ஆகிவிடுகிறது? தமையனிருக்கத் தம்பிக்கு அரசு உரிமையாகாது என்பது யாவரும் அறிந்த உண்மையன்றோ? இவற்றையெல்லாம் நோக்க 'இளங்கோ' என்பது அடிகளார் தமக்குத்தாமே இட்டுக் கொண்ட புனைபெயர் என்று கொள்வதில் தவறிருக்காது.

அவ்வாறானால் இளங்கோவடிகளுக்கும் செங்குட்டுவனுக்கும் உள்ள உறவு முறை யாது? இளங்கோ செங்குட்டுவனின் தமையன் என்பதற்கான சான்றுகள் சிலப்பதிகாரத்திலேயே உட்புதைந்து கிடக்கின்றன. 'தொன்மைதானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கேற்பச் சங்ககாலத்தில் நிகழ்ந்த பேகன் - கண்ணகி பாத்திரத்தின் பெயரை மட்டும் மாற்றாமல் மற்ற பேகன் முதலிய பாத்திரங்கள் பெயர்களையும் இடப்பெயர்களையும் முழுக்க முழுக்க மாற்றியமைத்துப் பின்னப்பட்ட செய்யுள் வடிவத்திலமைந்த புதினமே சிலப்பதிகாரம் என்றாலும் அது இளங்கோவடிகள் வாழ்ந்த காலத்தில் நிகழ்ந்த சில நிகழ்வுகளையும் உண்மைகளையும் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது என்பது மறுக்கமுடியாததாகும். அந்நிலையில் சிலப்பதிகாரத்தில் வரும் செங்குட்டுவன் சங்க காலத்தில் வாழ்ந்த படுகடல் ஓட்டிய (கடல் பிறக்கோட்டிய), பரணரால் ஐந்தாம் பதிற்றுப்பத்தில் பாடப்பட்ட குட்டுவனின் பிரதிச்சாயை ஆகும். அதனால்தான் சிலப்பதிகாரத்தில் குட்டுவனின் அவைப்புலவரான பரணரைப் பற்றியும் சங்கப் பாடல்களில் இளங்கோவடிகள் இயற்றியதாக உள்ள பாடல்களைப் பற்றியும் நம்மால் எந்தக் குறிப்பையும் காணமுடியவில்லை.

இன்னொருவகையில் சொன்னால் சங்ககாலக் குட்டுவனுக்கு இளங்கோ என்ற ஒரு தம்பியே இல்லை. சிலப்பதிகாரக் காலச் செங்குட்டுவன் அவையில் பரணர் என்ற பெயரில் எந்தப் புலவனும் இருக்கவில்லை. ஆகவே சிலப்பதிகார நூலில்தான் செங்குட்டுவனுக்கு இளங்கோவடிகள் என்ற ஒரு தம்பியை நம்மால் பார்க்க முடியும்.

சங்கப் பாடல்களில் இளங்கோவின் பாடல்கள் காணப்படாமைக்கும் இதுவே காரணமாகும். அதாவது கண்ணகி பேகன் குட்டுவன் பரணர்

இவர்களுக்கும் கண்ணகி, கோவலன் செங்குட்டுவன் இளங்கோவடிகள் ஆகிய இவர்களுக்குமிடையே குறைந்தது ஆறு நூற்றாண்டுகளின் இடைவெளியாவது இருக்க வேண்டும்.

குட்டுவன் வாழ்ந்தது கி.பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டென்றால் செங்குட்டுவன் வாழ்ந்தது கி.பி. பதினோராம் நூற்றாண்டு. செங்குட்டுவன் முதலாம் கயவாகுவின் காலமான கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் என்பது உண்மையன்று புனைந்துரையே.

இனித், தன்னிடம் ஆட்சி செய்தற்குரிய திருப்பொறி உண்டென்று கூறிய நிமித்திகனை உறுத்து நோக்கிய இளங்கோவின் செயலைச் சிந்திக்கலாம்.

இயல்பாகவே தனக்கு ஆளும் உரிமை இல்லாதிருக்க அது உண்டென்று கூறும் நிமித்திகனைக் கடிய வேண்டிய தேவையென்ன? நிமித்திகன் சொன்னவாறே தமையனிருக்கத் தம்பிக்கு அரசுரிமையினைப் பேரரசன் (தந்தை) தருவானா? ஆகவே நிமித்தகன் கூற்றைப் பொய்யாக்குவதற்கென்று இளங்கோ துறவு பூண்ட செய்கை இயல்பானதாக இல்லை.

**தம்பிக்காகத் தமையன்**

ஆனால் தம்பிக்காகத் தமையன் துறந்தான் என்று கொள்வதில்தான் பெருமையுள்ளது. தம்பி பரதனுக்காக (சிறிய தாயான கைகேயி சொல்லிற்கேற்பத் தந்தையின் கட்டளைப்படி என்றாலும்கூட) இராமன் நாட்டைத் தந்து காடு செல்கிறானே அச்செயலில்தான் இயல்புத்தன்மையுள்ளது; பெருமையும் உள்ளது. ஆகவே இங்கேயும் அண்ணன் தம்பிக்காகத் துறவை மேற்கொண்டான் என்று கொள்வதுதான் பொருந்துவதாகும். வரலாறும் அப்படியே உள்ளது. இளங்கோவடிகள் காவியத்தின் போக்கிற்காக அண்ணன் துறந்ததைத் தம்பி துறந்ததாகக் கூறினார், அவ்வளவே.

இதே போன்று, பாரதக் கதையில் பாண்டவர் - கௌரவர் - பிதாமகரான வீடுமர், தன் தந்தை சந்தனு மகாராஜனின் ஆசையைப் பூர்த்தி செய்வதாக நாடாளும் உரிமை, இல்லற வாழ்க்கை இரண்டையும் துறப்பதைக் காணலாம். சந்தனுவின் மூத்தமகனாக இருந்தும் ஆளும் உரிமை பெற்றிருந்தும், சத்யவதி (மச்சகந்தி) என்னும் செம்படவப் பெண்ணைத் தன் தந்தை மணந்து கொள்வதற்காக, அவளுக்குப் பிறக்கும் குழந்தைகட்குத் - தன் தம்பியர்க்கு ஆளும் உரிமை கிட்டுவதற்கு, அரசைத் துறக்கிறார். நாட்டைத் துறக்கிறார். இல்லறத்தையும் துறக்கிறார். இதுவே சிறந்த துறவு.

இளங்கோவடிகளின் துறவும் இம்முறையில் சிறந்ததே. ஆயின் அது இளவலாயிருந்து உண்மை உரிமைக்காரனான தமையனுக்காக நாட்டைத் துறந்த துறவன்று. மாறாக, தானே உண்மையில் ஆளும் உரிமை பெற்றவனான அண்ணனாக இருந்து, துறவறத்தில் கொண்ட நாட்டம்

காரணமாகத், தன் தம்பியான (முறைமைப்படி அரசை அடைய முடியாதவனாக) செங்குட்டுவனுக்காக அரசைத் துறந்த தமையனான இளங்கோவடிகளின் செயல் உண்மைத் துறவாகும். இவ்வாறு அரும்பதவுரையாசிரியரது காலமான கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு தொட்டு இற்றைநாள் வரையிலும் அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கொள்கையை முழுமையாக மறுப்பது என்றால், அதற்குச் சரியான காரணம் இல்லாமற் போகவில்லை. வரலாறும் வரலாற்றுச் சான்றுகளும் மேற்கூறிய மறுப்பினையே அரண் செய்கின்றன.

**கற்பனையே!**

இனிச் சிலப்பதிகாரம் ஒரு கற்பனைக்கதை என்பதையும், இளங்கோவடிகள் சங்ககாலத்தவர் அன்று; பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த ஓர் சேர இளவரசரே என்பதனையும் உணர்ந்து கொள்ளல் வேண்டும். 'இளங்கோ' என்ற பெயர்கூட அவ்விளவரசரின் இயற்பெயரின் ஓர் ஏகதேச மொழி பெயர்ப்பே என்பதனையும் அவர் வரலாற்றினின்றும் தெரிந்து கொள்ளலாம்.

கி.பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினோராம் நூற்றாண்டின் முதற் பகுதியிலுமாகச் சேரநாட்டை அரசர் மூவர் ஆண்டிருக்கின்றனர். முதலாம் பாற்கரரவிவர்மன் என்ற அரசன் கி.பி. 962 முதல் 1010 ஆம் ஆண்டு வரையிலும்,[1] அவரது தம்பி கோதை ரவி என்பவர் இரண்டாம் பாற்கர இரவிவர்மர் என்ற அபிடேகநாமத்தில் கி.பி. 978 முதல் 1021 வரையிலும் ஆண்டார்.[2] இவருக்கு இளவரசுப் பட்டம் கி.பி. 978 ஆம் ஆண்டில் கட்டப்பட்டாலும் உண்மையில் அவர் அரசரானது கி.பி. 1011 ஆம் ஆண்டில்தான். முதலாம் பாற்கரரவியின் ஆட்சியின்போதுதான் முதலாம் இராசராச சோழன் கி.பி. 999 ஆடி மாதத்தில் சேரர் தலைநகரான மகோதையபுரத்தை எரியூட்டினான். (இந்நிகழ்ச்சியையே கண்ணகியால் மதுரை எரியுண்ட நிகழ்ச்சியாக இளங்கோவடிகள் மாற்றிக்கூறினார்.)

முதலாம் பாற்கர இரவிவர்மருடைய ஆட்சிக் காலத்தில் அவருடைய இரண்டு ஆண்மக்களில் மூத்தவனான குஞ்ஞிக்குட்டவர்மன் என்ற இயற்பெயரையுடைய அடிகள் வீரக்குறும்புறையார் என்ற இளவரசர் மூத்த கூற்றினை (குறும்பொறை நாட்டினை இன்றைய கடலுண்டி - கடல் தொண்டி - தென்வயநாடு பகுதிகள்) ஆண்டு வந்தார்.[3] ஆயின் இளையவரான இராஜசிம்மன் கி.பி. 1022 ஆம் ஆண்டில் ஆட்சிப் பொறுப்பினை ஏற்பது வரையிலும் தன் தந்தையின் கீழ் 'கோயிலதிகாரிகள்' என்ற அரசியல் பொறுப்பினை வகித்து வந்ததாக ஊகிக்க இடம் இருக்கிறது.

எனவே மேற்கூறிய வரலாற்று உண்மைகளினின்றும் முதலாம் பாற்கரரவிவர்மரின் (962 - 1010) இரு ஆண்மக்களின் முதல் மகனும் இளவரசருமான குஞ்ஞிக்குட்டவர்மன் என்ற இயற்பெயரையுடைய 'அடிகள் வீரக்குறும்பொறையர்தாம் இளங்கோவடிகள் என்பதும், அவர், தம் தந்தையின்

ஆட்சிக்கால இறுதியில், கி.பி. 1005ஆம் ஆண்டில், குறும்பொறை நாட்டிற்கு இளவரசனாகப் பட்டம் கட்டப்பட்டு, கி.பி. 1021ஆம் ஆண்டு வரையிலும் இளவரசனாக அப்பகுதியை ஆண்டார் என்பதும், பின்னர் கோதை இரவி என்ற அவரது சிறிய தந்தை கி.பி. 1011 இல் ஆட்சிப் பொறுப்பேற்று 1021ஆம் ஆண்டு இறந்துபட்டபோது ஆட்சி யேற்கும் பொறுப்பு குஞ்ஞிக்குட்டவர்மன் என்னும் இளங்கோவுக்கு வர, துறவை மேற்கொள்ள வேண்டும் என்ற உறுதியில் இருந்த அவர் ஆட்சிப் பொறுப்பினைத் தன் தம்பியான இராஜசிம்மனுக்குத் தந்தார் என்பதும் பெறப்படும். குஞ்ஞிக்குட்ட வர்மனாயின அடிகள் வீரக்குறும்பொறையரே இளங்கோ அடிகள். 'குஞ்ஞிக்குட்டன்' என்னும் சொல்லின் ஏகதேசத் தமிழ் மொழி பெயர்ப்பே[4] 'இளங்கோ' என்பதும் இங்கு அறியத்தக்கது.

முதற் குலோத்துங்கன் காலத்தில் (கி.பி. 1008 -க்கு முன்னால்) யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்னும் நூல்களை யாத்த அமிதசாகரர் என்ற சமணமுனிவர் பெயரைக்கூட 'அளப்பருங்கடலோன்' என்று மொழி பெயர்த்திருப்பதை யாப்பருங்கல நூற்பாவால் அறியலாம். எனவே, முன்னர்க் கூறிய வரலாற்று நிகழ்ச்சியினையே, இளங்கோவடிகள் செங்குட்டுவனுக்காகத் தாம் அரசினைத் துறந்ததாகச் சிலப்பதிகாரத்தில் எழுதினார். இளங்கோ என்னும் சொல்லுக்கு, அச்சொல் இயற்பெயர் என்பதனை உணராமல் இளவல் என்று பொருள் கொண்டு இளங்கோவடிகளைச், செங்குட்டுவனுக்குத் தம்பியாக்கினார்.

## மொழி மாற்றம்

இளங்கோ என்னும் சொல் 'குஞ்ஞிக்குட்டன்' என்னும் கொடுந்தமிழ்ப் பெயரின் செந்தமிழ்ப் பதிப்பே என்பது முன்னரே காட்டப்பட்டது. 'அடிகள்' என்பது பொதுவாக அரசருக்கும் இளவரசர்க்கும் இடைபட்ட உயர்வுச் சொல்லே என்பது முன்னரே சுட்டப்பட்டது. ஒன்பது, பத்து நூற்றாண்டு வரலாற்றுச் செய்திகளால் அறியலாம்.[5]

அரசர் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களைக் குறிக்க வந்தபோதும், அவர்கள் இயற்பெயரோடு 'அடிகள்' என்ற பெயரையும் சேர்த்து வழங்கி வந்தனர்.[6]

கி.பி. பத்து, பதினோராம் நூற்றாண்டுகளில் சேரநாட்டில் வடமொழிப் பிராமணரின் (நம்பூதிரிப் பிராமணர்) ஆதிக்கத்தில் தமிழ் மொழியானது வடமொழித் தொடர்பு கொண்டு மணிப்பிரவாளமாகியும், பின்னர் மலையாள மொழியாகவும் மாறிக் கொண்டிருந்த காலம். தமிழகத்தின் பிற பகுதிகளில் வழங்கப்படாத பெயர்களை மக்களுக்கும் மன்னருக்கும் இட்டு வழங்கினர். 'குஞ்ஞிகுட்டன் என்ற பெயரும் அத்தகைய ஒன்றாகும். தமிழ்க்குஞ்சு என்னும் சொல் 'குஞ்சியாகி குஞ்ஞியாயிற்று. குட்டுவன் என்னும் சேரர் குடிப்பெயர் 'குட்டன்' என மருவி வழங்கலாயிற்று. அச்சொல் குழந்தை என்னும் பொருளில் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்திலும்

பயிலப்பட்டிருக்கின்றது. [6A] எனவே குஞ்ஞிகுட்டன் என்ற சொல்லைத்தான் ஏகதேச மொழி பெயர்ப்பாக 'இளங்கோ' என்று மாற்றிச் சொன்னார்.

'பாலராமன், பாலகிருட்டினன் போன்ற பெயர்கள் இப்பொழுதும், குஞ்ஞிராமன், கொச்சுராம, என்றும் குஞ்நுகிருஷ்ணன், கொச்சுக்கிருஷ்ணன் என்றும் சேரநாட்டில் அழைக்கப்படுவதும் நோக்கத்தக்கது. ஏற்கனவே, இக்குஞ்நுக்குட்டவர்மன். 'அடிகள் வீரக்குறும்பொறையார் என்று அழைக்கப்பட்டதால், செந்தமிழில் அப்பெயரினை 'இளங்கோ அடிகள்' என்கிறார்.

## அறசியல் அறிவு

இனி, இளங்கோ என்பதற்கு 'இளவல்' என அரும்பதவுரைகாரர் கொண்டாற் போன்று பொருள் கொள்ளாமல் 'இளவரசர்' எனப் பொருள்கொள்ளினும் அமையும். ஏனெனில் சிலப்பதிகார ஆசிரியர் அரசியலறிவும் ஆட்சியனுபவமும் நிரம்பப்பெற்றவர். அரசரின் படை பற்றிய அறிவும் ஆட்சியனுபவமும் நிரம்பப் பெற்றவர். அரசரின் படை பற்றியும் போர்முறைகளைப் பற்றியும் அறிந்தவர். புகாரில் மருவூர்ப் பாக்கத்திற்கும் பட்டினப்பாக்கத்திற்கும் இடையே அமைந்த நாளங்காடியில் பொருள் கொள்வோரும் கொடுப்போரும் எழுப்பும் ஓசையை உணர்த்த வந்த இளங்கோவடிகள், அது மன்னர்கள் பொரும் போர்முனையில் உண்டாகும் ஓசையை ஒத்தது என்கிறார்.

'இருபெரு வேந்தர் முனைமிடம் போல
இருபாற் பகுதியின் இடைநிலம் ஆகிய
கடைகால் யாத்த மிடைமரச் சோலைக்
கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்
நடுக்கின்றி நிலைஇய நாள் அங்காடி' (சிலம்பு 5 : 60 - 4)

'அரசாட்சியை மேற்கொள்வது எளிதான காரியமன்று; 'அது துன்பமல்லது தொழுதகவு இல்' எனச் செங்குட்டுவன் மேலேற்றிக் கூறும் இளங்கோவடிகள் கூற்று, அவர் அரசியலில் சிறந்த ஞானமும் அனுபவமும் பெற்றவர் என்பதையே குறிக்கும்.

''மழைவளங் கரப்பின் வான்பேரச்சம்
பிழையுயிரெய்தின் பெரும்பேரச்சம்
குடிபுரவுண்டு கொடுங்கோலஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப்பிறத்தல்
துன்பமல்லது தொழுதகவு இல்லென''

(சிலம்பு 3 : 25 : 100 - 04)

அரசியலனுபவம் இல்லாத ஒருவரால் மன்னனைச் சூழ்ந்திருக்கும் இத்துன்பத்தை எழுதமுடியுமென்று தோன்றவில்லை.

### சாத்தனாரின் குறிப்பு

இளங்கோவடிகள் துறவினை மேற்கொள்ளுமுன்பு இளவரசராயிருந்து அரசாட்சி செய்தகாரணம் பற்றித்தான் போலும் அவர் அரசைத் தன் தம்பிக்காகத் துறந்து சமணமுனிவர் ஆன நிலையிலும், அவரை, மதுரைக் கூல வாணிகன் சாத்தனார் 'இளங்கோ வேந்தன்' என்று அரசனாகவே அழைக்கின்றார்.

**'இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப**
**வளங்கெழு கூலவாணிகன் சாத்தன்**
**மாவண் தமிழ்த்திறம் மணிமேகலைத்துறவு**
**ஆறைம் பாட்டினுள் அறியவைத் தனனென்''**

(மணிமேகலை, பதிகம் வரி : 9 : 58)

எனவே சிலப்பதிகாரத்தால் அறியப்படும் செங்குட்டுவன் உண்மையில் 'குஞ்ஞிக்குட்டவர்மனாயின அடிகள் வீரக்குறும் பொறையர்' திருவடிகளாகிய இளங்கோவடிகளின் இளவலாகும். குஞ்ஞி விக்ரமன் என்பது இயற்பெயர். இராசசிங்கப் பெருமாள் என்பது அவ்விளவலின் அபிடேகப் பெயராகும். இவ்விராச சிங்கக் குட்டுவனைத்தான் இளங்கோவடிகள் 'செங்குட்டுவனாக' மாற்றினார். 'சிங்கக்குட்டுவன்' செங்குட்டுவனாகத் திரிந்தது.

### இளங்கோவின் தம்பி செங்குட்டுவன்

சங்க இலக்கியங்களில் கடல் பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவனுக்குச் 'செங்குட்டுவன்' என்ற பெயர் யாண்டும் கூறப்படவில்லை என்பதும் 'செங்குட்டுவன்' என்ற பெயருக்கு விளக்கம் சிலப்பதிகாரத்தில் யாண்டும் காணப்படவில்லை என்பதும், மேலே கூறிய கருத்தினைத்தான் வலியுறுத்திக் காட்டுகின்றன. செம்பொன், செந்தலை, செங்கால், செங்கண், செவ்வல்லி, செந்தாமரை என்ற பொருளோடு சேர்ந்து வருமேயன்றி இயற்பெயரோடு சேர்ந்து செம் வராது.

எனவே இவ்விராச சிங்கப்பெருமாள் தன் இளையதந்தை இரண்டாம் பாற்கரரவிவர்மனின் ஆட்சிக் காலத்தில் கி.பி. 1011 முதல் கோயிலதிகாரியாக இருந்து வந்தார்.[68] பின்னர் தம் தமையனான குஞ்ஞிக்குட்டவர்மன் (இளங்கோவடிகள்) கி.பி. 1012இல் இளைய தந்தையிடமிருந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டிய நேரத்தில் துறவை மேற்கொள்ள, தம்பியான இராசசிம்மனை (செங்குட்டுவனை) அரசராக்கினார்.

சிலம்பில் செங்குட்டுவனின் இயல்புகளாகக் குறிக்கப்பட்டவை பலவும், இராச சிங்கனின் இயல்பாக இருப்பதை வலாற்றுச் சான்றுகளால் உணரலாம். செங்குட்டுவன் சிறந்த கொடை வள்ளல் என்பதை நீர்ப்படை காதை கூறுகின்றது.

''பெருமகன் மறையோர் பேணி யாங்கவற்

காடகப் பெருநிறை யையைந் திரட்டித்

தோடார் போந்தை வேலோன் தன்னிறை

மாடல மறையோன் கொள்கென்ற றித்தாங்கு''

(சிலம்பு : 3, 27 : 173 - 76)

ஏறத்தாழ இதே காலத்தில் எழுதிச் சேர்க்கப்பட்ட பதிற்றுப் பத்துப் பதிகங்களில், ஐந்தாம் பத்துப் பதிகத்தில் தன்னைப் பாடிய பரணருக்கு உம்பற்காட்டு வாரியையும், தன் மகன் குட்டுவஞ் சேரலையும் கொடுத்தான் அக்கோ (கடல்பிறக்கோட்டிய குட்டுவன்) என்றிருக்கிறது. இப்பதிகப் பகுதிக்கும் ஆதாரமான வரலாற்று நிகழ்ச்சியினை இராஜசிம்மனின் ஆட்சியில் காணலாம். இவன் மணிக்கிராமக் குழுவைச் சார்ந்த 'சாத்தன் வடுகன் இரவிச் சாத்தன்'' என்னும் இரு வணிகப் பெருமக்களுக்குச் சில உரிமைகளையும் விடுபேற்றினையும் கொடுத்திருப்பதாக அவனுடைய கல்வெட்டொன்று கூறுகின்றது.[7] மேலும் சிலம்பில் காணும் துலாபார(ம்) தானம், இரணிய கர்ப்பம் புகுதல் போன்ற தானங்கள் (இவை முதன் முதலில் வேள்விக்குடிச் செப்பேடுகளில்தான் குறிக்கப்படுகின்றன; பத்தாம் நூற்றாண்டளவில்தான் பரவலாகக் காணப்படுகின்றன.[8] என்பதனாலும், சிலம்பில் கூறப்பட்ட செங்குட்டுவன் அறச் செயல்கள் சேரவேந்தன் இராசசிம்மனின் அறச்செயல்களின் பிரதிபலிப்பேயாகும் என்பது பெறப்படும்.

## குணவாயிற் கோட்டம்

இனி இளங்கோவடிகள் அரசினைத் துறந்து சென்று புகலிடமாகக் கொண்ட இடம் குணவாயிற்கோட்டம் என்பதாகச் சிலப்பதிகாரமே சொல்லுகின்றது.

'குணவாயிற் கோட்டத் தரசு துறந்திருந்த

குடக்கோச் சேரலிளங்கோ வடிகட்கு''

என்பது பதிகத்தின் தொடக்கம். இவ்விடம் தற்போது திருக்குணம் திலகம் என்று அழைக்கப்படுகின்ற இடமேயாகும்.

அக்குணவாயிற் கோட்டத்திறைவன் பகல் செல்வாயிற் படிமையோனான (சிலம்பு : 3: 179) குணவாயிலிடத்தே இருக்கின்ற இறைவனாம் அருகனேயாவான். இவ்வருகன்கோட்டம் (குணவாயிற் கோட்டம்) தோன்றிய காலத்தைத் திட்டமாக வரையறுத்துக் கூறும் கல்வெட்டொன்று, கேரளத்தில் கண்ணனூர் மாவட்டம், வயநாட்டில், பூதாடித் தாழக்காவு என்னும் கோயிலிலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளது.9 இக்கல்வெட்டு, அதன் எழுத்தமைதி, மொழியியல்பு இவற்றினடிப்படையில் கி.பி. எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று வரலாற்றுப் பேராசிரியர் ஒருவர் கூறுவர்.[10]

இக்கல்வெட்டினால் திருக்குணவாய்க் கோட்டம் நிறுவப்பட்ட காலம் ஒருவாறு உறுதிப்படும். திருக்குணவாய்க் கோட்டம் எந்நிலையிலும் ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதெனக் கொள்ளல் இயலாது. அதனால், குணவாயிற் கோட்டமே ஏழாம் நூற்றாண்டில்தான் தோன்றியிருக்கிறதெனின், அங்குச் சென்று துறவை மேற்கொண்டிருந்த இளங்கோவடிகள் மட்டும் எவ்வாறு இரண்டாம் நூற்றாண்டினராதல் கூடும்? அது இயலாததொன்றல்லவா? எனவே இளங்கோவடிகள் மிகப்பிற்காலத்தில் வாழ்ந்தவர் என்பதனை இக்கல்வெட்டும் வலியுறுத்துதல் காண்க.

**மதங்களின் கூடல்**

இனிச் சிலப்பதிகாரம் சமணக் காப்பியமானாலும் அதில் எல்லா மதங்களின் சங்கமத்தைத்தானே காண்கிறோம். எல்லா மதங்களையும் சமமாகப் பாவிக்கும் பண்பு சங்ககாலத்தில்தானே இருந்தது - என்னும் கேள்விகள் எழலாம். ஆயின் உண்மை அதுவன்று. சங்க காலத்திலோ அதனை அடுத்த நூற்றாண்டிலோ சிலப்பதிகாரத்தில் நாம் தரிசிக்குமளவிற்குச் சமயப்பொறை இருந்ததில்லையென்பது கண்கூடு.

சங்க இலக்கியங்களிலோ பிற்கால இலக்கியங்களிலோ அத்தகைய சமயப் பொறைக்குச் சான்றுகள் காணவும் முடியாது. மிகப் பிற்பட்ட சோழர் காலத்தில்தான் - ஒன்பது, பத்து, பதினொன்று நூற்றாண்டுகளிற்றான் இத்தகைய சமயப் பொறையினைக் காண்கிறோம்.

முதலாம் இராசராச சோழன், இராசேந்திர சோழன், ஆய் மன்னன் விக்கிரமாதித்ய வரகுணன், சேரன் கோத்தாணு ரவிவர்மன் காலத்து அய்யனடிகள் திருவடிகள், முதலாம் பாற்கரரவிவர்மன், இராசசிங்கப் பெருமாள் ஆகிய இவர்கள் செயல்களே இதற்குச் சான்று.

ஆனைமங்கலப் பெரிய செப்பேடுகள், சிறிய செப்பேடுகள், பாலியம் செப்பேட்டுச் சாசனம், தரிசாப்பள்ளிச் செப்பேட்டுச் சாசனம் ஆகிய வரலாற்றுச் சான்றுகள் இதனையே விளக்கிக்காட்டும் (E. I. XXII, P - 267 - 81; Ibid D. 213 - 26 T. A. S. Vol. I P. P. 189 - 92; T. A. S II P. P - 67 - 8) Ibid P. P & 80 - 82).

**இளமையில் வைணவன்**

இளங்கோவடிகளின் (குஞ்ஞிக் குட்டவர்மனின்) தந்தை முதலாம் பாற்கர ரவிவர்மன் வைணவன். அவனுடைய திருநெல்லிக் கல்வெட்டுக்களே சான்றுகள் ( E. I XVI PP - 343 - 4). இளங்கோவடிகளும் துறவை மேற்கொண்டு சமணர் ஆனது வரையிலும் (கி.பி. 1022) வைணவராகவே விளங்கினார் என்பது அதே கல்வெட்டினால் அறியலாம்.

ஆய்மன்னன் விக்கிரமாதித்ய வரகுணன் (கி.பி. 885 - 925) வைணவனாக இருந்தும் தன்னைத் திருச்சாரணத்துப் பட்டினிப்படாரின்

(பத்தினி படாரியரின்) சட்டன் (மாணவன்) என்று சொல்லும் அளவுக்குச் சமயப்பொறை கொண்டவன். அவன் தன் வாழ்நாள் இறுதிக்காலத்தில் நாட்டின் பெரும்பகுதியினைத் திருமூலபாதம் புத்தவிகாரைக்குத் தானமாகத் தந்து அதனைக் கோயிலதிகாரிகளான (இளவரசன்) வீரகோதையிடம் (இந்தக் கோதைவர்மனிடம்) ஒப்படைத்த செய்தி அப்பாலியம் செப்பேட்டுச் சாசனத்தின் வடமொழிச் செய்யுட்களால் அறியலாகும். அச்சுலோகங்களின் போக்கிலிருந்து ஆய்மன்னன் பௌத்த மதத்தைச் சார்ந்து துறவியானான் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது.

எனவே வைணவராக இருந்த இளங்கோவடிகள் (பொதுவாகப் பிற்காலச் சேரவரசர்கள் வைணவர்கள், இராச சேகரவர்மனும் - (சேரமான் பெருமாள் நாயனார்) ஸ்தாணு ரவிவர்மனும்தாம் விதிவிலக்கு. (அவர்கள் சைவர்களாக இருந்தனர்) சமணராக மாறியதில் வியப்பேதும் இல்லை. அதனாற்றான் தன் காப்பியத்திலும் சித்தஜாராதியான - காமனை வென்றோன் - அருகதேவனை, காமனை வென்றோன் ஆயிரத்தெட்டு, நாமமல்லது நவிலா தென்னா'' (சிலம்பு 10 : 196 - 7) என்று ஏத்துகின்றார். பூர்வாசிரமத்தில் வைணவனாக இருந்த காரணத்தாலேயே திருமால் பற்றிய கதைகளும் வருணனைகளும் - சிவனைவிட அதிகமாகச் சிலப்பதிகாரத்தில் அவர் எழுதியிருக்கின்றார். (எ -டு : 17 ஆவது காதையான ஆய்ச்சியர் குரவை).

கி.பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டில் எழுந்த குணவாயிற் கோட்டத்தின் இறைவன் அருகதேவன் என்பது வெளிப்படை. இளங்கோவடிகள் காலமான பதினொன்றாம் நூற்றாண்டிலும், அதன் பின்னர் பதினான்காம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் அக்கோட்டத்தின் இறைவன் அருகனே என்பது அக்காலத்தெழுந்த 'கோகசந்தேசம்' என்ற தூது நூலாலும் வலியுறும்.

குணகத்தம்பிரான் அருக தேவனாகையால், அந்தணர்கள் கோயிலினுட் புகமாட்டார்களென்றும், ஆகையால் அத்தூதுவனான கோகம் (அன்னம்) வெளியே நின்று அருகனை வணங்கவேண்டும் என்றும் தூது அனுப்பியவன் கூறியதாக அந்நூல் கூறுகிறது. (செம்மே. காண்மானருது குணகத் தம்புரானே பவிஜன் மார்க்கென்றால் நீயும் தொழுக புறமே நின்று தோழா 'தெரிஞ்நு').

## செங்குட்டுவன் சைவன்

இனி இளங்கோவின் தம்பியான இராஜசிம்மன் சைவன் என்பது வரலாற்றால் அறியக்கூடிய செய்தியாகும். இராசசிம்மன் என்பது அபிடேக நாமமாகும். இயற்பெயர் ''குஞ்ஞிவிக்கிரமன்' என்பதாகும். நாட்டையாளும் பொறுப்பினை, கி.பி. 1022 -ல் ஏற்பது வரையிலும் தன்சிறிய தந்தையின் கீழ் கோயிலதிகாரிகள் என்னும் பதவியை வகித்து வந்தார்.[10A] 'ஆறு' என்று சிறப்பித்துக் கூறப்படும் பெரியாற்றின் (பேரியாற்றுஅடைகரை. சிலம்பு 25 : 21) வாயிலிலுள்ள கோயில் சிவபெருமானுக்குரியது. அக்கோயிற்சபை 'திருவாற்று வாய்ச்சபை' எனப்பட்டது. இவ்வாற்றுவாய்தான் தற்போது

'ஆல்வாய்' என அழைக்கப்படும் ஊராகும். (கடல் தொண்டி, கடற்றொண்டியாகி) தற்போது கடலுண்டியானது போல திருவாற்றுவாய், ஆற்றுவாய் என்றாகி ஆலுவா(ய்) என்று தற்போது அழைக்கப்படுகின்றது.

இக்கோயில் உள்ளிட்ட பலகோயில்களுக்கு அதிகாரனாக இருந்திருப்பதை நோக்க, குஞ்ஞி விக்கிரமனென்னும் இராசசிங்கம் பெருமாளின் - சிங்கக்குட்டுவன், செங்குட்டுவனின் - சமயம் சைவம் எனத் துணியலாம். இவ்வரலாற்று அடிப்படையினை வைத்தே இளங்கோவடிகளும் சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் சிறந்த சைவன் எனக் குறிப்பிட்டுள்ளார்.

கால்கோட்காதையில் செங்குட்டுவன் வடநாடு நோக்கிப் பயணமாவதற்கு முன், 'ஆடகமாடத் தறிதுயிலமர்ந்தோன் சேடங்கொண்டு சிலர் நின்றேத்த, செஞ்சடைக் கடவுள் வண்ணச்சேவடி மணிமுடிவைத்தலின், ஆங்கது வாங்கி அணிமணிப் புறத்துத் தாங்கினனாகிப் பின் தகைமையில் சென்றான்' என்றார் (சிலம்பு : 26 : வரி : 62 - 67).

இதனாலும் சிலப்பதிகாரத்தில் காணும் மதப்பொறை சங்ககாலத்தது அன்று; இராஜராஜன், இராஜேந்திர சோழன் காலமான பதினோராம் நூற்றாண்டினதே என்பதும் விளங்கும்.

எனவே முடிவாக, இளங்கோவடிகளும் சிலப்பதிகாரச் செங்குட்டுவனும் சங்ககாலத்தில் வாழ்ந்தவர்களன்று என்பதும் கி.பி. 962 முதல் 1010 வரையாண்ட முதலாம் பாற்கர ரவிவர்மனின் இருபுதல்வர்களேயென்பதும், இவர்களுள் இளவரசுப்பட்டம் 1005 இல் கட்டப்பட்டு, முது கூற்றை (நெடும் பொறை நாட்டை) ஆண்டு, பின்னர் கி.பி. 1022 இல் சேரநாட்டில் ஆட்சிப்பொறுப்பினை மேற்கொள்ள வேண்டிய வேளையில், அதனைத் தன் தம்பியான இராஜசிம்மனுக்காகத் துறந்த குஞ்ஞிக்குட்டவர்மனே இளங்கோவடிகள் என்பதும், கி.பி. 1011 - அளவில் தம் சிறிய தந்தையின் கீழில் 'கோயிலதிகாரி'களாக இருந்து, பின்னர் கி.பி. 1022 இல் தமையன் துறவை மேற்கொள்ள, அதனால் அரசு உரிமை பூண்டு கி.பி. 1043 வரையாண்ட இராஜசிங்கப் பெருமாளே செங்குட்டுவன் என்பதும், சிலப்பதிகாரத்தில் யாண்டுமே தாம் செங்குட்டுவனின் தம்பி என்று கூறவில்லையென்பதும், அரும்பதவுரைகாரர்தாம் இளங்கோவடிகளைத் தம்பியெனக் கொண்டார் என்பதும், முதலாம் இராசேந்திர சோழனின் வடநாட்டுப் படையெடுப்பு முடிந்த (1023) பின்னர்தான் சிலப்பதிகாரம் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பதும் உய்த்துணரக் கிடக்கின்றன.

### கற்பனைக்குக் காரணமென்ன

அடுத்து, இவையெல்லாம் பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியில் நடந்த உண்மை வரலாற்று நிகழ்ச்சிகளாக இருக்கவும் இளங்கோவடிகள் எதற்காகத் தம்மையும் உட்படுத்தி இத்தகையதொரு கற்பனைக் கதையினைக் கண்ணகியைத் தலைவியாகக் கொண்டு படைத்தார் என்னும் கேள்வி எழுவது இயல்பு. அதற்குரிய காரணத்தையும் ஆராய்வோம்.

சிலப்பதிகாரத்தைத் தாம் எழுதியதே உலகத்துக்கு மூன்று உண்மைகளை அறிவுறுத்துவதற்கு என்று இளங்கோவடிகள் கூறியதாகப் பதிகம் எடுத்துக் கூறுகிறது.

''அரைசியல் பிழைத்தோர்க் கறங் கூற்றாவதூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை யுருத்து வந்தூட்டு மென்பதூஉம்''

(சிலம்பு : பதிகம் : அடி : 55 - 57)

எனவே இம்மூன்று உண்மைகளையும் மெய்ப்பித்தற்குச் சிலப்பதிகாரம் என்னும் பெயரால் ஓர் பாட்டுடைச் செய்யுள் நூலை யாத்தனர் இளங்கோவடிகள். இப்பதிகப் பகுதியினின்றும் இளங்கோ உண்மை வரலாற்றை யெழுதவில்லையென்றும், தம் வாழ்விலனுபவித் தறிந்த மூன்று உண்மைகளை மெய்யெனக் காட்ட ஒரு கதையைப் புனைந்தார் என்பதும் கண்கூடாகத் தெரிகின்றது.

இனி, அவர் கூறிய மூன்று உண்மைகள் அவருக்கு எவ்வாறு கிடைத்தன என்பதையும், அவர் வாழ்வோடு அவ்வுண்மைகளுக்கு உள்ள தொடர்பு என்ன என்பதையும் காண்போம்.

**சமணக்கொள்கை**

அரசியலில் பிழைத்தவர்களுக்கு அவ்வரசியலறமே கூற்றுவனாக முடியும் என்பது அக்கால அரசர்கள் கொண்ட கொள்கை. 'உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்' என்ற பகுதிக்கு, கற்பிற் சிறந்தவளை உயர்ந்தோர் வணங்குவர்' என்பது மட்டும்தான் பொருள் என்று தோன்றவில்லை; அதற்கும் மேற்பட்ட பொருள் ஒன்று இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

இளங்கோவடிகள் சமணர் என்பதால் சமணமதப் பெண்பாற்கடவுளான பத்மாவதி தேவியை உயர்ந்தோர் ஏத்துவர் என்று அவர் கொண்டிருக்க வேண்டும். பத்மாவதி என்பதன் மரூஉ பத்தினி என்பதாகும். ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பது, மக்கள் செய்கின்ற வினைப்பயன் அவர்களைத் தொடர்ந்து வந்து ஊட்டுவிக்கும் என்னும் சமணமதக் கொள்கையேயாகும்.

இவை எவ்வாறு அவர் வாழ்நாளில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் பிரதிபலிக்கின்றன என்பதைக் காண்போம்.

முதலாம் இராசராசசோழன் சேரர் தலைநகரமான மகோதயபுரத்தின் மீது படையெடுத்து வந்து அதனைத் தகர்த்து எரியூட்டியதற்குக் காரணம்,முதலாம் பாற்கர ரவிவர்மன் என்ற சேரவரசன் இராசராசனின் தூதுவனை அவமதித்துத் துன்புறுத்திய மகோதயபுரத்துச் சிறையில் அவனை அடைத்தமையேயாகும்.[11] தூதர்களை அவமதிப்பதும் அவர்களைச் சிறையிலிடுவதும் அரசராயினார்க்கு

அடாத செயல்களே அன்றியும் அச்செயல்கள் அரசநீதிக்கு மாறுபட்டனவும் ஆகும். பிற்காலத்தில் வாழ்ந்த கம்பரும் இதனையே கூறியிருக்கின்றார்.[11A] ஆகவே சேர வேந்தன் பாற்கர ரவிவர்மன் அரசியல் பிழைத்தான்; அதுவே அவன் நாடு அழிவுறுவதற்குக் காரணமாயிற்று.

**பத்தினி – யார்?**

உரைசால் பத்தினி கண்ணகியென்று சிலப்பதிகாரம் கூறினாலும், பத்தினி என்னும் சொல் கண்ணகியை மட்டும் குறிக்க வரவில்லையென்று தெரிகிறது. பத்தினி (பத்நி - வடசொல்) என்னும் சொல்லுக்கு மனைவி என்றுதான் பொருள்.[11B] இதைச் சிலப்பதிகார அடியே வலியுறுத்தும். 'முறையிலரசன்ற னூரிலிருந்து வாழும், நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள்' (ஊர்சூழ்வரி 3 - 4), நிறை கற்பு, நிறை காக்குங் காப்பேதலை' (குறள். 57) என்பர் திருவள்ளுவர்.

எனவே இரு பொருள்படும்படியாகவே இளங்கோவடிகள் அச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். அந்த இன்னொரு பொருள் 'பத்மாவதி' என்னும் சமணப் பெண்தெய்வமாகும். அவள் தமிழ் நாட்டில் 'பட்டினி படாரர் (பத்மாவதிப் படாரியர்)' என அழைக்கப்படுவள். பிராகிருத 'பதைனி' என்னும் சொல்தான் பாலிமொழியில் 'பட்டினி' என்று வழங்கிற்று; பாலியில் உள்ள பட்டினி தமிழில் பத்தினி என்றாயிற்று.

விழிஞத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்து வந்த ஆய்மன்னன் விக்கிரமாதித்ய வரகுணன் (885 - 925) திருச்சாரணத்து மலையில் பத்மாவதிதேவி என்னும் சமண இயக்கியின் உருவத்தைச் செதுக்கி, அதற்குக் கீழே, "ஸ்ரீ திருச்சாரணத்துப் பட்டினிப் படாரர் - சட்டன் வரகுணன் செய்வித்த திருமேனி" என்று கல்லில் வெட்டியிருக்கிறார்.[12] சட்டன் 'சத்ரன்' என்னும் வடசொல்லின் திரிபு, மாணவன் எனப் பொருள்படும் 'பட்டினி' ' பத்மாவதி' தான். அதுவே தமிழில் பத்தினி எனவும் வழங்கும். எனவே இளங்கோவடிகள் காலத்தில் (பத்தாம் நூற்றாண்டில்) பத்மாவதி தேவியைக் குறிப்பதற்கு எழுந்த 'பட்டினி' என்னும் சொல் பத்தினி என்றும் தமிழில் வழங்கலாயிற்று என்பது தெரிகிறது.

சமணப் பெண் இயக்கியான பத்தினித் தேவிக்கும் கண்ணகிக்கும் பொருந்தும்படியாகப் 'பத்தினி' என்னும் சொல்லுக்குக் 'கற்பிற் சிறந்தவள்' என்னும் பொருள் பெறும்படி அச்சொல்லைப் பயன்படுத்தியவர் இளங்கோவடிகளேயாவர். கற்புடைய பெண்டிரைச் சுட்ட பத்தினி என்ற சொல்லைப் பயன்படுத்தியிருப்பதாகச் சங்க இலக்கியங்களில் பார்க்கமுடியாது. திருக்குறளிலும் 'கற்பு', 'நிறை' என்ற சொற்கள் காணப்படுகின்றதே தவிர, 'பத்தினி' என்னும் சொல்லைப் பார்க்கமுடியாது. சிலப்பதிகாரத்தில், வஞ்சின மாலையில், 'பட்டாங்கியானுமோர் பத்தினியே யாமாகில் ' (வரி, 36) என்ற இடத்தில்தான் இளங்கோ பத்தினி என்னும் சொல்லுக்குக் 'கற்புடைய மனைவி' என்னும் பொருள் பெறும்படி

அச்சொல்லைப் பெய்துள்ளார். அங்கும்கூட, தெய்வப்பெண் என்னும் பொருள் தொனிக்கும்படி அச்சொல்லைப் பயன்படுத்தியுள்ள நயம் உணரத்தக்கது. எனவே இங்கு உரைசால் பத்தினி 'பட்டினிப் படாரியரான பத்மாவதி தேவியே என்பது தெரிகிறது.

**ஊழ்வினை - சமணம்**

இனி மூன்றாவது, ஊழ்வினை. சமணத் தத்துவத்தின்படி வினையானது உயிரைத் தொடர்ந்து வருகின்றது என்பர். 'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்' என்று குறளும் இதனையே உணர்த்தும்.

முற்பிறவியில் சிங்கபுரத்தில் பரதனெனும் பெயரோடிருந்த கோவலன், அங்கு வணிகத்தின் பொருட்டு வந்து கபிலபுரத்துச் சங்கமன் என்பவன் சாவுக்குக் காரணமாயினான். அதனால் அவன் மனைவியின் சாபத்துக்கு ஆளாகி இப்பிறவியில் அதே துன்பத்தை அடைந்தான் என்று கோவலனின் முற்பிறவிக் கதையை ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதற்குச் சான்றாகக் காட்டுவார் இளங்கோ. ஆயின் முற்பிறவிக் கதை போன்றவையெல்லாம் கற்பனையேயன்றி வேறன்று. ஏனென்றால் இளங்கோவின் கூற்றிற்கு வேறு உண்மை வரலாற்றுச் சான்று இருக்கின்றது.

**இன்னா - முற்பகல் - பிற்பகல்**

'ஊழிற் பெருவலியாவுள - என்று வள்ளுவர் கூறுவதெல்லாம், ஒருவனின் இப்பிறவியின் நல்வினை தீவினையேயாம். தீவினையை ஒருவன் பிறனொருவனுக்குச் செய்தால் அத்தீவினை மிக விரைவிலேயே அவனிடம் திரும்பி வருகின்றது. 'பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்' என்பது குறள் (319).

சின்னமனூர்ச் செப்பேட்டை வெளியிட்ட மூன்றாம் இராஜசிம்ம பாண்டியனின் மகனான வீரபாண்டியன் கி.பி. 946 முதல் 966 வரை பாண்டிய நாட்டை ஆண்டு வந்தான். இம்மன்னன் ஒரு சோழனைப் போரில் வென்று அவன் தலையைக் கொய்தான் என்றும் அதனால் சோழன் தலைக் கொண்ட வீரபாண்டியன் என்று தன் கல்வெட்டுக்களில் குறித்தான் என்றும் தெரிகிறது. (S. I. I Vol. No : 455). வீரபாண்டியனின் தீவினை அவனை விரைவில் வந்து ஊட்டியதை வரலாறே கூறுகிறது. இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் மகனான ஆதித்த கரிகாலன் வீரபாண்டியனோடு போரிட்டு, அவன் தலையைக் கொய்த செய்தியும், அதனால் வீரபாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி வர்மன் என்று விருது கொண்ட செய்தியும் அவன் கல்வெட்டுக்களில் காணக்கிடைக்கின்றன. (S. I. I. Vol. iii No : 14 ; Ibid. Vol. vii No. 74 and 800; பி. சோ.ச. பகு 1, பக். 72) இதனின்றும் பாண்டிய மன்னன் வீரபாண்டியன் முற்பகற் செய்த தீவினை, பிற்பகலில் அவனிடமே வந்து அவனை ஊட்டியமை வரலாற்றால் அறிய முடிகிறது.

இந்நிகழ்ச்சிகள் இளங்கோவடிகளின் இளமைப் பருவத்தில் அல்லது அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னர் நடந்திருக்க வேண்டும். சிலப்பதிகாரத்தில் சங்கமன் பரதன் கதை கூறப்பட்டிருந்தாலும், அக்கதைக்கும் ஓர் அடிப்படை இவ்வரலாற்று நிகழ்ச்சியேயாகும். ஒருவருடைய முற்பிறவி பற்றிய அறிவு யாருக்குமே இருக்க முடியாது என்பது முற்பிறவியில் செய்த தீவினை காரணம் என்றால், பாண்டியன் சிங்காதனத்திலேயே உயிர் விட்டமைக்குக் காரணம் என்ன என்பதை இளங்கோ எடுத்துக் கூறவில்லை என்பது இங்குச் சிந்திக்கத்தக்கது.

## உண்மையும் கற்பனையும்

இதுகாறும் கூறியவற்றால் இளங்கோவடிகள் கூறவந்த மூன்று உண்மைகளும், அவர் வாழ்நாளில் தம் கண்முன்னால் கண்டறிந்த வரலாற்றுண்மைகளே என்பதும், அவற்றைத் தம் காப்பியத்தில் நேரடியாகக் கூறமுடியாத நிலையில்தான் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோவிலெடுத்தையும், பாண்டியன் அரசு கட்டிலில் உயிர் துறந்ததையும், கோவலன் கொலையுண்டதையும் கூறி, அவ்வுண்மைகளை விளக்க முயன்றுள்ளார் என்பதும், அதற்கு அடித்தளமாக சங்க இலக்கியங்களிலிருந்து கண்ணகி பேகன் கதையினை எடுத்துக் கொண்டு பிற நிகழ்ச்சிகளையும் அதனுடன் இணைத்தார் என்பதும் உணர்தற்குரியது.

அண்மையில் வெளிவந்த[19] ''இளங்கோவடிகள் யார் '' எனும் நூலில் அதன் ஆசிரியர் திரு. ரகுநாதன் அவர்கள், சிலப்பதிகாரக் கதை களப்பிரர் காலத்தையடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சி என்றும், இளங்கோவடிகள் மாணிக்கம் முதலிய நவமணிகளைப்பற்றி மிகவிரிவாகக் கூறியிருப்பதனால் அவர் (இளங்கோவடிகள்) வாணிக(ச்செட்டி) இனத்தைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்ற கருத்தினையும் கூறியிருக்கின்றார். இது பொருந்தாது. ஏனெனின் சிலம்பில் இளங்கோவடிகள் பரதம் (நாட்டியம்), கரவடம் (களவு), வைசிக தந்திரம் (பரத்தையர் பற்றியநூல்), காம சாஸ்திரம், சிற்ப சாஸ்திரம், இசை நுணுக்கம், ஜோதிடம், சைவம், வைணவம், சமணம், பௌத்தம் என்று சூரியனுக்குக் கீழ் இருக்கின்ற அனைத்து விஷயங்களைப்பற்றியும் கூறியிருக்கின்றார். இதனால் இளங்கோ அந்தந்தத் துறையைச் சார்ந்தவர் என்று கூறமுடியுமா?

மழை வளம் கரப்பின் வான்பேரச்சம், பிழையுயிர் எய்தின் பெரும்பேரச்சம், மன்பதை காக்கும் நன்குடி பிறத்தல் துன்பம் அல்லது தொழுதகவில்'' என்று அவர் கூறுவதிலிருந்து அவருடம்பில் மன்னர் இரத்தம்தான் ஓடுகிறதென்று உறுதியாகக் கொள்ளலாம்.

சங்கம் மருவிய களப்பிரர் காலம்பற்றி மிகத்தெளிவான சான்றுகள் இன்று கிட்டவில்லை. களப்பிரர் காலம் என்பது தெளிவில்லாத ஒன்று. பெரும்பாலான ஆசிரியர்கள் தமிழகத்தில் களப்பிரர் ஆட்சி மூன்று நூற்றாண்டு காலம் நிலை பெற்றது என்று கூறினாலும் வேள்விக்குடிச்

செப்பேட்டின் (கி.பி. 8ஆம் நூற்றாண்டு) அடிப்படையில் பாண்டி நாட்டில் களப்பிரர் ஆட்சி ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் நிலை பெற்றிருக்க முடியாது என்று காலஞ்சென்ற பேராசிரியர்கள் கே.வி. சுப்பிரமணிய அய்யர், டாக்டர் B. G. L. சுவாமி போன்றோர் சான்று காட்டி விளக்கியுள்ளனர். (Historical SKetches of Ancient - Deccan.; The Kalabra Interragnum) இதனாலும் மூவரசரில் சோழர் இருந்த இடம் தெரியாத, களப்பிரர் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 5, 6, நூற்றாண்டு) சிலப்பதிகாரம் எழுந்திருக்கமுடியாது. இதனால் திரு. ரகுநாதனின் கொள்கை பொருந்தாது என அறியலாம்.

## குறிப்புகள்

1. முதலாம் பாற்கர இரவிவர்மனுடைய கொச்சின் செப்பேடுகள் Epigraphia Indica iii. P. P. 68 - 69. கி.பி. 1000 ஆம் ஆண்டு.

2. Ibid, Second plate. அடி. 24 - 25, இப்பரிசறிவேன் நெடும்புறையூர் நாடுடைய கோதை இரவி. நெடும்புறையூர் நாடு என்ற பகுதி திருச்சூர் மாவட்டத்தில், 'சிரோவிஹாரம்' என்று வடமொழியில் கூறப்படும் 'தலைப்பள்ளி' என்னும் வட்டமாகும்.

3. 'ஸ்வஸ்தி ஸ்ரீ கோஸ்ரீ பார்க்கரன் இரவிவர்மன் திருவடிக்குச் செல்லாநின்ற இரண்டாமாண்டைக் கெதிர் முப்பத்தையா- மண்டைக்கெதிர் ஆறாமாண்டு துலாத்தில் வியாழந்நின்ற மீன ஞாயிறு எட்டுஞ் சென்ற புதனாண்ட உத்திரத்தினாள்......அட்டி குடுத்தான் மூத்த கூறுவாழின்ற குஞ்ஞிக் குட்டவர்மன் ஆயின அடிகள் வீரகுறும்புறையார் திருவடி......'' Epigraphia Indica Vol. XI. p. p - 343 - 4, வரிகள் 1 - 6 (கி.பி 1021)

4. ஸ்வஸ்தி ஸ்ரீகோ நோயின்மை கொண்டான் கோச்சிரி பாக்கரன் இரவிவர்ம திருவடிக்குச் செல்லா நின்றயாண்டு இரண்டாமாண்டைக் கெதிர் முப்பத்தோராம் ஆண்டு......இடபத்தில் வியாழந்நின்ற வாண்டு......கோயிலதிகாரிகளுக்கு இது கொடுத்து......'' முதலாம் பாற்கரரவியின் பெருநெய்தல் கல்வெட்டு : வரி - 1 - 3, T. A. S. ii P, P. 44.

5. ''சோழப் பெருமானடிகள் அதிகாரிகள்'' முதற்பராந்தக சோழன் (கி.பி. 940) கல்வெட்டு, வரி. 2, S. I. I. Vol. III, Pt. iii, No - 106.

6. திருவலஞ்சுழியிலுள்ள ஒரு கல்வெட்டில் இராசராசன் முதன் மகள் 'மாதேவடிகள்' என்று அழைக்கப்படுகின்றாள். திருவையாற்று உலோக மாதேவீச்சுரம் கல்வெட்டில் வரும் 'சந்திரமல்லி' என்பவளே இம்மாதேவடிகள். சந்திரமல்லி 'சந்திரமௌலி' என்பதன் மரூஉ. இதன் பரியாமே 'மாதேவடிகள்' - (பி. சோ. ச. பகு I. பக். 141,) இதே போன்று 'குஞ்ஞிக்குட்டன்' - 'இளங்கோ' ஆயிற்று. கம்பரும் (12 ஆம் நூற்.) தமது இராமாயணத்தில் வடமொழிப்பெயர்களைத் தமிழ்ப்படுத்தியுள்ளார் என்பதும் நோக்கத்தக்கது. வஜ்ரதம்ஷ்டன் என்ற சொல் வச்சித்து எயிற்றன் என்றும், தூமகேது என்பது புகைக் கொடியோன் என்றும், ரக்தாக்ஷன் என்பதை குருதிக்கண்ணன் என்றும், தூமாக்ஷன் - தூமக் கண்ணன் என்றும் அல்லது புகைக் கண்ணன், யக்ஞசத்ரு - வேள்வி நெடும்பகை, அக்னி கேது - அழல் கொடியோன்,

தூமகேது - புகைக் கொடியோன். இவை அக்கால வழக்கம். இதன் அடிப்படையில் குஞ்நுகுட்டன் - இளங்கோ ஆயிற்று (இன்றும் பாலக்காட்டுப் பகுதியில் 'தாமக்கண்ணன்', 'தூமக்கண்ணன்' எனும் சொற்கள் இழிபொருளில் பயன்படுத்தப்படுகின்றன.

6A. **''என்சிறுக்குட்டன் எனக் கோரின்ன முதென்பிரான்''**

**''கொண்டு வளர்க்கின்ற கோவலக் குட்டர்க்கு''**

**''குட்டன் வந்தென்னைப் புறம் புல்குவான்''**

**''கோது கலமுடைக் குட்டனேயோ''**

**''கோனிளவரசு கோவலர் குட்டன்''**

நாலாயிரத் திவ்யபிரபந்தம், பெரியாழ்வார் திருமொழி, முதற்பத்து நான்காம் திருமொழி, செய் 2 ; 3 ஆம் திருமொழி. செய் 13 : 9 ஆம் திருமொழி, செய். 4. இரண்டாம் பத்து, 9ஆம் திருமொழி, செய். 6, மூன்றாம்பத்து, ஆறாம் திருமொழி, செய். 3.

இராசசிங்கக் குட்டுவன் - செங்குட்டுவன் - குட்டன் என்ற சொல் 9 ஆம் நூற்றாண்டில் குழந்தை, பாலன் என்ற பொருள்களில் வழங்கப்பட்டது.

சோழநாட்டிலும் இன்று பொருள் விளங்காச் சொற்களை மன்னர்க்குப் பெயரிட்டு அழைத்ததைக் கல்வெட்டுச் சான்றுகளால் அறியலாம். கி.பி. 870 முதல் 890 வரை ஆண்ட சோழன் முதலாம் ஆதித்தன் திரு நெய்த்தானம் கல்வெட்டில் கோக்கண்டன் எனப்படுகின்றான் (பல்யானைக் கோக்கண்டனாயின இராசகேசரி வர்மனாலும்'' (S. I. I Vol. III. Pt. III. No. 89. P. 221, T.A.S. Vol. II. P. 75.)

இக்கண்டன் ஆதித்தன் 'கண்டராதித்தன் என்ற முதற்பராந்தகன் இரண்டாம் மகன் பெயரிலும் அச்சொல்லே கண்டர் தினகரன் என்று முதலாம் இராசாதிராசன் மணிமங்கலம் சாசனத்திலும் S. I. I. Vol. II Part I, No. 28, P. P. 57 - 58லும் இராமகுடமூவர் கண்டன் காரிவர்மன் என்று அதேகல்வெட்டிலும் வருவதால் அக்காலப் பெயர்களின் விசித்திரத்தை அறியலாம். குஞ்ஞிவிக்கிரமன், குஞ்ஞிகுட்டன் என்பதால், குஞ்ஞி, குஞ்ஞு, குஞ்சு என்பது, பாலன், இளவல், குழந்தை என்ற பெயரில் வழங்கப்பட்டது.

6B. இரண்டாம் பாற்கரரவியின் இரண்டாம் திருநெல்லிச் செப்பேட்டுச் சாசனம், அடி : 21 - 22, Epi. Ind. XVI P.P - 343 - Ad. 1021.

பதிற்றுப்பத்து 5ஆம்பத்தில் (49) பரணர் கடல்பிறக்கோட்டிய குட்டுவனை 'பெருஞ்சினக் குட்டுவன்' (49 - 17) என்பதால் சினம் கொண்ட முகம் சிவந்திருக்கும் என்பதால் இளங்கோ பெருஞ்சினக் குட்டுவனைச் செங்குட்டுவனாக மாற்றினார் எனக் கொள்ளினும் அமையும்.

**''செறுவர் நோக்கிய கண்தன் சிறுவனை நோக்கியும்**

**சிவப்பு ஆனாவே — என்ற வரி இதனை வலியுறுத்தும்''**

புறப்பாட்டு (1000).

7. இராச சிங்கப் பெருமாள் கல்வெட்டு தற்போது திருச்சூர் மாவட்டம் இருஞ்ஞாலக் குடாவை யடுத்த தாழேக்காட்டுக் கிறித்துவப் பள்ளியில் வைக்கப்பட்டிருக்கிறது. T. A. S. Vol. vii. P. 39.

8. முதலாம் இராசராசன் திருவியலூர்க் கோவிலில் துலாபாரம் புகுந்தான் என்றும் (சோழவம்சச் சரித்திரச் சுருக்கம், பக். 16, தி. அ. கோபிநாதராயர்) இவன் மனைவி முதற் பெருந்தேவியாகிய உலோக மகாதேவி இரணியகருப்பம் புகுந்தாள் என்றும் தெரிகிறது. (S. I. I. Vol. viii, No. 237)

9. "ஸ்வஸ்தி ஸ்ரீ திருக்குணவாய்த் தேவர்க்குச் செல்லா நின்ற யாண்டு நூற்று முப்பத்தேழு. அவ்வாண்டு நகரஞ்செய்து நாற்பத் தெண்ணாயிரவரும் (பட்டகளிருவரும்) வெச்ச விளக்கினுக்கும் குடம்பாடி இருபது நாலு பொதிசென்றது விளக்கில் திருக்குணவா பிழைச் சோரவிது (இ......மது" - T.A. S. Vol. vii. P. 39.

10. This record which may approximately be assinghed to the close of the 9th century, on the basis of the early chare-teristics of vatteluttu Seript and old Malayalam language, employed is more important than the other two (Inscriptions). Since it not only quotes the authority of Tirukkunavay but also employs the era of Tirukkunavay's foundation. "New light of Kunavayerkottam and the date of Silappadikaram Dr. M.G.S. Narayanan. The Journal of Indian History S. I. 1. No. 144, Vol. XLVIII. part iii. Dec. 70. university of Kerala.

இக் குணவாயிற் கோட்டம் இன்று மதிலகம் (திருக்குணாமதிலகம் - த்ருக்கணாமதிலகம்) என்னும் பெயரில் கொடுங்கோளூருக்கு வடக்கேயுள்ளது. அங்கிருந்து கிடைத்த கல்வெட்டொன்று அங்கு 10 - 11 நூற்றாண்டில் சமணக்கோயில் இருந்தது என்பதைக் காட்டுகிறது.

10A. "இஃதக்கறிவு ஆற்றூர் குஞ்ஞி விக்கிரமன் ஆகிய அதிகாரனும்"......இரண்டாம் பாற்கரரவியின் திருநெல்லிச் செப்பேட்டுச் சாசனம். வரி. 21 - 22, Epi, Ind. XVI. P. P. 343 - 4. சாசன ஆண்டு 1021 கி.பி.

11. பி. சோ. ச. பகுதி I: பக். 98. குலோ. சோ. அடி. 46 - 88 எறி பகலொன்றி லெச்சுரமும் போயுதகை நூறித்தன் தூதனை நோக்கினான்.

11A. 'மாதரைக் கொலை செய்தார்களுளரெனவரினும் வந்த தூதரைக் கொன்றுள்ளார்கள் யாவரே தொல்லை நல்லோர்' கம். ராமா ; சுந்தரகாண்டம். 13. படலம்; செய். 113, வரி 3 - 4.

11B. 'பத்தினிப்பாவை நம்பிசீவகன் பாலளானாள்' சீவகசிந்தாமணி 2. காந்தருவதத்தையாரிலம்பகம், செய். 261, வரி.3.ஸ்ரீ திருச்சாரணத்து பட்டினிப்படாரர் சட்டன் வரகுணன் செய்வித்த திருமேனி. (925 A. D)

பத்மாவதி பாலி அல்லது பிராகிருதமொழியில் பட்டினி என்று வழங்கும் பாலி பட்டினித் தெய்வம் தமிழில் பத்தினித் தெய்வம் என வழங்கும்.

12. பிராசீன இலிகிதங்கள், பக். 108. வி. ஆர். பரமேசுவரன் பிள்ளை, நேஷனல் புக் ஸ்டால், கோட்டயம் (மலையாளம்): ஸ்வஸ்தி ஸ்ரீ மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மற்குயாண்டு முப்பத்தெட்டாவது (945) படுவூர்க் கோட்டத்துப் பெருந்திமிரி நாட்டு விளாப்பாக்கத்துத் திருப்பான்மலை அரிஷ்டநேமிபடாரர் மாணாக்கியார் 'பட்டினிக் குரத்தி அடிகளேன் கண்ட கிணறு' (S. I. I. Vol. vii. No. 56 சமணமும்

தமிழும்) பக். 194 - 5 மயிலை. சீனி. வேங்கடசாமி). இங்குப் 'பட்டினிக் குரத்தி' என்பது பத்தினி (பத்மாவதிக்) குரத்தி' என்ற பெயரின் சிதைவு என்பது தெளிவு. அரிஷ்டநேமி, அரிட்டநேமி ஆகிவிடும். 'அரிட்டன்' சிலம்பில் 'அரட்டனா' யிருப்பதும் காண்க. 'அரட்டன் செட்டி தனாயிழை' 30 வரந்தருகாதை : அடி 49; முரசீபத்தனம்' (வான்மீகி. ராமா': கிஷ் : காண்டம், ஸர்க்கம் 42, சுலோகம் 13), முசிறிபட்டினமே; குணகாபத்தனம், லட்சுமிதாசனின் 'சுகசந்தேசம்' (வடமொழி) 13ஆம் நூற்றாண்டு 'பத்தனம்' பட்டினமே.

# 10. சிலப்பதிகாரமும் கலைகளும்

கலைகளைப் பொறுத்தமட்டிலும் அரங்கேற்றுக் காதைக்கு சிலப்பதிகாரத்தில் மிகச் சிறந்த இடமொன்றுண்டு. ஏனெனில், அக்காதையில்தான் பல்வேறு கலைகளைப் பற்றிப் பேசப்படுகின்றன. இவற்றில் இசைக்கலை, நாட்டியக்கலை, இன்னியக்கலை போன்றவை நன்கு விளக்கப்பட்டுள்ளன. எனினும், நாடகக்கலைக்கே இக்காதையில் முதலிடம் தரப்பட்டுள்ளது என்பது நோக்கத்தக்கது. மாதவியென்னும் ஆடற்கணிகைக்கு நாடகம் கைவந்த கலையாக இருந்தது. நாடகம் என்பதற்குத் தொல்காப்பியர் அவர் காலத்தில் என்ன பொருள் கொண்டாரோ, அப்பொருளன்று கரிகாலன் காலத்தில் வழங்கியது என்பது பட்டினப்பாலை வரிகளால் அறியலாகும் செய்தியாகும்.

''நாடக மகளிர் ஆடுகளத் தெடுத்த
விசி வீங்க இன்னியங் கடுப்ப'' (வரி 55 - 6)

என்பதிலிருந்து, நாடக மகளிர் என்பதற்குக் கூத்தியர் என்பது பொருள் என உணரலாம். எனவே முத்தமிழில் ஒன்றான நாடகத் தமிழ் கரிகாலன் காலந்தொட்டே கூத்தொடு இயைந்ததாயிருந்தது என்பது பெறப்படும். அத்தகைய நாடகத்தில் வல்லவளான மாதவியின் கூத்தமைதி பற்றியும், யாழாசிரியன், குழலாசிரியன் இவர்கள் திறமை பற்றியும் நன்கு விளக்கிக் கூறுகின்றது சிலப்பதிகாரமென்னும் பெருங்காப்பியம். நாட்டியம் ஆடுவதற்கு இன்றியமையாத நாட்டிய அரங்கினையும் அந்நூல் நன்கு விளக்கிக் கூறியுள்ளது. நாட்டியம்பற்றி யெழுந்த மிகப்பழமையான வடநூல் பரதமுனிவரின் ''நாட்டிய சாஸ்திரம்'' ஆகும். இந்நூல் முப்பத்தாறு அத்தியாயங்களில், ஏறத்தாழ ஆறாயிரம் காரிகைகளில் நாட்டியத்தைப் பற்றிய எல்லாக் கூறுகளையும் விளக்கிக் கூறுகின்றது.

''தமிழிலும் நாட்டியம் பற்றிய பலநூல்கள் எழுந்தன. சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதிய பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான அடியார்க்கு நல்லார், தமது உரையில் பன்னிரண்டு நாட்டிய நூல்களைக் காட்டியுள்ளார். அவையாவன 1. பரதம், 2. அகத்தியம், 3. முறுவல், 4. சயந்தம், 5. குணநூல், 6. செயிற்றியம், 7. சிகண்டியின் இசை நுணுக்கம், 8. யாமளேந்திரரின் இந்திரகாளியம், 9. அறிவனாரின் பஞ்சமரபு, 10. ஆதிவாயிலாரின் பரத்சேனாபதியம், 11. பாண்டியன் மதிவாணனாரின் நாடகத் தமிழ்நூல், 12. கூத்த நூல் என்பவையாம். இவற்றில் முதல் இரண்டும் இறந்துவிட்டன.

எட்டு ஒன்பது எண்ணிக்கையிட்ட நூல்கள், 11 முதல் 13ஆம் நூற்றாண்டிற்குள் தோன்றியவையாகலாம். இந்நூற்களுள் ஒன்றேனும் தற்காலத்திலுள்ளதாகப் புலப்படவில்லை!

மேற்கூறிய நூல்களுள் மதிவாணனார் நாடகத்தமிழ் நூலும், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் மேற்கோளாகக் காட்டிய ''சுத்தானந்தப்பிரகாசம்'' என்னும் பரத நூலும், வடமொழியிலெழுந்த நாட்டிய சாஸ்திரத்தைத் தழுவியவையாகவோ, அன்றி, அந்நூலிலிருந்து பகுதிகளை நேரடியாக எடுத்துக் கொண்டவையாகவோ காணப்படுகின்றன. இது அடியார்க்கு நல்லார் அந்நூலிலிருந்து எடுத்தாண்டுள்ள சான்றுகளிலிருந்தும், ஐயரவர்கள் மேற்கோளாகக் காட்டியுள்ள சுத்தாநந்தப் பிரகாசம் என்னும் நூலின் பகுதிகள் சிலப்பதிகாரத்தில் காணப்படுவதினின்றும் அறியலாம்.

எடுத்துக்காட்டாக, ''இருவகைக் கூத்தினிலக் கணமறிந்து (சிலம்பு. 1 : 3 : 12) என்ற வரிக்கு உரை எழுதப்போந்த அடியார்க்கு நல்லார், அறுவகை நிலை, ஐவகை பாதம், அங்கக் கிரியை பதினாறு, வருத்தனை நான்கு, நிருத்தகை முப்பது என்று கூறுவர். இவை சுந்தாநந்தப் பிரகாசம் என்னும் நூலுள் காணப்படும். அந்நூலுடையாரும் பரத முனியின் நாட்டிய சாஸ்திரத்தில் உள்ளனவற்றை அவ்வாறே எடுத்துக் கூறியிருப்பதையறியலாம்.

எழுவகை கூத்தின் இலக்கணமாக அறுவகை நிலைகளை, 1. வைணவம், 2. சமநிலை, 3. வைசாகம், 4. மண்டலம், 5. ஆலீடம் 6. பிரத்தியாலீடம் என்று கூறுகின்றார். இவை நாட்டிய சாஸ்திரம் பதினொன்றாம் அத்தியாயத்தில் 'சாரீவிதானம்' என்னும் தலைப்பில் 'ஸ்தானங்கள்'' இவையெனக் கூறும்போது வருகின்றது.

(காரிகை 47)

**''வைஷ்ணவம் ஸமபாதம் ச**
**வைசாகம் மண்டலம் ததா**
**பரத்யாலீடம் ததாலீடம்**
**ஸ்தானோந்யே தானிஷணந்ருணாம்''**

என்று வரும். ஐவகை பாதமாவன, 1. சமநிலை 2. உற்கடிதம் 3. சஞ்சாரம் 4. காஞ்சிதம் 5. குஞ்சிதம் என்பன, அவ்வடமொழி நூலில் பத்தாம் அத்தியாயத்தில் 36 ஆம் காரிகையாக வருகிறது.

உல்கட்டித : ஸமஸ்சைவ .

ததாக்ரதல ஸஞ்சர :

அஞ்சித : குஞ்சிதஸ்சைவ

பாத : பஞ்சவித : ஸ்மருத:

இனி வருத்தனை நான்காவன : 1. அபவேட்டிதம், 2. உபவேட்டிதம், 3. வியாவர்த்திதம், 4. பராவர்த்திதம் என்பன. இவை நாட்டிய சாஸ்திரம் ஒன்பதாம் அத்தியாத்தில் 185 ஆம் காரிகையாக

''அதா வேஷ்டித மேகம் ஸ்யா
துத்வேஷ்டித மதாபரம்
வயாவர்த்திதம் த்ருதீயம்து
சதுர்த்தம் பரிவர்த்திதம்'' என வருகிறது.

இனி நிருத்தக்கை முப்பதை ஒன்பதாம் அத்தியாத்தில் ஹரஸ்தாபிநயம் 6 ஆம் காரிகையில், ''சதுரஸ்ரௌ ததோத்வாத்தௌ'' என்று தொடங்கி, கர்மாணி சநிபோதத என்று முடியும் காரிகையில் காணலாம். வடநூலில் நருத்த ஹ—ஸ்தம் 29 -ஆக இருக்கும்போது, சுத்தானந்தப் பிரகாசத்திலும் 29 ஆக இருந்தாலும், ஒரே ஒரு பெயரில் மட்டும் மாற்றம் இருப்பதைக் காணலாம்.

| சுத்தானந்தப் பிரகாசம் நிருத்தக்கை, பிண்டிக்கை:30 சிலம்பு: உ. வே. சா. பதிப்பு 1900 பக்கம் 81 | | நாட்டிய சாஸ்திரம் அத். 9 ஹஸ்தாபிநயம், நருத்த ஹஸ்தம் 29. காரிக. 6 |
|---|---|---|
| சதுரச்சிரம் | 1 | சதுரஸ்ரம் |
| உத்துவீதம் | 2 | உத்வைர்த்தம் |
| தலமுகம் | 3 | தலமுகம் |
| சுவத்திகம் | 4 | ஸவஸ்திகம் |
| விப்ரகீர்ணம் | 5 | விப்ரகிர்ணம் |
| அரால கடகாமுகம் | 6 | அரால கடகாமுகம் |
| ஆவித்த வத்திரம் | 7 | ஆவித்த சக்ரம் |
| சூசி முகம் | 8 | ஸுசாஸ்யம் (ஸுசீமுகம்) |
| இரேசிதம் | 9 | ரேசிதம் |
| அர்த்த ரேசிதம் | 10 | அர்த்த ரேசிதம் |
| உத்தான வஞ்சிதம் | 11 | உத்தான வஞ்சிதம் |
| பல்லவம் | 12 | பல்லவம் |
| நிதம்பம் | 13 | நிதம்பம் |
| கசதந்தம் | 14 | கேசபந்தம் |

| | | |
|---|---|---|
| இலதை | 15 | லதாக்யம் |
| (யானைக்கை) கரிக்கை | 16 | கரிஹஸ்தம் |
| பக்கவஞ்சிதம் | 17 | பக்ஷவஞ்சிதகம் |
| பக்கபிரதியோகம் | 18 | பக்ஷப்ரத்யோதகம் |
| கருடபக்கம் | 19 | கருட பக்ஷம் |
| தண்டபக்கம் | 20 | தண்ட பக்ஷம் |
| ஊர்த்துவ மண்டலி | 21 | ஊர்த்வ மண்டலி |
| பக்க மண்டலி | 22 | பார்ச்வ மண்டலி |
| உரோ மண்டலி | 23 | உரோ மண்டலி |
| உரப்பார் சுவர்ந்த மண்டலி | 24 | உர. பார்ச்வார்த்த மண்டலம் |
| முட்டிக சுவத்திகம் | 25 | முஷ்டிகஸ்வஸ்திகம் |
| நளினி பதும கோசம் | 26 | நளினி பத்ம கோசகம் |
| அலபதுமம் | 27 | அலபத்மோல் பணம் |
| இலளிதை | 28 | லளிதம் |
| வலிதை | 29 | வலிதம் |
| உற்பண் | 30 | |

இனி மதிவாணர் நாடகத்தமிழ் நூலும், இதே நாட்டிய சாஸ்திரத்திலிருந்து நேரடியாகப் பகுதிகளை மொழிபெயர்த்திருப்பதைக் காணலாம். ''பிண்டியும் பிணையலும் எழிற்கையுந்த தொழிற்கையும் (சிலம்பு : 1 : 3 : 18) பிண்டி அல்லது இணையா வினைக்கையினை நாட்டிய சாஸ்திரம் அஸம்யுதஹஸ்தம் என்கிறது. பிண்டிக்கை 24 என்பர் அந்நூலார். நாட்டிய சாஸ்திரத்தில் ஒன்பதாம் அத்யாயம், ஹஸ்தாபி நயம் 4ஆம் காரிகையில் 24 அஸம்யுத ஹஸ்தங்களை,

''பதாகஸ்திரி பதாகஸ்ச
ததாவை கர்த்தரீமுக
அர்த்த சந்ரோ ஹ்யராளஸ் ச
சுக துண்டஸ் ததைவ ச
மூ ஷடிஸ்ச சிகராக்யஸ்ச
கபித்த : கடகாமுக :
ஸீசாஸ்ய : பத்மகோச : ஸ
ர்ப்பசிரா ம்ருக சிர்ஷக :

காம்கூல கோல பத்மஸ்ச

சதுரோ ப்ரமரஸ் ததா

ஹம்ஸாஸ்யோ ஹம்ஸ பக்ஷஸ்ச

ஸந்நம்சோ முகளஸ்ததா

உளர்ண்ண நாபஸ்தாம்ர சூட

ஸ்சதுர்வவிம் சதிரீரிதா :

அஸம் யுதா : ஸம்யுதாம்ஸச

கததோ மே நிபோதத :"

என்று கூறுகின்றது. இச்செய்யுளைத் தமிழில்,

"இணையா வினைக்கை மியம்புங்காலை
அணைவுறு பதாகை திரி பதா கையே
கத்தரிகை தூபமராள மிளம்பிறை
சுகதுண்டம்மே முட்டி கடகம்
சூசி பதும கோசிகந் துணிந்த
மாசில் காங் கூலம் வழுவாறு கபித்தம்
விற்பிடி குடங்கை யலாபத்திரமே
பிரமரந்தன்னொடு தாம்பிரசூடம்
பிகாச முகுளம் பிணடி தெரிநிலை,
பேசிய மெய்ந்நிலை உன்ன மண்டலம்
கதுர மான்றலை சங்கே வண்டே
அதிர் விலிலதை கபோத மகரமுகம்
வலம்புரி தன்னொடு முப்பத்து மூன்றென்
றிலங்க மொழிப் புலவரிசைத்தன ரென்ப" என்பர்.

இங்கும் வடமொழிச் செய்யுளில் 24 இணையா வினைக்கை பற்றிக் கூறும்பொழுது, தமிழ்மொழி பெயர்ப்பில் 9 வினைக்கைகளைச் சேர்த்து 33 வினைக்கை கூறப்பட்டுள்ளது என்பதுதான் வேற்றுமை.

இனி, பிணையலை வடமொழியில் ஸம்யுத ஹஸ்தம் என்பர். அவை பதினைந்து என்கிறது நாட்டிய சாஸ்திரம், ஒன்பதாம் அத்தியாயம் 5ஆம் காரிகை.

"அஞ்சலிஸ்ச கபோதஸ்ச
கர்க்கட : ஸவஸ்திகஸ்ததா
கடகா வர்த்த மானஸ்சா

ப்யுத் ஸங்கோ நிஷதஸ்ததா
தோள : புஷ்ப புடஸ் சைவ
ததா மகர ஓவ ச
கஜ தந்தோ வஹித்தஸ் ச
வர்த்த மானஸ்தனதவ ச
ஏதே துஸம்யுதா ஹஸ்தா
மயா ப்ரோக் தாஸ்தர யோதச
ந்ருத்த ஹஸ்தான தஸ் சோர்த்வம்
கக தோ மே நிபோதத''

இதனையே பாண்டியன் மதிவாணனார் தமது நாடகத் தமிழ் நூலில்,

''எஞ்சுத லில்லா விணைக்கை மியம்பில்
அஞ்சலி தன்னொடு புட்பாஞ்சலியே
பதுமாஞ் சலியே கபோதங் கற்கடகம்
நலமாஞ் சுவத்திகம் கடகா வருத்தம்,
நிடதந் தோரமுற் சங்க மேம்பட
உறுபுட் பபுட மகரஞ் சயந்தம்
அந்தமில் காட்சி யபய வத்தம்
எண்ணிய வருத்த மானந் தன்னொடு
பண்ணுங்காலைப் பதினைந்தென்ப'' என்பர்.

நாட்டிய சாஸ்திரம் ஒன்பதாம் அத்தியாயம், ஹஸ்தாபிநயத்தில் வரும் 17, 28, 32, 35, 42, 50, 54, 67, 75, 48...... - , - , 78, 86, 106 ஆகிய காரிகைகளின் மொழிபெயர்ப்பே பிண்டிகைக்குச் சுத்தானந்தப் பிரகாசத்தில் காட்டிய சூத்திரங்களுள் இரண்டு தொட்டு முப்பத்தி மூன்று வரையுள்ள சூத்திரங்களாகும். மாதிரிக்கு ஒன்று காணலாம்.

''ப்ரஸாரிதா : ஸமா : ஸர்வ்வா
யஸ்யா குல்யோ பவந்தி ஹி
குஞ்சிதஸ்ச ததாம் குஷ்ட
ஸபதாக இதி ஸ்ம்ருத : ''

(நாட். சாத். அத 9 காரி : 7)

'பதாகை யென்பது பகருங்காலைப்
பெருவிரல் குஞ்சித் தலாவிரனான்கு
மருவி நிமிகு மரபிற்றென்ப''

இவ்வாறே பிண்டிகை முப்பதும் பிணையல் பதினைந்தும் நாட்டிய சாஸ்திரத்தின் ஒன்பதாம் அத்தியாயத்தில் வரும் ஹஸ்தாபிநயம் என்ற தலைப்பின் கீழ்வரும் காரிகைகளின் மொழி பெயர்ப்பாகும் என்பதனைக் காணலாம்.

இனி, மாதவி நாட்டியம் ஆடிய அரங்கம் பற்றிய விளக்கங்கள் சிலப்பதிகாரத்தில் உள்ளன. அரங்கின் நீளம் அகலம் போன்றவற்றை, அரும்பதவுரை யாசிரியர் அடியார்க்கு நல்லார் ஆகியோர் விளக்கமாகக் கூறியுள்ளனர். நாட்டிய அரங்கமானது ஏழுகோல் அகலம், எட்டுக் கோல் நீளம், ஒரு கோல் உயரங் கொண்டு அரங்கின் பலவகையினின்றும் உத்தரப்பலகைக்கு நாற்கோல் உயரம் கொண்டதாக இருக்க வேண்டும் என்று இளங்கோவடிகள் கூறியுள்ளார் (சிலம்பு 1 : 3 : 95 : 113). இவ்வளவை முறை அவருக்கு முன்னால் வாழ்ந்த பெயர் தெரியாத ஆசிரியர் எழுதிய சுத்தானந்தப் பிரகாசத்தில் கூறியிருப்பதை இளங்கோவடிகள் அப்படியே தம் காப்பியத்தில் எடுத்தாண்டிருப்பதேயாகும்.

1. அரங்கினுயரமு மகலமுநீளமும்
பொருந்த நாடி யுரைக்குங்காலைப்
பொருந்தண் மால்வரைச் சிறுகழைக் கண்ணில்
இருபத்து நால்விரற் கோலளவதனால்
எழு கோலகலத் தெண்கோ னீளத்
தொரு கோலுயரத் துறப்பின தாகி
உத்தரப் பலகையோ டரங்கின் பலகை
வைத்த விடைநில நாற்கோலாகப்
பூதரை யெழுதி மேனிலை வைத்து
நந்தி யென்னுந் தெய்வமு மமைத்துத்
தூணிழற் புறப்பட மாண்விளக் கெடுத்து
..........................................................
கோவும் யானையும் குரங்கும் பிச்சனும்
பாவையும் பாங்குடைப் புருடாமிருகமும்
யாவையும் மெழுதி மிந்நிலம் விளங்க
பாவையர்க் கியற்றுவ தரங்கெனப்படுமே''

சிலம்பு அரங்கேற்றுக் காதை : –

கோலள விருபத்து நால்விரலாக
எழுகோலகலத் தெண்கோனீளத்
தொருகோ லுயரத் துறப்பின தாகி

உத்தரப் பலகையோ டரங்கின் பலகை
வைத்த விடைநில நாற்கோலாக
ஏற்ற வாயிலிரண்டுடன் பொலியத்
தோற்றிய வரங்கிற் றொழுதன ரேத்தப்
பூதரை யெழுதி மேனிலை வைத்துக்
தூணிழற் புறப்பட மாண்விளக் கெடுத்தாங்கு'

மேற்கூறிய எடுத்துக்காட்டுப் பகுதியினின்றும், இளங்கோவடிகள் சுத்தானந்தப் பிரகாச நூலை நன்கறிந்தவர் என்பதும், அந்நூலிலிருந்து தமக்கு வேண்டிய பகுதிகளை அப்படியே மாறுதலின்றி எடுத்தாண்டிருக்கிறார் என்பதும் உறுதியாகின்றது. இச்சுத்தானந்தப் பிரகாச நூலாரும் பரதமுனிவரின் 'நாட்டிய சாஸ்திரம்' என்னும் வடநூலைப் பெரும்பாலும் தழுவியும், மொழிபெயர்த்தும் தம் நூலை யாத்துள்ளார் என்பதும் முன்னர் கூறிய எடுத்துக்காட்டுகளினின்றும் உணரலாம்.

இன்னும், தொழுதன ரேத்தப், பூதரையெழுதி'' (சிலம்பு 1 : 3 : 109 - 107) என்ற பகுதிக்கு அரும்பதவுரைகாரர் 'அந்தணர், அரசர், வணிகர், சூத்திரரென்று நாலுவருணத்துப் பூதரையும் என்றும், அடியார்க்கு நல்லார் ''நால்வகை வருணப் பூதரையும் எழுதி'' என்றும் கூறியிருப்பது, நாட்டிய சாஸ்திரத்தின் இரண்டாம் அத்தியாயமான 'மண்டபவீதி''யில் வரும் காரிகைகள்.

38. ''ப்ரதமே ப்ராம்மண ஸ்தம்பே'' என்றும்,

39. ''ததஸ்ச க்ஷத்ரிய ஸ்தம்பே'' என்றும்,

40. ''வைச்ய ஸ்தம்பே, விதி கார்ய்யோ'' என்றும்

41. ''சூத்ர ஸ்தம்பே விதிகார்ய்ய'' என்றும் வருகின்ற காரிகைகளைப் படித்ததனால்தான் என்பது தெளிவு. இதற்கு அடியார்க்கு நல்லார் எடுத்துக்காட்டாகக் காட்டியிருக்கின்ற நச்சினார்க்கினியர் மேற்கோள் செய்யுளும் (பக். 115 சிலம்பு. உ. வே. சா. பதிப்பு 1960 - அதன் ஆசிரியர் பெயர் இன்னது எனத் தெரியாவிட்டாலும்) காரணமாக இருந்திருக்கலாம்; அல்லது இப்பகுதியை (பூதரையெழுதி என்னும் பகுதி) இளங்கோவடிகள் நேரடியாக நாட்டிய சாஸ்திரத்தினின்றும் கொண்டார் எனக் கொள்ளினும் அமையும்.

இனி, அரங்கேற்றுக் காதையில், மாதவி ஐயாண்டு நிரம்பிய பின்னர், ஏழாண்டு நாட்டியப் பயிற்சி பெற்று, பன்னிரண்டாண்டு அகவையில் சோழன் முன் ஆடினாள் என்பதை,

''ஏழாண்டியற்றியோ ரீராறாண்டிற்
சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி'' (10 - 11)

என்ற பகுதியில் வரும் பன்னிரண்டாண்டு என்னும் ஆண்டுக் கணக்குப் ''பரத சேனாபதீயம்'' என்னும் நாட்டிய நூலினுள் காணப்படுகின்றது.

'வட்டணையுந் தூசியு மண்டலமும் பண்ணமைய
எட்டுட னிரண்டாண் டெய்திய பின் – கட்டளைய
கீதக் குறிப்பு மலங்கார முங்கிளர
சோதி தரங்கேறச் சூழ்''

(சீவ. சிந். செய். 673 நச்சி : மேற்கோள்)

இவ்வாறு பன்னிரண்டாண்டகவையில் மாதவிக்குத் தலைக்கோல் தானம் கொடுத்ததாகச் சிலம்பு கூறுகின்றது. இத்தலைக் கோல் பட்டமும் சங்ககாலமளவு பழமையான தொன்றன்று. 'தலைக்கோல்' போன்ற பட்டங்கள் இராசராசன் கால முதற்கொண்டுதான் கொடுக்கப்பட்டதாக வரலாற்றுச் சான்றுகளினின்றும் தெரியவருகிறது. 'தலைக்கோல்' பட்டம் பெற்ற நாட்டியக் கணிகை 'தலைக்கோலி' எனப்பட்டனள் என்பது பதியிலாள் நக்கன் அரங்கமான சயங்கொண்ட சோழத் தலைக்கோலியும் (S. I. I. Vol. V. No. 430), நக்கன் பவழக்குன்றான மதுராந்தகத் தலைக்கோலியும் (Ibid) என்ற கல்வெட்டுப் பகுதிகளால் அறியலாம்.

இக்கணிகையரில் சிலர், தாம் விரும்பியவரை மணந்து நல்வாழ்க்கை நடத்தி வந்த செய்தியும் கல்வெட்டுகளில் அருகியேனும் காணப்படுகின்றது. முதல் இராசாதிராச சோழன் காலத்தில் திருவொற்றியூரிலிருந்த தேவரடியாளான 'சதுராள் சதுரி' என்பாள், நாகன் பெருங்காடனுடைய இல்லாள் என்று அவ்வூர்க் கல்வெட்டொன்று (Ins - 147061912) கூறுகின்றது.

மூன்றாம் குலோத்துங்க சோழனின் பதினொன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று (Ins 411061925) அவ்வூர்க் கோயில் தேவரடியாள் ஒருத்தி மணம் புரிந்து கொண்டமையைக் குறிக்கின்றது. எனவே தளிச்சேரிப் பெண்டுகளாகிய பதியிலார் தனித்தேனும், மணம் புரிந்து கொண்டு தம் வாழ்க்கையை நடத்தி வரலாம் என்பதும் அக்கால வழக்கமாயிருந்தது என்பது தெளிவாகும். அன்னோர் இசையிலும் நாட்டியத்திலும் வல்லுநராய், திருக்கோவில்களிலும், அரசவைகளிலும் சிறப்பெய்தியிருந்தமையால் சமுதாய வாழ்வில் அவர்கட்குப் புகழும் மதிப்பும் ஏற்பட்டிருந்தமை ஈண்டுக் குறிப்பிடத்தக்க தொன்றாகும். இதனாலேயே மன்னரும் அவரை மணம் புரிந்து கொள்ள விழைந்தனர் என்பது மணிமேகலைக் காப்பியத்தாலும் அறியலாம்.[3]

இனி, கூத்தில் தேசி, மார்க்கம் போன்றவற்றைப்பற்றிச் சிலம்பு கூறுகிறது. ஆரியக்கூத்து பற்றியும் அது கூறுகிறது. ஆரியக்கூத்து என்பது வடநாட்டுக் கூத்தாகும். திருமாலின் குடக்கூத்தையும், பேடியாடலையும், சிவபெருமானின் கொக்கரையையும் எடுத்துக்காட்டாகக் கூறலாம். சேரமான் பெருமாள் நாயனாரின் பொன் வண்ணத்தந்தாதி (செய் 6, 31), ஆதியுலா (வரி

: 47)வில் கொக்கரையும் குடக்கூத்தும் பாண்டரங்கக் கூத்தும், பொன் வண்ணத்தந்தாதி செய். 32, 33லும், பெரியாழ்வார். திருமொழி இரண்டாம்பத்து ஒன்பதாம் திருமொழியில் குடக்கூத்தும், ஆண்டாளின் நாச்சியார் திருமொழி, 3 ஆம் திருமொழி, 6 ஆம் செய்யுளில் அதே குடக்கூத்தும் விளக்கப்பட்டுள்ளன. இவற்றால் மகேந்திரவர்மப் பல்லவன் காலத்திற்குப் பிறகு இக்கூத்து வகைகள் நன்கு வளர்ச்சி பெற்ற நிலையினை அறியமுடிகிறது.[3A]

ரூபகம் உருவகம் 1. நாடகம் 2. பிரகரணம், 3. அங்கம், 4. வியாயோகம், 5. பாணம், 6. ஸமவகாரம், 7. வீதி, 8. பிஹஸனம், 9. டிமம், 10. ஈகா மிருகம் என்று பத்து வகைப்படும். அவற்றுள் ஒன்றான பிரஹஸன முறையில் மகேந்திரவர்மன் ஒரு நூலியற்றி அதற்கு மத்தவிலாசப் பிரஹசனம் என்று பெயரும் இட்ட செய்தி வரலாற்றால் அறிவதொன்றாகும். அறம், பொருள், இன்பம், வீடு என்பவை இவ்வுருவகங்களில் அமைகின்றதை வைத்து அவை நாடகம், பிரகரணம், பிரகரணப் பிரகரணம், அங்கம் என நால்வகைப்படும் என்பர் மதிவாணனார்.

**பிற்காலக் கூத்துகள்**

எனவே ஆரியக் கூத்து வகைகள் தென்னாட்டில் நன்கு பரவிய ஏழு, எட்டு நூற்றாண்டுகளில் அல்லது அதற்கும் பின்னர்தான் மதிவாணனார் நாடகத் தமிழ்நூல், பரதசேனா பதியம், சுத்தானந்தப்பிரகாசம் ஆகிய பரத நூல்கள் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது. மு. அருணாசலமும் இதனையே கூறுவர்.

மத்த விலாசப் பிரகசனம் போன்ற பல்லவர் காலத்து வடமொழி நாடகங்கள் (கி.பி. 7ஆம் நூற்றாண்டு) தொண்டை மண்டலத்திலும், குலசேகர ஆழ்வாரின் (கி.பி. 9 ஆம் நூற்றாண்டு) தபதீஸம் வரணம், 'சுபத்திரா தனஞ்சயம்', விச்சின்னாபிஷேகம் போன்ற வடமொழி நாடகங்கள் சேர நாட்டிலும் நடிக்கப்பட்டன. ஆரியக் கூத்து எனப்படுபவை, இவ்வடமொழி நாடகங்களேயாம். இவை சில பலரைக் கொண்டும், சிலசிலரைக் கொண்டும் நடித்துக் காட்டப்பட்டன. இத்தகைய நடிப்புத் தொழிலில் (கூத்தாடுவதில்) ஈடுபட்டவர்கள், சாக்கை, சாக்கையன் என்றழைக்கப்படும் இனத்தவர். இவர்கள் எட்டாம் நூற்றாண்டிலோ, அல்லது சற்று அதற்கு முன்னரோ தோன்றிய இனத்தவர்.[3B]

தமிழகத்தில் திருவேளை அறை (திருவெள்ளறை) போன்ற ஊர்களிலும், சேரநாட்டில் பறையூர் (பறையூர் - பறவூர் Modern Parur in Ernakulam District) போன்ற ஊர்களிலும் வாழ்ந்து வந்தவர்.

பிராமணப் பெண்ணுக்கும் க்ஷத்திரயனுக்கும் (சூத்திரப்பெண்) பிறந்த கலப்பு சாதியர்.[3C]இரண்டாம் ஆதித்த கரிகாலனின் ஆட்சியில் (கி.பி. 967 இல்) இத்தகைய சாக்கையர்களைக் கொண்டு கோவில்களில்

திருவிழாக்களின்போது ஆரியக்கூத்தாட வைத்த செய்தி அவரது கல்வெட்டால் அறியலாம்.[4] சேரநாட்டு சாக்கையர்களைப் பற்றிச் சிலப்பதிகாரமும் கூறுகின்றது. (கூத்தச் சாக்கையன் ஆடலில் மகிழ்ந்து 28 : 77) ஆயின் அச்சாக்கையனின் இயற்பெயரை ஏன் கூறவில்லை என்பது சிந்திக்கத்தக்கது.

திருவிடை மருதூர்க் கல்வெட்டினின்றும் (கி.பி. 967) கீர்த்தி மறைக்காடனான திருவேளை அறைசாக்கை ஏழுஆரியக் கூத்தாடுவதற்கு நிவந்தம் பெற்றிருக்கின்றான் என்று தெரிகிறது. இவ்வாரியக் கூத்து, தற்காலத்து ஒற்றையாள் நாடகம் (Mono Act) போன்றது.[5] இக்கூத்துக்கள் நடிப்பதற்குக் கோயில்களில் கூத்தம்பலங்கள் சேரநாட்டில் ஏற்பட்டதே ஒன்பதாம் நூற்றாண்டில்தான்.[6]

இச்சாக்கையன் ஆடும் கூத்து 'ஆரியக்கூத்து' எனப்பட்டது என்பதைத் திருவிடைமருதூர்க் (கி.பி. 967) கல்வெட்டே கூறும். எனவே கி.பி. 9,10 ஆம் நூற்றாண்டுகளில், கூத்தானது, தமிழ்க்கூத்து, ஆரியக்கூத்து என இருவகைப்பட்டது. தமிழ்க்கூத்து நாட்டியத்தைக் குறித்தபோது, ஆரியக்கூத்து வடநாட்டுப் புராணங்களையும் இதிகாசங்களையும் நடித்துக்காட்டுவதைத் குறிக்கின்றது. எனவேதான் இளங்கோவடிகளும் ''இருவகைக் கூத்திலக்கணம் அறிந்து'' (சிலம்பு 1312) என்கிறார். ஆரியக்கூத்தினைப் பறையூர்க் கூத்துச் சாக்கையனும், தமிழ்க் கூத்தினை மாதவியும் ஆடினர்.

**சங்ககாலத்தவையன்று**

இளங்கோவடிகள் கூறியுள்ள கூத்து வகைகள் எட்டாம் நூற்றாண்டளவில் இங்கு ஓரளவு வளர்ச்சி பெற்றன எனலாம். சிலப்பதிகாரத்தில் வரும் குடக்கூத்து, கொடு கொட்டிக் கூத்து, பாண்டரங்கம், கொக்கரை, அல்லியம், பேயாடல் போன்ற கூத்து வகைகள் தென்னாட்டில் சைவமும், வைணவமும், தழைத்தோங்கிய காலத்தில் புராணங்களினடிப்படையில் வளர்ந்தவையாகும். சிவன் கொக்கரையும் குடமாடலையும் உடையவன் என்று சேரமான் பெருமான் நாயனாரது ''பொன் வண்ணத் தந்தாதி'' கூறுகிறது.[7] திருமாலின் குடக்கூத்தினை ஆழ்வார்களில் பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் போன்றோர் பரவலாக எடுத்தோதியுள்ளனர். எனவே ஆழ்வார்களும் நாயன்மார்களும் தங்கள் பரசுரங்களிலும் பதிகங்களிலும் கூறிய விஷயங்களையே - அவற்றின் மொழிமாற்று வகைகளையே -இளங்கோவடிகளும் அரங்கேற்றுக் காதையில் கூத்தமைதியில் கூறியுள்ளார். அதனால் இவை சங்ககால விஷயங்கள் ஆகா.

நாடகம் நாட்டியம் ஆகியவற்றைப் பற்றிக் கூறவந்த மிகப்பழமையான நூல் பரதமுனிவரின் (4ஆம் நூற்றாண்டு வாழ்ந்தவர்) நாட்டிய சாஸ்திரமென்னும் வடநூலாகும். சிலப்பதிகாரத்தில் வருகின்ற நாட்டியக் குறிப்புகளுக்கு அடியார்க்கு நல்லார் மேற்கோளாகக் காட்டியுள்ள

நூல்களையும், அவற்றின் பகுதிகளையும் வைத்துப் பார்க்கும்பொழுது மதிவாணனார் நாடகத் தமிழ்நூல் சுத்தாநந்தப் பிரகாசம், பரத சேனாபதீயம் போன்றவை பரத முனியின் ''நாட்டிய சாஸ்திரம்'' என்னும் நூலின் சுலோகங்களின் (காரிகைகளின்) நேர் மொழி பெயர்ப்பாக இருக்கின்ற காரணத்தாலும், சுத்தாநந்தப் பிரகாசம் போன்ற நூல்களிலிருந்து பகுதிகளை அப்படியே இளங்கோவடிகள் எடுத்தாளுகின்ற காரணத்தாலும் இளங்கோவடிகள் மேற்சொல்லிய நூல்களின் உதவியினால் அரங்கேற்றுக் காதையை எழுதினாராதல் வேண்டும்.

சமணமுனிவரான இளங்கோவடிகள், நாட்டியம், நாடகம், இசை, இன்னியம், அரசியல், போர், சோதிடம் ஆகியவற்றை யெல்லாம் தம் நூலில் மிக இலகுவாகக் கூறியுள்ளார் என்றால் அதற்குக் காரணம், அவர் அத்துறைகளிலெல்லாம் நேரடி அனுபவம் பெற்றவர் என்பதன்று; மாறாக அத்துறைகளைப்பற்றி விளக்க எழுந்துள்ள நூல்களை யெல்லாம் அவர் கற்றுத் தேர்ந்தார். ''நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து'' (அரங்கேற்றுக் காதை) வரி 40, என்று கூறுவதனால், அவர் வடமொழி நாட்டிய சாஸ்திரத்தையேனும் அல்லது அதைத்தழுவி இயற்றப்பட்ட தமிழ்ப்பரத நூலையேனும் குறித்திருக்கலாம். 'சுத்தானந்தப்பிரகாசம்' போன்ற நூற்கள், நாட்டிய சாஸ்திரம் தமிழகத்தில் நன்கு பரவிவிட்ட பல்லவர் காலத்திற்குப் பின்னால் தான் தோன்றியிருக்க வேண்டும். எனவே அதன் பகுதிகளை அப்படியே பயன்படுத்தியிருக்கும் 'சிலம்பு' பிற்காலத்தது என்பதில் ஐயத்திற்கிடமில்லை.

ஆகவே சிலப்பதிகாரத்தில் விளக்கியுள்ள நாட்டியக் கூறுகளுக்குச் சங்ககாலப் பழமையில்லையென்பதும் வடமொழி நாட்டிய சாஸ்திரத்தின் தழுவல்களான மதிவாணர் நாடகத் தமிழ்நூல், பரத சேனாபதீயம், சுத்தானந்தப் பிரகாசம் (கி.பி. 9 ஆம் நூற்றாண்டு) ஆகிய நூற்களில் கூறப்பட்ட விஷயங்களே சிலப்பதிகாரத்திலும் கூறப்பட்டுள்ளன என்பதும், அதிலும் சிறப்பாகச் சுந்தானந்தப் பிரகாசம் எனும் கி.பி. 9 ஆம் நூற்றாண்டு நாட்டிய நூலிலிருந்து தமக்கு வேண்டிய பகுதிகளை இளங்கோ எடுத்தாண்டுள்ளார் என்பதும் அறியத்தக்கதாம். அரங்கேற்றுக் காதையில் அடி 100 முதல் 108 வரையிலுமுள்ள பகுதி சுத்தானந்தப் பிரகாசத்தின் 'அரங்கினுயரமும்' என்று தொடங்கி, 'மாண் விளக்கெடுத்து' என்று முடியும் பகுதியின் அப்பட்டமான தழுவல் ஆகும். (சிலம்பு. உ. வே. சா. பதிப்பு 1960. பக். 115) என்பதும் மேற்காட்டிய கருத்தினை அரண் செய்யும்.

## குறிப்புக்கள்

1. இலக்கியச் சிந்தனைகள், பக். 172. எஸ். வையாபுரிப்பிள்ளை
2. பி. சோ. ச. பகுதி III. பக். 100 - 01. தி. வை. ச. பண்டாரத்தார் 1971.
3. 'மணிமேகலை' 18. உதயகுமாரன் அம்பலம் புக்ககாதை.

3A. ஆராய்ச்சித் தொகுதி. பக் : 65, மு. ராகவையங்கார்.

3B. "வள்ளுவன் சாக்கையெனும் பெயர் மன்னர்க்கு உள்படு கருமத் தலைவர்க்கொன்றும், திவாகரம் 11, 12, இவர்கள் கூத்தாடுவதைக் குறித்து இந்நிகண்டும் பண்டை இலக்கியங்களும் யாதும் கூறாமையினால், மிகப்பிற்பட்ட காலத்தே இத்தொழிலை இவர்கள் மேற்கொண்டனர் எனக் கருதலாம். இலக்கியச் சிந்தனைகள் பக். 158. எஸ். வையாபுரிப்பிள்ளை.

3C. 'அவர் பிராமணப் பெற்றோர்க்கு பேஷ்டாகால ஸம் ஸர்க்கத்திற் பிறந்த சந்ததியார் என்று சொல்லப்படுகின்றனர். ஆராய்ச்சித் தொகுதி. பக். 453. மு. ராகவையங்கார்.

4. 'ஸ்வஸ்தி ஸ்ரீ பாண்டியன் தலைக்கொண்ட கோப்பர கேசரிவர்மற்கு யாண்டு 4-வது (கி.பி. 967 ஆம் ஆண்டு) திருவிடை மருதூரில் ஸ்ரீ மூல ஸ்தானத்தில் பெருமானடிகளுக்கு (மஹாலிங்கஸ்வாமி) ஆரியக் கூத்தாட...... நகரத்தாரும் தேவகன்மிகளும் நாடக சாலையிலிருந்து கீர்த்தி மறைக்காடனான திருவேளை அறைச் சாக்கைக்கு நிவந்தம் செய்து கொடுக்க......தைப்பூசத் திருநாளில் ஒரு கூத்தாடுவதாகவும், தீர்த்தமாடிய பிற்றைநாள் கூத்தாடுவதாகவும், திருவாதிரையின் பிற்றைநாள் துடங்கி மூன்று நாள் கூத்தாடுவதாகவும்...... S.. I. I. Vol. 3. Pt. 3 No. 502, P. 378 & 1895 ; Early Cola Art P. 174 ; பண்டு பரசுராமன் காலத்தில் வேற்று நாட்டிலிருந்து வந்த ஸீதகுல ஜாதன்மார் (பிராமணப் பெண்களில் க்ஷத்திரியருக்குப் பிறந்தவர்) கேரளத்திற்கு வந்தனர். கேரளபாஷா சரித்திரம் - கோவிந்தப்பிள்ளை, 'கூத்தும் கூடியாட்டமும்' by கேரளவர்ம அம்மாமன் தம்புரான் - வெள்ளாரக்கல் நாராயண மேனோன்.

5. மிழாவு (கூத்துக்கும் கூடியாட்டத்திற்கும் பயன்படுத்தும் நம்பியார் வாசிக்கும் வாத்தியம் - தோல்கருவி) - முழவு ஆகும்.

Chakiar kuthu is a kind of Mono - act in which the chakiar expounds puranic stories before his audience. In the course of his narration, The chakiar acts the role of all characters and exercises the unchallenged privilege of indulging in satirical comments on individuals among the audience and also on contemporary affairs in order to drive home the moral of his story/ Kuthu is performed at night in kuthambalams expecially erected for this purpose in the major temples of kerala. A survey of kerala History, P. 432. A. Sreedhara Menon, National Books Stall, Kottayam, 1967.

6. "The institution of the kuthambalam for holding the kuthu performance also had its origen in the 9th Century' - Ibid P. 152 Government and society in the kulasekhara Age.

7. 'குடமாலிடம் வலம் கொக்கரை, யாமெங்கள் கூத்தனுக்கே' - பொன்வண்ணத் தந்தாதி, செய்: 6, சேரமான் பெருமாள் நாயனார்.

8. 'இலக்கியச் சிந்தனைகள் - பக். 172. எஸ். வையாபுரிப்பிள்ளை.

# II. சிலம்பில் யாப்பமைதி

சிலம்பில் யாப்பமைதியைக் காட்டி, அது கடைசிச் சங்கத்து நூல் என்பர். 'சிலப்பதிகாரத்தில் இயற்றமிழின் பாகுபாடான, வெண்பா, அகவற்பா, கலிப்பா என்பவையும், இசைத்தமிழின் பாகுபாடான ஆற்றுவரி, ஊசல்வரி, கந்துகவரி முதலிய பாக்களும், நாடகத்தமிழின் பாகுபாடான உரைப்பாட்டுக்களும் வந்துள்ளன. இவற்றுள் மிகுதியாக உள்ளவை அகவற்பாக்களே. இவை தொல்காப்பியம் செய்யுளியல் 178 ஆம் சூத்திரவுரையில் இளம்பூரணராற் பெரியபாட்டுக்கு உதாரணமாகக் காட்டப் பெற்றுள்ளன.[1] தொல்காப்பியம் செய்யுளியல், 173 ஆம் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர், "பாட்டிடை வைத்த குறிப்பினானுமென்பது ஒரு பாட்டினை இடையிடைக் கொண்டு நிற்கும் கருத்தினான் வருவனவும் எ - று; அவை தகடூர் யாத்திரையும் சிலப்பதிகாரமும் போல்வன என்றும், தொன்மை தாமே, உரையொடு புணர்ந்த பழமைமேற்றே (தொல். செய், சூ 237) என்பதனுரையில், அவை பெருந்தேவனார் செய்த பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன; சிலப்பதிகாரமும் அதன்பாற்படும்' என்றும் எழுதியிருத்தல் இங்கே அறியத்தக்கது".[2] மேலும் சங்ககாலத்தில் அகவற்பாக்களே மிகுதி-(பத்துப்பாட்டு, எட்டுத்தொகை) என்பதனால், அகவற்பாக்கள் மிகுதியாயிருக்கின்ற சிலப்பதிகாரமும் சங்ககாலத்தில் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பது அன்னார்தம் முடிவு.

### பாவ்கைகள்

ஆயின் சிலப்பதிகாரத்தின் யாப்பமைதி தொல்காப்பியர் கூறும் யாப்பமைதிகளினின்றும் பெரிதும் மாறுபட்டதாகும்.

'தொல்காப்பியம் கூறாத' ஆயின் வழிவகுத்த பல வேறுமையும் வளர்ச்சியும் சங்க இலக்கியத்தில் உள. அவ்வளர்ச்சியின் பெருநிலையையே சிலம்பில் காண்கிறோம்.

சிலம்பில் வரும் உரைப்பாட்டு, கட்டுரை, நூற்கட்டுரை இவற்றில் ஆசிரியப்பாவின் சாயல் காணப்படுகிறது. வாழ்த்தாக அமையும் மங்கல வாழ்த்துப்பாடலும் வாழ்த்துக்காதையும் சிந்தியல் வெண்பா, உரைப்பா மயங்கிசைக் கொச்சகம் என்பவற்றின் தொகுப்பு.

வேட்டுவ வரியில் தாழிசை பல தொடர்வதால், அஃது பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா எனப்படுகிறது. ஊர்சூழவரி, தனக்கே உரிய

புதுமைகளுடன் இலக்கணக் கட்டுப்பாடுகட்கு வேறுபடுகின்றது. இவ்வரியை அயன்மயங்கிசைக் கொச்சகக்கலி என்கிறார் அடியார்க்கு நல்லார்.

துன்பமாலை கொச்சகக்கலி ஆயின், வஞ்சினமாலை கலிவெண்பாட்டு யாப்பில் அமைந்தது. வழக்குரை காதையோ இலக்கண வரையறையிலடங்காத இயல்பினது. பலபா, பாவகை, பாவுறுப்புக்களின் வண்ணக் கலவையாக ஒளிருகிறது. இது ஊழ்க்கலிச் சாயல் பெற்றிருப்பது வெளிப்படை.

இவ்வாறு முற்றிலும் புதிய பாவகைகளைக் கையாண்டிருக்கின்ற காரணத்தாலேயே சிலப்பதிகாரம் மிகப் பிற்பட்ட காலத்தில் எழுதப்பட்டது என்பது போதரும்.

சங்ககாலச் செய்யுட்கள் பெரும்பாலும் அகவற்பாக்களாகவே காணப்படுகின்றன என்றாலும், அக்கால நூற்கள் எனப்படும் கலித்தொகை, பரிபாடல் போன்ற தொகை நூல்களில் கலிப்பா, பரிபாடல் போன்ற பாவகைகள் பயன்படுத்தப் பட்டிருப்பதால், அவை சங்கம் மருவிய காலத்தவை என்ற கூற்றும் இங்கு நோக்கத்தக்கது.[4] எனவே இந்நூற்கள் பத்துப்பாட்டு முதலிய நூற்கள் தோன்றிய காலத்தினும் சில நூற்றாண்டுகளேனும் பின்னிட்டவையாக இருத்தல் வேண்டும் என்பது பெறப்படுகின்றது.

### நாயன்மார் பாக்கள்

இதே காலத்தில் சைவமதக் கருத்துக்களைப் பரப்ப வந்த திருநாவுக்கரசர், திருஞான சம்பந்த மூர்த்திகள் போன்ற நாயன்மார் ஆசிரியப்பாவினின்றும் நழுவி ஆசிரியவிருத்தம், வெண்கலிப்பா போன்ற பா வகைகளை மேற்கொண்டனர். பக்தி இலக்கியங்களுக்கு இப்பாவகைகள் மிகவும் உகந்தவையாயின. அதனாற்றான் மூவர் தேவார காலத்தில் இப் பாவகைகளில் அமைந்த பாடல்களைப் பெரிதும் பார்க்கிறோம்.

### ஆழ்வார்கள்

அதனையடுத்துக் குலசேகர ஆழ்வார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகியோர் காலத்தில் (ஒன்பதாம் நூற்றாண்டு) ஆசிரியவிருத்தத்தோடு கலிவெண்பாவினையும் (ஆதியுலா) பாக்களில் பயன்படுத்தியிருப்பதனைக் காணலாம். ஏறத்தாழ இதே காலமான ஆழ்வார்கள் காலத்திலும் இதே பா வகைகளைப் பயன்படுத்தியிருப்பதைக் காணலாம்.

### செய்யுட் பா வகை

திருமங்கையாழ்வாரின் இயற்பா, பெரியதிருமடல், சிறிய திருமடல் இவை கலிவெண்பாட்டில் அமைந்திருப்பது அறியத்தக்கது. ஆனால் இதே காலத்தில் வடநாட்டுக் கதைகளைத் தமிழில் தருவதன் மூலம் மதக் கொள்கையைப் பரப்ப முயன்ற சமணப்புலவோர் ஆசிரியப்பாவினையும்

ஆசிரிய விருத்தத்தினையும் பயன்படுத்தினார். பெருங்கதை, சூளாமணி, சிந்தாமணி ஆகிய நூல்கள் ஆசிரியப்பாவினாலும் ஆசிரிய விருத்தப்பாவினாலும் ஆன நூற்கள். இவ்வாசிரியப்பா, வரலாற்றைக் கூறுவதற்கு மிகவும் வசதியான பாவகையாதலால் எட்டாம் நூற்றாண்டில் பாண்டிய மன்னர்கள் கல்வெட்டிலும், செப்பேடுகளிலும் தம் வரலாற்றை எழுத இவ்வாசிரியப்பா வகையினையே செய்யுளுக்குக் கொண்டனர். பின்னர் இராசராசன் காலத்தில் மெய்க்கீர்த்தி எழுதவும் கல்வெட்டில் செய்திகள் குறிக்கவும் இதே ஆசிரியப்பாவையே பயன்படுத்தினர்.

### வேறுபாட்டு நிலை

இளங்கோவடிகளுக்கும் மதுரைச் சாத்தனாருக்கும் தங்கள் கதைகளைக் குறிக்கவும், விருத்தப்பாக்களைவிட ஆசிரியப்பா ஏற்றதாகப்பட்டதனால் இருவரும் சிலம்பினையும் மணிமேகலையினையும் இப்பாவிலேயே எழுதினர்.

சிலப்பதிகாரம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் உண்மையில் எழுதப்பட்டிருப்பின், அதே காலத்தில் எழுதப்பட்ட மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை போன்ற நூல்களைப் போல் ஆசிரியப்பா அல்லது வஞ்சிப்பா அல்லது வஞ்சியடிகள் விரவப்பெற்ற ஆசிரியப்பா எனும் அமைப்பில்தான் அது அமைந்திருக்கும்.

இவ்வாறு பதினோரராம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுதப்பட்ட காரணத்தால்தான் முன்னர்க் கூறப்பட்ட பல்வேறு பாக்களின் கலவை சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. சிலப்பதிகாரத்திற்கு முன்தோன்றிய சிந்தாமணி, சூளாமணி, பெருங்கதை ஆகிய நூல்களில் இது போன்ற பல்வேறு பாவகைகள் காணப்படாமையும் இங்குக் கவனித்தற்குரியது.

### பிற்பட்டகால அடிச்சுவடிகள்

இனி, சிலப்பதிகாரத்தில், அதற்குமுன் தோன்றிய நூல்களின் அடிகளோ அல்லது அந்நூல்களின் செய்யுளமைப்பைப் போன்ற அமைப்போ இருப்பதைக் காணலாம்.

மூன்றாவதான அரங்கேற்றுக் காதையில் 95 முதல் 107 வரையுள்ள அடிகள் சுத்தானந்தப் பிரகாசம் எனும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது என்பது வெளிப்படை (சிலம்பு பக். 114 உ. வே. சா. பதிப்பு 1960).

பன்னிரண்டாம் காதையான 'வேட்டுவவரியில்' செய்யுட்கள் 5, 6, 12, 13, 14 போன்றவற்றின் அமைப்பு மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாசகத்தில் பன்னிரண்டாவதான திருச்சாழலை (செய்யுட்கள் 3, 6, 7, 9, 10, 14, 16, 19) போன்றவற்றின் அமைப்பை ஒத்திருக்கின்றது என்பது உணரத்தக்கது. உதாரணத்திற்கு ஒரு செய்யுளைத் தருதும். சிலம்பு வேட்டுவவரி. வெட்சிப்புறநடை செய் : 14)

''கள்விலையாட்டி மறுப்பப் பொறா மறவன் வைவிலேந்திப்
புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் போகும் போலும்
புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் போகுங்காலை
கொள்ளுங் கொடி யெடுத்துக் கொற்றவையுங் கொடிமர
முன் செல்லும் போலும்''

திருவாசகம் : திருச்சாழல் செய்யுள் : 3

''கோயில் சுடுகாடு கொல்புலித் தோனல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடி
தாயுமிலி தந்தையிலி தான்றனியன் ஆமிடினும்
காயினுலகனைத் துங்கற்பொடிகாண் சாழலோ''

திருவாசகத்திற்குக் காலத்தால் முந்திய (7 ஆம் நூற்றாண்டு) திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம் 'திருவின்னம்பர்' பதிகத்தையும் காண்க.

'எண்டிசைக்கும் புகழின்னம்பர்மேவிய
வண்டிசைக்குஞ் சடையீரே
வண்டிசைக்குஞ் சடையீருமை வாழ்த்துவார்
தொண்டிசைக்குந் தொழிலோரே''

பதினெண்கீழ்கணக்கு நூற்களான நாலடியார், நான்மணிக்கடிகை, திருக்குறள், ஆசாரக்கோவை போன்றவற்றின் கருத்துக்களையும் வரிகளையும் சிலப்பதிகாரத்தில் காணலாம்.[4A]

'தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா'' (நாலடி. 14)
''தாளார்ந்த நடையிற் காலூன்றி (சிலம்பு 15 : 44)

1. ''அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்னும்
பல்லவையோர் சொல்லும் பழுதன்றே''

(சிலம்பு : 20 : வெண்பா)

'தெய்வந்தொழா அள்கொழு நற்றொழு தெழுவாள்''

(திருக்குறள் 55)

'தெய்வந் தொழா அள் கொழு நற்றொழுதெழுவாளை''

(சிலம்பு : 23 : வெண்பா)

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிபட்டார்,
மூத்தாரிளையார் பசுப்பெண்டிர்''

(ஆசாரக் கோவை. 65)

'பார்ப்பா ரறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டு

(சிலம்பு : 21 : 53 - 4)

'பிறர்கின்னா முற்பகற் செய்மிற் றமக்கின்னா,
பிற்பகற் றாமே வரும்''

(திருக்குறள் 319)

முற்பகற் செய்மிற் பிற்பகல் விளையும் (கொன்றை வேந்தன்)
முற்பகற் செய்வினை பிற்பகலுறு நரின்''

(பெருங் : 1 : 56 : 258 : பழமொழி : 46)

முற்பகற் செய்தான்பிறன் தன்கேடு
பிற்பகற் காண்குறூஉம் பெற்றிய காணற்பகலே'

(சிலம்பு : 21, 3 - 4)

உலகியலின்கண் அன்பு அன்பினையே ஈனும் என்பது வழக்கு. நம்மிடம் அன்பு செய்வாரிடம் நாமும் அன்பு சொய்வோமென்பது இயற்கை. அதனைக் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்த ஆண்டாள் தம் பாடலில் (நாச்சியார் திருமொழி - பதினோராம் - திருமொழி - பத்தாம் செய்யுளில்) பாடியுள்ளார்.

''செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த
மெய்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டிருப்பர்
தம்மை யுகப்பாரைத் தாமுகப்ப ரென்னுஞ் சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பாராரினியே''

இதே கருத்தைச் சற்று மாற்றி இளங்கோவடிகள் சிலம்பில் அமைத்திருத்தலைக் காண்க : சிலம்பு : கானல்வரி. 32 ஆம் செய்யுள்:

''தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்றேரும்
எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க
அம்மெனிணரவடும் புகா ளன்னங்காள்
நம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்''

இக்கருத்து குறுந்தொகை 200 ஆம் பாடலில் 4 ஆம் அடியில் வரும் 'மறந்தோர் மன்ற மறவார் நாமே'' என்னும் வரியின் பிரதிபலிப்பு எனினும், செய்யுளமைப்பு ஆண்டாள் பாடலை அப்படியே தழுவியிருப்பது அறியத்தக்கதாகும்.

இதே போன்று சிலம்பில் 17 ஆவதான ஆய்ச்சியர் குரவையில் வரும்,

'சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால் சீர் கேளாத செவியென்ன செவியே''

(செய் - 36 : வரி : 3 - 4)

''கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார் தம் கண்ணென்ன கண்ணே''

(செய் - 37 : வரி : 3 - 4)

நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாராயணா வென்னா நாவென்ன நாவே

(செய் : 38 : வரி : 3 - 4)

என்ற மூன்று செய்யுட்களின் அமைப்பும் ஏழாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்த ஞானசம்பந்த சுவாமிகளின் தேவாரத்தில் திருவாமாத்தூர்ப் பதிகத்தின் அமைப்பே என்பதைப் பின்வரும் பகுதியால் உணரலாம்[4B]

'ஆணாகங் காதல் செய்யா மாத்தூரம்மானைக்
காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே'

(செய்யுள் : 4 : அடி : 8 - 4)

'ஆறாத தீயாடி யாமாத் தூரம்மானைக்
கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே''

(செய் : 7 : அடி : 3 - 4)

'ஆளானார் சென்றேத்து மாமாத்தூர் ரம்மானைக்
கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே''

(செய் : 8 : வரி : 3 - 4)

'அச்சந்தன் மாதேவிக் கீந்தான் றனாமாத்தூர்
நிச்சனினல் யாதார் நெஞ்சமு நெஞ்சமே''

(செய் : 10 : வரி : 3 - 4)

மேற்காட்டிய எடுத்துக் காட்டுகளினின்றும் இளங்கோவடிகள் தேவாரம், திருவாசகம், திவ்யபிரபந்தம், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், நாட்டிய சாத்திரம், சுத்தானந்தப் பிரகாசம் போன்ற நூல்களைக் கற்று, அவற்றின் கருத்துக்களையும் செய்யுளமைப்பினையும் வரிகளையும் சிலம்பில் பயன்படுத்தியுள்ளமை தெள்ளத்தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

சிலப்பதிகாரத்தைக் கற்று மற்றவர்கள் இவ்வாறு செய்யலாகாதோ என்னும் கேள்வி எழலாம். ஆயின் சமணர் எண்ணாயிரவரைக் கழுவிலேற்றிய ஞானசம்பந்தர் சமணநூலான சிலப்பதிகாரத்தைப் படித்தாரென்று கொள்வதும், நாட்டியம், நாடகம், இசை, அரங்கம் இவைபற்றிக் கூறவந்த சுத்தானந்தப் பிரகாசம் சிலம்பின் ஒரு பகுதியை ஆதாரமாகக் கொண்டு மற்ற பகுதிகளை எழுதி முடித்திருக்கின்றது என்று கொள்வதும் இயற்கைக்கு மாறானவையாகும். எனவே அக் கொள்கை பொருந்தாது.

## இளங்கோ காலச் சேரநாடு

இளங்கோவடிகள் பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியிலுமாக வாழ்ந்தவர். அவர் காலத்தில் சேரநாட்டின் ஆட்சிமொழி தமிழாகவே இருந்தது. ஆயின் வடமொழியின் ஆதிக்கம் காரணமாகப் பேச்சு மொழி சிதைந்து தமிழ், இலக்கணமரபுகளை விட்டுக் கொடுந்தமிழாக மாறிவிட்டிருந்தது.[5] ஆயினும் இலக்கியமொழி செந்தமிழ் மொழியினின்றும் பெரிதும் மாறுதலடையாமல் இருந்தது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் (1196) மலையாள எழுத்துக்கள் உருப்பெற்றன எனினும் மொழி தமிழாகவே இருந்தது; அது கொடுந்தமிழென அழைக்கப்பட்டது.

'மன்னா மின்னேர் மெல்லிடையாளை
வழக்கி னென்றிராமன் வரும்'
முன்னே நல்கீடென்று வீபீழணன்
முன்னில் நின்றிரந் தனவே
நின்னோடாரே நல்லது கெட்டது
நீதி கைந்த பண்டிதனா?
யென்னோ டுண்டோ பேசும தென்றே
எழுநின் றிராவணன் நடந்தான்

(இராமசரிதம், ஐந்தாம் படலம் : பாட்டு 55)

'நடந்திட மறைந்தவ னுணர்ந்திரவில் நாசம்
துடங்கினது கண்டரிய துன்ப முள்ளிலேறி
அடங்கியிங்கு சென்றரசனைத் தொழுது சொல்லத்
துடங்கினன்வி பீழணனு ணர்ந்த துயரெல்லாம்''

(இராம சரிதம், ஆறாம் படலம்: பாட்டு 56)

இவ்விரு செய்யுட்களும் மலையாள எழுத்துக்களின் அன்றைய மலையாள மொழியில் (கொடுந்தமிழில்) எழுதப்பெற்றவை.

## மொழிநடையில் மாறுதல்

மேலே காட்டிய செய்யுட்களில்வரும் 'திகைந்த' என்னும் சொல் தமிழ் வழக்கிலில்லாது. ஆனால் இன்று, 'திகஞ்ஞு' என்ற சொல்லாக மலையாள மொழியில் காணப்படுவது. முழுமையான அறிவார்ந்த என்னும் பொருளினை உடையது. அதுபோல 'தொடங்கினன்' என்ற தமிழ்ச் சொல்லே 'துடங்கினேன்' என்ற கொடுந்தமிழில் வழங்கியது. இவ்வழக்கம் பத்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தொடங்கியது எனலாம். அதனால்தான்

இளங்கோவடிகள் தாம் வாழ்ந்த நாடு 'கொடுந்தமிழ் நாடு' என்று நூற்கட்டுரையில் கூறினார்.

இளங்கோவடிகள் வாழ்ந்த காலத்தில் மலையாள மொழி தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள மொழியாக மாறிக் கொண்டிந்தது. மக்கள் சிறுகச் சிறுக மாறிக்கொண்டிருந்த மொழியினைப் பேசினர். ஆயின் அரசரும், அரசரோடு தொடர்புடையவர்களும் தமிழையே பயன்படுத்தினர். அதற்குக் காரணம் சோழ பாண்டிய அரசுகளோடுள்ள அவர்களுடைய அரசியல் தொடர்பும் மணத்தொடர்புகளுமேயாகும்.

சாதாரணமக்கள் மணிப்பிரவாள நடையைப் பயன்படுத்தியதனால் அவர்கட்கு விளங்கும் மணிப்பிரவாள நடையில் நூலெழுதப் புலவர்கள் முயற்சித்தனர்.

மொழிப் பக்குவம் அடைந்து நூலெழுதும் ஆற்றலும் புலவர்களிடம் அமையச் சிலகாலம் பிடித்தது. அதனாற்றான் உண்ணு நீலி சந்தேசம் போன்ற மணிப்பிரவாள நூற்கள் பன்னிரண்டு பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றலாயின. செந்தமிழில் நூலெழுதினால் அது மக்களுக்கு விளங்காது என்ற எண்ணத்தில் புலவர் அம்முயற்சியினை விட்டு விட்டனர். ஆயினும் அரசகுடியில் பிறந்த இளங்கோவடிகள் 'செந்தமிழில்' சிலம்பினை யாத்தார்.

சாதாரண மக்களின் பேச்சுமொழி தமிழ் கலந்த மலையாளமாக இருந்த காரணத்தால் அம்மொழியின் கொச்சைச் சொற்கள் அவருடைய இலக்கியத்தைத் தாக்கவில்லை. ஆயின், இதே காலத்தில் - அல்லது இதற்குச் சற்றுமுன்னர் - தமிழகத்தில் எழுந்த இலக்கியங்களில், தமிழ், மக்கள் மன்னர் ஆகியோரது பேச்சு மொழியாக இருந்த காரணத்தால், அப்பேச்சு மொழியில் உள்ள கொச்சைச் சொற்கள் இலக்கியத்திலும் புகுந்தன.[7]

பல நூற்றாண்டுகட்கு ஒரு முறை பிறக்கின்ற இறையருள் பெற்ற கவிஞனாக இளங்கோ அடிகள் இருந்த காரணத்தாலும், அவருடைய இலக்கியப்படைப்பு சங்க இலக்கியங்களில் இலக்கிய நடையில் அமைந்தது. ஆயின் சங்க இலக்கியங்களில் பயிலாத கருத்துக்கள், சொற்கள், பாவகை போன்றவை சிலம்பில் மலிந்து காணப்படுகின்றன என்பதையும் மறத்தல் கூடாது. அவைதாம் அந்நூல் மிகப்பிற்காலத்தில் எழுந்தது என்பதற்கான சான்றுகள்.

சிலப்பதிகாரம் பதினொன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கூறுகின்றபொழுது, அக்காவியத்தில், கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டிற்குரிய செய்யுள் நடையும் காவிய அழகுமா காணப்படுகின்றன? - என்ற கேள்வி இயற்கையாகவே எழக்கூடும். இலக்கியச் சான்றுகளும் வரலாற்றுச்சான்றுகளும் என்னதான் அந்நூல் பிற்காலத்தைச் சார்ந்தது என்றாலும் அதன் இலக்கிய நடையும் செய்யுள் அமைப்பும் மிக உயர்ந்த நிலையினை எடுத்துக்காட்டுகின்றன என்பது மறுக்க முடியாத உண்மை.

ஆனால் இவ்வொன்றினால் மட்டும் அந்நூல் சங்ககாலம், அல்லது சங்கம் மருவிய காலத்தைச் சார்ந்ததாகாது. ஏனெனில், உயர்ந்த நடையினைக் கையாளுதல் என்பது காலப்பழமையின் அடிப்படையில் கவிஞர்கட்கு ஏற்படக்கூடிய திறமையாகும்.

எனவே மிகப் பிற்காலத்தில் வாழ்ந்தவர்களாலும் சங்ககாலச் செய்யுள் நடையில் இலக்கியம் புனைய முடியும் என்பதற்கு எடுத்துக் காட்டுக்கள் பல காட்டமுடியும்.[8] அதேபோன்று பண்டைக் காலத்தில் எழுந்த எத்தனையோ இலக்கியங்கள் இறந்துபட்டதற்கு காரணம் அவை இலக்கியம் என்று சொல்லத்தக்க நிலையில் இருக்கவில்லை என்பதும்தான் என்ற உண்மையினை நாம் இங்கு மறத்தலும் கூடாது.

இனி, இளங்கோவடிகள் காலத்திற்குப்பிறகு சேரநாட்டில் பேச்சு மொழி மலையாளமாக மாறி, எழுதுவதற்கும் மலையாள எழுத்துக்களைப் பயன்படுத்திய காலத்தில் தோன்றிய மலையாள எழுத்தில் எழுதப்பட்ட தமிழ் இலக்கியச் செய்யுட்கள் சிலவற்றைக் காண்போம்.

**''...............மிகவொன்று நினவான்**
**ஆதி தேவனிலமிழ்ந்த மனகாம்புடையசீ**
**ராமன் பினொடியம்பின தமிழ்கவிவல்லோர்**
**போதில் மாதினிட மாவருடல் வீழ்வளவபின்**
**போகி போக சயனன் சரண தாரடவரே''**

(இராமசரிதம் : கி.பி 1196, நூற்பயன்)

''ஆர்கலிமீது தாவி முதிர்ந்துலங்க புகுந்து செந்தாரார் மகளெந்நும் மெந்நடயாளெ யம்பொடு கண்டு மீள்வன்வேக மொடெந்த துள்ளில் நிநந்து வெந்நி கலர்ந்நநீடார் மேனி கிளர்ந்த வானரவீரன்மாருதி தானுழற்றான் ஆகுல மிந்நிநிந்து குதிச்செழும் பொழுதின் மலய்க்கு(ண்) டாய்வருமோ குலுக்கவு மெந்நதோர்த் தறிவானுலச்சான் மேக குலங்ஙள் செந்நமருள் கொடும் சிகரங்ஙளோடும் மீதிலரும் மகேந்தரமென்னும் மகாமல தன்னெ முன்னே''

கி.பி. 135 ஐ ஒட்டியெழுந்த கண்ணச்ச இராமாயணம், சுந்தரகாண்டம் முதற் செய்யுள், இதனைத் தமிழ் மரபுப்படி சீர்பிரித்து எழுதினால்,

**''ஆர்கலிமீது தாவி முதிர்ந்து**
**லங்கை புகுந்து செந்தா**
**ரார் மக ளென்னும் மென்னடையாளை**
**யன் பொடுகண்டு மீளவன**
**வேகமொடென்ன துள்ளில்நினைந்து**
**வென்றி கலந்த நீடார்**
**மேனி கிளர்ந்த வானரவீரன்**

மாருதி தானு முற்றான்
ஆகுல மின்றி நின்று குதிச்செ
ழும் பொழுதின் மலைக்குன்
டாய்வருமோ குலுக்கமுமென்ற
தோர்த்தறி வானுலைத்தான்
மேககுலுங்கள் சென்ற மருங்கொ
டுஞ்சிகரங்களோடும்
மீதிலகும்ம கேந்திரமென்னும்
மாமலைதன்னை முன்னே''

என்றிருக்கும் ௨

''அருள் தரக் கவிதமாதும்
அன்கரத் தோனு மெந்தன்
குருவர ரெல்லார் பாதம்
கொண்டனன் தலமீ தாகை
உரமுடனு சந்தராம
நாமத்துக் குதகி செய்கை
கருதுக் கறக்கண்டேசர்
கடலதில் விழம தாலால்''

''ஆலவிழ முண்டானு மம்மயுமைமாதும்
அருள் தருக யைங்கரனு மறுமுகவனாரும்
கோல முடனிந்திரரு மின்மயோர் முனிவரரும்
கொண்டல் பொருவானி லெழு மிந்திர சந்திரரும்
பாலமி தனைவெல்லும் நுதலித்திருமாலும்
வன்னக் கொடிமிடையுடையாள் வல்லிக்கவிமாதும்
சீல முடனிவர்களனை வோருமற்றுள்ளோரும்
சிந்தை தனி லென்குருவு மங்களிவுள்ளோரும்''

-14 ஆம் நூற்றாண்டு, இராம காதைப்பாட்டு; பாலகாண்டம் விருத்தம் 1 - 2.

மேற்கூறிய இராமசரிதம், கண்ணச்ச ராமாயணம் இராமகதைப் பாட்டு ஆகிய நூற்கள் மலையாள எழுத்தில் எழுதப்பட்டவை; செய்யுட்கள் தமிழிலக்கணத்திற்குப் பெரிதும் ஒட்டி வருபவை, எனவே கி.பி. 13, 14, 15, ஆம் நூற்றாண்டுகளிலெழுந்த மலையாள மொழியில் எழுதப்பட்ட செய்யுட்களே ஏழு, எட்டு, நூற்றாண்டு விருத்தப்பாக்களோடு ஒப்பிட கூடியதாயிருக்கின்றபோது, பதினொன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில்

மலையாள எழுத்துக்கள் உருப்பெறாத, இலக்கியமொழி உருவம் பெறாத காலத்தில் இளங்கோவடிகள் சங்ககால நூற்களையும் வெல்லக் கூடிய முறையில் செய்யுளியற்றியதில் வியத்தற் கொன்றுமில்லை. அவர் போன்ற இறையருள் பெற்ற கவிஞர் பெருமக்களால் ஆகக் கூடியதே அச்செயல்.

எனவே இதுகாறும் கூறியவற்றால் சிலப்பதிகார யாப்பமைதி சங்ககாலத்தது அன்று என்பதும், கலிப்பாவும், தாழிசையும், வஞ்சி நெடும்பாட்டும், ஆசிரிய விருத்தங்களும் ஆசிரியப்பாவும் பரவலாகப் பயன்படுத்தப்பட்ட ஏழு, எட்டு, ஒன்பது, பத்து நூற்றாண்டுகளுக்குப் பின் அப்பாவகைகள் எல்லாவற்றையும் பயன்படுத்திய பதினோராம் நூற்றாண்டினதே என்பதும், அவ்வாறு ஓர் இலக்கியப்படைப்பில் இவ்வனைத்தையும் பயன்படுத்திய பெருமை சேரமன்னனான இளங்கோவிற்கே உரியது என்பதும், சமயப்பொறை மிகுதியாக உடைய முதலாம் பாற்கரரவிக்கு மகனாகப் பிறந்த அவர், சைவ, வைணவ, சமண சாக்கிய நூல்களனைத்தையும் கற்று அவ்விலக்கியப் பகுதிகளையும், அமைப்பினையும் தம் சிலப்பதிகாரத்திலும் பயன்படுத்தினார் என்பதும், பதினோராம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாக யிருந்தும் சிலப்பதிகாரம் சங்க இலக்கிய மொழி நடையைக் கொண்டிருப்பதற்குக் காரணம், இளங்கோ வாழ்ந்த காலத்தின் சூழ்நிலையும், அவரது வியத்தற்குரிய ஆளுமையும் ஆகும் என்பதும் பெறப்படும். என்றாலும் சிலப்பதிகாரத்தின் இலக்கிய நடை மணிமேகலையின் இலக்கிய நடையினும் மாற்றுக் குறைந்ததே ஆகும்.

புதிய நடைமுறை

சிலம்பின் நடையில் முதலாம் இராஜராஜ சோழனின் மெய்க்கீர்த்தியின் சாயல் தெரிகிறது என்று சொன்னால் ஆச்சரியமாயிருக்கும். ஆனால் அது உண்மை. எடுத்துக்காட்டாக இரண்டாவது காதையான மனையறம் படுத்தகாதையில் கோவலன் கூற்றாக வரும்,

> ''மாசறு பொன்னே வலம்புரி முத்தே
> காசறு விரையே கரும்பே தேனே''

என்ற பகுதியில் இளங்கோவடிகள் 'மாசுஅறு' - 'காசுஅறு' என்று பயன்படுத்தும் வழக்கம் முதலாம் இராசராசன் காலத்தது ஆகும். அவன்தான் தன் மெய்க்கீர்த்தியில் 'காந்தளூர்ச் சாலை கலம் அறுத்து'' என்று பயன்படுத்துகிறான். கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பரடிகள் கூட மாசு + இல் என்றுதான் பயன்படுத்தியுள்ளார் (மாசில் வீணையும், மாலைமதியமும்). கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கம்பரும் காச + இல் (காசில் கொற்றத்து இராமன் கதை அரோ) என்றுதான் பயன்படுத்துவார். இங்கு 'அறு' எனும் அமங்கலச் சொல்(?)லை இளங்கோ பயன்படுத்தியதிலிருந்து இவர் இது தமிழ் வழக்காறின்றும் மாறிப் பிற்கால வழக்காற்றினைப் பயன்படுத்தியுள்ளார் என்பது தெரியவருகிறது.

இதற்கேற்பச் சங்க கால வழக்காற்றில் இல்லாத சேனாமுகம், குஞ்சரம், வக்காணம், பதிகம் ஆகிய சொற்களைப் பயன்படுத்தியிருப்பதும் (27 : 255 ; 3 : 148) இவர் மூன்றாம் நந்திவர்ம பல்லவன், சிந்தாமணியாசிரியர், முதலாம் பராந்தக சோழன் ஆகியோர்க்கும் பின்னால் வாழ்ந்தவர் என்பதை உறுதிப்படுத்துகின்றது (சயாம் தகூபா கல்வெட்டு; சீவக சிந்தாமணி : நாமகள் இலம்பகம், செய் 396; உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலக் கல்வெட்டு)

பதிற்றுப்பத்துப் பாட்டுகளில் ''களிற்றொழுகை'' என்று பயன்படுத்தியிருக்க, சிலப்பதிகாரத்தில் ''குஞ்சரவொழுகை'' என்று எவ்வாறு வந்தது? (களிறு, தமிழ்ச்சொல், குஞ்சும் - வடமொழி).

பதிற்றுப்பத்துப் பதிகங்களில் குஞ்சரவொழுகை என்று காணப்படுகின்றது. என்றாலும் இப்பதிகங்கள் பெருந்தேவனார் காலத்தவை (கி.பி. 9ஆம் நூற்றாண்டு) என்பது அறிஞர்களின் கொள்கை.

ஆகவே சிலம்பும், பதிற்றுப் பத்து இப்பதிகங்கள் எழுதப்பட்ட பின்னர் இயற்றப்பட்டது என்பதற்கு இன்னும் சான்று வேறு வேண்டுமா?

## குறிப்புக்கள்

1. 'சிலப்பதிகாரம் பக். viii. மூன்றாம் பதிப்பின் முகவுரை, டாக்டர். உ. வே. சாமிநாதையர், தியாகராச விலாசம் வெளியீடு, ஏழாம் பதிப்பு. 1960.

2. Ibid. பக். viii.

3. 'சிலம்பின் யாப்பமைதி' அன்னி மிருதுல குமாரி தாமசு, - நான்காவது கருத்தரங்க மலர், அகில இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், 1972, பக். 506 - 09.

4. 'பரிபாடல்' பதினோராம் பாடலில் குறிப்பிடும் சந்திரகிரகணம் கி.பி. 634 ஜூன் திங்கள் 17 -ம் தேதிநடைபெற்றது என்பதால் அந்நூல் கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்க வேண்டும். Some Contribution's of South India to Indian Culture P.reface P. XIX by Dr. Krishnaswamy Iyengar, University of Calcutta, Ed. 1942.

4A. சிலப்பதிகார ஆராய்ச்சி (முன்னுரை பக். V. எஸ். வையாபுரிப்பிள்ளை) வெ. சு. சுப்பிரமணிய ஆச்சாரியார்; வெளியீடு: நா. நாதமுனி முதலியார். சென்னை, 1947.

'இராஜ ரத்நாகரி' என்ற நூல் கூறுகிறது என்றும் இவ்வாச்சாரியார் மாணிக்கவாசகர் ஆகலாம் என்றும் கூறுவர். (தமிழ்ச் சுடர்மணிகள். P. 121. SVP. 1959. பாரி நிலையம்) இதனாலும் சிலம்பு சம்பந்தருக்கும் ஆண்டாள் காலத்துக்கும் பிற்பட்டது என அறியலாம்.

4B. Ibid.

5. ''குமரி வேங்கடங் குணகுட கடலா
மண்டிணி மருங்கிற் றண்டமிழ் வரைப்பிற்

செந்தமிழ் கொடுந்தமி ழென்றிரு பகுதியின்
ஐந்திணை மருங்கின்

- சிலம்பு. நூற்கட்டுரை: வரி 1 - 4.

இஃது ஓர்சைச் சீராகக் காணப்படுகிறது. பாடம் பிழையாக இருக்கலாம் - சேரநாடும் செந்தமிழும் - பக். 71. செ. சதாசிவம். பாரி நிலையம். சென்னை - 1. நான்காம் பதிப்பு. 1964.

6. சேரமன்னன் கோதை இரவி (கி.பி. 917 - 944)யின் 15 ஆம் ஆட்சி ஆண்டில் வெட்டிய சோக்கூர் கோயில் கல்வெட்டில்தான் 'தொடையும்' (மாலை) என்ற சொல் 'துடையும்' என்று வருகிறது - அடி. 45. S. I. I. Vol. vii, PP. 72 - 73. Evolution of Malayalam - A. C. Sekkar, P. 174 Poona 1953.

7. 'கண்ணாலஞ் செய்யக்கறியுங் கலத்தரிசியுமாக்கி வைத்தேன்' - பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து, மூன்றாம் திருமொழி, செய். 9. அடி. 5 - 6. 'கண்ணாலங் கோடித்து கன்னிதன்னைக் கைப்பிடிப்பான் - நாச்சியார் திருமொழி 11 ஆம் திருமொழி, செய். 9. அடி. 1; 'மாய மனிசரை என் சொல்வல்லே னென்வாய் கொண்டே'' நான்காவதாயிரம், திருவாய்மொழி, மூன்றாம் பத்து, ஒன்பதாம் திருமொழி, செய். 8. 4, இங்கு கல்யாணம் 'கண்ணால மெனவும்', 'மனிதரை' என்பது 'மனிசரை' எனவும் வந்தன காண்க.

8. கி.பி. 1896 -ல் பெ. சுந்தரம் பிள்ளை எழுதிய மனோன்மணீயம். இரண்டாம் அங்கம். முதற்களம், குடிலன் உரை அடி. 75 - 150; கி.பி. 1907 இல் மறைமலை அடிகள் எழுதிய சாகுந்தலம் ஏழாம் பகுப்பு. பக். 134. துஷ்யந்தன் பாடல் போன்றவை.

9. 'சேரநாடும் செந்தமிழும்' பக். 70, 66, 67, வித்துவான், செ. சதாசிவம். பாரி நிலையம், சென்னை - 1. பக். 4. 1994.

# 12. சில பழக்க வழக்கங்கள்

சிலப்பதிகாரம் அது எழுதப்பட்ட காலத்தில் உள்ள மக்களது வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டுகிறது. எந்த இலக்கியமும் அது படைக்கப்பட்ட காலத்தைப் பிரதிபலிக்கும் என்பது உண்மையாகும்.

சிலப்பதிகாரத்தில் சங்ககால மன்னரது பெயர்களும் அக்கால நிகழ்ச்சிகளின் பலவும் கூறப்பட்டுள்ளன. ஆயினும் அது சங்ககால நூல் என்றோ, சங்கம் மருவிய காலத்தெழுந்த இலக்கியமென்றோ கொள்வதற்கில்லை. ஏனெனில் சங்கம்மருவிய காலத்திற்கும் சில நூற்றாண்டுகள் இப்பாற்பட்ட, பிந்திய செய்திகளையும், நிகழ்ச்சிகளையும், மக்கள் பெயர்களையும் கொண்டிருக்கிறது அந்நூல் என்பதுதான்.

மேலும் எந்தப் புலவனும் தான் வாழ்ந்து கொண்டிருக்கின்ற காலத்திற்கு முந்திய செய்திகளை மிக அழகாகக் கற்பனைத்திறத்தோடு, கற்போர் உண்மை என்று நம்பும்படி வரைந்து காட்டவியலும். ஆயின் தனக்குப்பின்னால் நடைபெறவிருக்கும் நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் கற்பனை செய்து தம் இலக்கியத்தில் எழுதுவது என்பது இயலாததொன்று. இந்த உண்மையினை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்தால் நூற்களின் காலத்தைச் சரியாகக் கணித்துக் கொள்ள முடியும்.

வடமொழியில் இராமாயணத்தை எழுதிய வான்மீக முனிவர், தம்மையும் அக்கதையோடு தொடர்பு படுத்தித் தமது பன்னசாலையில் இராமனால் துறக்கப்பட்ட சீதை இலவ - குசர்களைப் பெற்றெடுத்ததாக எழுதினாலும், வான்மீகி முனிவர் காலத்தில் இராமாயணக்கதை நிகழ்ந்தது அன்று என்பதும், கர்ணபரம்பரையாக வழங்கி வந்ததொரு கதையினையே வான்மீகி தம் கற்பனைத் திறத்தால் அழகியதொரு இலக்கியமாகப் படைத்தார் என்பதும் அறிஞர் ஒப்புக்கொண்ட செய்திகள்.

அதைப்போன்றே இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் எழுதின கதையும் கர்ணபரம்பரையாகச் சேரநாட்டில் வழங்கி வந்ததொரு கதையான பேகன் கண்ணகி கதையினைத் தமக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த கடல் பிறக்கோட்டிய குட்டுவனோடு தொடர்புபடுத்தித் தம்மையும் அதில் ஒரு பாத்திரமாக்கித் தாம் வாழ்ந்த பதினோராம் நூற்றாண்டுச் செய்திகளையும் புனைந்துரைத்து, சிலப்பதிகாரம் என்னும் பெயரில் இளங்கோ ஒரு நூலை யாத்தார். அதனாற்றான் சங்ககாலத்துக் கதையென்று அவர் கூறாமல்

கூறுகின்ற சிலப்பதிகாரத்தில் மிகப்பிற்காலத்து நிகழ்ச்சிகள் பிரதிபலிக்கக் காண்கிறோம்.

எனவே சிலப்பதிகாரம் பிரதிபலித்துக் காட்டுவது கி.பி. ஒன்பது முதல் பதினொன்றாம் நூற்றாண்டு வரையுள்ள தமிழ்நாட்டு மக்களின் - சிறப்பாக சேரநாட்டு மக்களின் வாழ்க்கையேயாகும். அத்தகைய பிற்கால மக்களின் வாழ்க்கையின் சில கூறுகளை நாம் சிலம்பில் பார்க்கின்றோம்.

பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி தொட்டு - பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதி முடிய உள்ள காலத்தில் வாழ்ந்த தமிழக மக்கள், மூவேந்தரிடையே நடந்த தொடர்ச்சியான போர்களினால் ஓரளவு சோர்வடைந்திருந்தாலும், இசை, கூத்து, நாடகம் போன்ற கலைகளில் ஆர்வம் உடையவர்களாக இருந்தனர். மக்களுக்குத் திருக்கோயில் முற்றங்களிலும், மன்னனுக்கு அரண்மனை முற்றத்திலும் அரங்குகள் அமைக்கப்பட்டன. இவை கூத்தம்பலம், கூத்தரங்கு, நாடகசாலை என்ற பெயர்களாலும் அறியப்பட்டன. இக்கூத்தும் நாடகமும் பல்லவர் ஆட்சிக் காலத்தில்தான் துரிதமாக வளரத்தொடங்கின. எனினும் சோழர் காலத்தில்தான் வேகமாக வளரத் தொடங்கின; மேலும் சோழர் காலத்தில்தான் அவை முழு வளர்ச்சியையும் பெறலாயின. இது சோழர்கள் கல்வெட்டுக்களால் அறியலாம்.

பல்லவர்காலத்தில் இசையும் கூத்தும் அடைந்த வளர்ச்சியினைச் சித் [illegible] ன்ன வாசல் ஓவியங்களாலும், காஞ்சி கைலாச நாதர் கோவில் சிற் [illegible] ளாலும் அறியலாகும். அவ்வோவியங்களும் சிற்பங்களும் புலட [illegible] நாட்டிய முத்திரைகளின் பெயர்களான கரிஹஸ்தம் (கரிக்கை), சதுரம், [illegible] கம்[2] போன்ற பெயர்கள் தென்னகக்கலைகளில் வடமொழி நாட்டிய சாஸ[illegible]தின் ஆதிக்கத்தையே காட்டும்.

இதனால் ஏழாம் நூற்றாண்டிலேயே வடமொழிநாட்டிய சாஸ்திரத்திற்குத் தமிழில் மொழி பெயர்ப்புகள் ஏற்பட்டிருக்கவேண்டும் என்பது உறுதியாகின்றது. இத்தகைய மொழி பெயர்ப்பு நூல்களிலிருந்து கிடைத்த அறிவினையே இளங்கோவடிகள் அரங்கேற்றுக்காதையில் பயன்படுத்தியுள்ளார்.

சுருங்கக் கூறின், பல்லவர் ஆட்சி தொட்டு பத்தாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் உள்ள காலத்தில் தமிழில் எழுதப்பட்ட நாடக நூல்களான பரதம், அகத்தியம், முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் இசை நுணுக்கம், இந்திரகாளியம், பஞ்சமரபு, பரத சேனாபதீயம், மதிவாணனார் நாடகத்தமிழ்நூல், கூத்தநூல், சுத்தானந்தப் பிரகாசம் ஆகியவையே அரங்கேற்றுக் காதைக்கு ஆதாரமாக இருந்திருக்க வேண்டும்.

சிலப்பதிகார காலத்தில் வணிகர்களே நாட்டில் செல்வக் குடியினராயிருந்தனர். உள்நாட்டு வாணிகமும் கடல் கடந்த நாடுகளோடு கொண்ட வாணிகமும் நன்கு நடைபெற்று வந்ததால் மன்னர்

அவ்வணிகருக்குத் தேவையான பாதுகாப்பினையும் பட்டங்களையும் அளித்துப் போற்றுவாராயினர். தரைவழியாகச் செல்லும் வாணிகக் குழுக்கள் வாணிகச்சாத்து எனவும் அவற்றின் தலைவன் மாசாத்துவான் எனவும் அழைக்கப்பட்டான். கடல் வாணிகத்தில் சிறந்தவனுக்கு மாநாய்கன் என்ற பட்டம் அளிக்கப்பட்டது.[3] இப்பட்டங்கள் சோழர் காலத்தில், முக்கியமாக இராசராசன் காலத்திலாவது அல்லது அதற்கு முன்னராவது கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். அவ்வணிகர்கள் கூலம், பட்டாடைகள் சுண்ணங்கள், பொன், வெள்ளி, போன்றவற்றையும், வைரம், முத்து, மாணிக்கம் முதலிய நவமணிமகளையும் வாணிகம் செய்தனர்.

நவமணிகளின் குணம், குற்றம் முதலியவை பற்றி நூற்கள் எழுந்தன. 'கல்லாடம்' நவமணிகளின் குற்றம், குணம் பற்றிப் பேசுகிறது. மன்னர்களும் செல்வந்தர்களும் இவற்றை இழைத்த அணிகலன்களை அணிந்தனர். பராந்தகன் குந்தவையார் தஞ்சைப் பெரியகோவில் திருமேனிகளுக்கு அணிகலன்களைத் தந்ததாகக் கூறும் கல்வெட்டுகளில் இவற்றின் நிறைகுறை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.[4] இராசேந்திரன் காலத்துக் கல்வெட்டுகளும் கல்லாடமும் கூறும் நவமணிகளின் இலக்கணத்தையே சிலம்பு ஊர்காண்காதை 180 முதல் 223 வரையுள்ள வரிகளில் பிரதிபலிக்கப் பார்க்கின்றோம். அதனால், மிகமிக முன்னேறிய பதினோராம் நூற்றாண்டு மக்கள் வாழ்க்கைதான் சிலப்பதிகாரம் ஊர்காண் காதையில் பிரதிபலிக்கின்றது என்பது பெறப்படும்.

பரத்தையர் இனம் சங்ககாலத்திலும் சங்கம் மருவிய காலத்திலும், தலைவியைப் பிரிந்து தலைவன் வாழக் கூடிய காலத்தில் அவனை மகிழ்விக்கும் பொருட்பெண்டிராகவே இருந்து வந்தனர். கி.பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், மானிடரை மணம் செய்யாது பதியிலார் என்ற பெயரோடு இறைவனுக்குத் தொண்டு செய்யும் பணியில் ஈடுபட்டதால் அவரை இறைவன் தளி (கோவில்) யைச் சுற்றிலும் உள்ள தெருக்களில் குடியேறச் செய்தனர் மன்னர். அதனால் அப்பரத்தையர் தளிச்சேரிப் பெண்டுகள் எனவும் அழைக்கப்பட்டனர். இறைவனுக்காக இசையையும் நாட்டியத்தையும் பயிலக் காலப் போக்கில் அக்கலைகளில் அவர்கள் தேர்ச்சி பெற்றனர். இது அவர்கட்குச் சமுதாயத்தில் ஓர் உயர்ந்த இடத்தைத் தந்தது. உயர் குடியினரான பிராமணர் போன்றோரும், அவர்களை மணம் செய்ய முன் வந்தனர்.

சைவக் குரவர் நால்வருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனார் நங்கை (பரத்தை)யான பரவையாரை மணந்த செய்தி அவரது தேவாரப் பதிகங்களால் அறியக் கூடியதாம். ஏழாம் நூற்றாண்டின் இறுதியிலும் எட்டாம் நூற்றாண்டின் முதலிலும் வாழ்ந்த பல்லவ மன்னன் இராசசிம்மனின் மனைவி அரங்கபதாகை இசையிலும் நாட்டியத்திலும் சிறந்த நங்கையார் எனப்படுகிறாள்.

இராசாதிராச சோழனின் ஆட்சியில் (கி.பி. 1018 - 54) திருவொற்றியூரிலிருந்து தேவரடியாளான (நங்கையார்) சதுராள் சதுரி

என்பவளை நாகன் பெருங்காடன் என்பவன் மணம் செய்து கொண்டதாக அவ்வூர்க் கல்வெட்டொன்று (Ins. 147061912) கூறுகிறது.

மூன்றாம் குலோத்துங்க சோழனின் 11 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று (கி.பி. 1189) அவ்வூர்க் கோயில் தேவரடியாள் ஒருத்தி மணம் புரிந்து கொண்டமையைக் கூறுகின்றது (411 of 1925).

கோவலன் மாதவியை மணம் செய்து அவளுடன் வாழ்ந்ததாகக் கூறும் இளங்கோவடிகளின் கூற்றும் பத்து, பதினொன்றாம் நூற்றாண்டில் பரத்தையரின் சமுதாய நிலைமையையே எடுத்துக்காட்டும்.

ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டு வாழும் நிலைமையினை விரும்பாத பொருட்பெண்டிரும் இருந்தனர் என்பதை மணிமேகலை காப்பியத்தில் வரும் மாதவியின் தாய் சித்ராபதி, மாதவியும் மணிமேகலையும் துறவை மேற்கொண்டதை அறிந்தவளாய், மணிமேகலையை உதயகுமாரனோடு சேர்த்து வைப்பேன் என்று சூள் உரைக்கும் உரையினின்றும் அறிந்து கொள்ளலாம் (மணி 18 -ஆம் காதை - அடிகள் 25 - 37).

எனினும் சமுதாயத்தின் மற்ற இனத்தவரைப் போலவே பரத்தையருக்கும் (தளிச்சேரிப் பெண்டுகள், நங்கையார்) தாம் விரும்புகின்ற சமயவொழுக்கங்களைக் கடைப்பிடிக்கவும், கடவுளுக்குத் தொண்டு செய்யத் தம் வாழ்வைக் கோயிலுக்கென்றே அர்ப்பணிக்கவும் உரிமையிருந்தது. கோவலனுக்கு ஒன்பது தலைமுறைக்கு முன்னோனான ஒரு கோவலன் வஞ்சிமாநகரில் ஒரு புத்த சைத்தியம் அமைத்தான் (மணி 28 : 123 - 32).

கோவலன் சமணனாக இருந்தும், மாதவியிடம் தனக்கு ஓர்பெண் மகவு பிறந்த போது பௌத்தத் தெய்வமான 'மணிமேகலை'யின் பெயரையே அக்குழந்தைக்கும் சூட்டினான்.

மாதவியும் மணிமேகலையும் மாசாத்துவானும் கோவலன் இறப்பிற்குப் பிறகு பௌத்த மதத்தைச் சார்ந்து அறவணவடிகளோடும் புகாரைவிட்டு வஞ்சியில் தங்குவாராயினர்.

ஆயின் கண்ணகி சமணசமயத்தைச் சார்ந்தவள் என்பது தெரிகிறது. (சிலம்பு : 16 - 61 - 73). அதனாற்றான் கோவலன் அவளைப் பிரிந்துறைந்த காலத்தில் சிராவக தருமத்தை மேற்கொண்டு துறவாது விரதங் காத்தோராகிய அறவோர்க்களித்தும் யதிதர்மத்தை மேற்கொண்ட துறவோரை எதிர்கொண்டும் வாழுகின்ற வாழ்க்கை தனக்கு இல்லாமல் போயிற்று என்று மாழ்கினாள். இத்தகு சமயப் பொறையினைப் பத்து, பதினொன்றாம் நூற்றாண்டுகளின் உண்மை வரலாற்றில் காண்கிறோம்.

சிறந்த சைவனான இராசராசன் சூடாமண[illegible]ன்ம விகாரம் என்ற பௌத்தப்பள்ளிக்கு நிலங்களைப் பள்ளிச் சந்தமா[illegible] அளிக்கின்றான். அவன் தமக்கை பராந்தகன் குந்தவையார் தாதாபுரத்தில் ஓர் சமணப்பள்ளியை எடுப்பித்தார் (S. I. I. 1, 67, 68).

இராசராசனே திருநறுங்கொண்டை அமண்பள்ளிக்கு இரண்டு நந்தா விளக்கெரிக்க, பெரிய நிலத்தைப் பள்ளிச் சந்தமாகத் தந்தான் (Ins. No. 385 of 1902). சேரநாட்டிலும் விக்கிரமாதித்ய வரகுணன் என்ற ஆய்மன்னன் (கி.பி. 925) தான் சிறந்த வைணவனாக இருந்தும் இறுதியில் திருமூலவாதம் பௌத்தப்பள்ளிக்குப் பெருமளவிற்கு நிலங்களைத் தானமாகத் தந்தான் (T. A. S. Vol. I. P. P. 182 - 92).

சங்ககாலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் சமயப்பூசல் இல்லையெனினும் சமணம் பௌத்தம் ஆகிய மதங்கள் - சைவமும் வைணவமும் கூட - சிலப்பதிகாரத்தில் விளக்கிக் கூறும் அளவுக்கு வளர்ச்சி பெற்றிருக்கவில்லை என்பதனை மட்டும் உறுதியாகக் கூறலாம். பாட்டையும், தொகையினையும் ஊன்றிப் படிக்கின்றவர்கட்கு இவ்வுண்மை புலப்படாமலிராது. ஆகவே சிலப்பதிகாரத்தில் விளக்கிக் காட்டப்படும் சமயப்பொறையினைக் கி.பி. பத்து, பதினொன்று நூற்றாண்டு மக்கள் வாழ்க்கையில்தான் பார்க்கின்றோம்.

சமுதாயத்தில் பரத்தையர் மற்ற பிரபுக்கள் சிற்றரசர் போன்றவர்கள் பெற்றிருந்த உயர்வினைப் பெற்றிருந்தனர். அன்னோர் இசையிலும் நாட்டியத்திலும் வல்லுநராய்த் திருக்கோயில்களிலும் அரசவைகளிலும் சிறப்பெய்தியிருந்தமையால் சமுதாய வாழ்வில் அவர்கட்குப் புகழும் மதிப்பும் ஏற்பட்டிருந்தது. அவர்கள் செல்வமுடையவர்களா யிருந்தமையோடு, சிறந்த கடவுள் பக்தியுடையவர்களாகவும் இருந்தனர். இசை, நாட்டியம் போன்ற நுண்கலைகளில் பெற்ற பயிற்சியும், மன்னனிடம் தலைக்கோல் போன்ற பட்டங்களைப் பெற்றிருந்தமையும், கட்டழகமைந்த இளமையான உடலும், அப்பரத்தையரின் அன்புக்கு ஆயிரத்தெட்டு கழஞ்சுபொன் வரையிலும் விலை மதிக்கச் செய்தது. அவ்விலையினைக் கொடுக்கின்ற யாரும் அவர்களுடைய அன்பினைப் பெற்றுவிடலாம். கோவலனும் 1008 கழஞ்சுபொன் கொடுத்துத்தான் மாதவியின் மாலையை வாங்குவதன் மூலம் அவளது அன்பினையே வாங்கினான். அதுவே,

நூறுபத் தடுக்கி யெட்டுக்கடை நிறுத்த
வீறுயர் பசும் பொன் பெறுவதிம்மாலை
மாலை வாங்குனர் சாலுநங் கொடிக்கெனக்

கூனி (வயந்தமாலை) சொன்னதனாற்றான், கோவலன் அம்மாலையை வாங்கி மாதவியையும் தனக்குரியவளாக்கினான். இவ்வாயிரத்தெட்டு என்ற எண்ணலளவை ஒன்பது, பத்து நூற்றாண்டுகளில் மேற்கொள்ளப்பட்டது என்பது இலக்கியங்களாலும் கல்வெட்டுகளாலும் அறியலாம். பரத்தையர் தம் கற்புக்கு விலை பேசும்போது ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன்விலை என்பது, சிலப்பதிகாரத்திற்குச் சற்று முன்னால் எழுந்த காப்பியமான சீவகசிந்தாமணியில் வருகிறது.

''துப்புறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத்தூதின்
ஒப்ப வொன் றாதியாக வாயிரத் தோரெட்டீறாச்
செப்பித்தஞ் செம்பொனல் குனலம் வரைவின்றிற்கும்,
உப்பமை காமத் துப்பின வரிடமுரைத்து மன்றே''

சீவகசிந் - 1, நாம. இலம் செய். 78.

சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட மாதவிக்கும் சிந்தாமணியில் கூறப்பட்ட பரத்தைக்கும் ஒரேயொரு வேற்றுமையைத்தான் காண்கிறோம். மாதவி கோவலன் ஒருவனோடு மட்டும்தான் உறவு கொள்கின்றாள். ஆயின் மற்றவள் அவ்வாறன்று.

இனி 10, 11 ஆம் நூற்றாண்டில் எழுந்த கல்வெட்டுக்களிலும் இதே அளவை முறையினைப் பயன்படுத்தியிருப்பதைக் காணலாம். கி.பி. 1009 ஆம் ஆண்டில் எழுந்த முதலாம் பாற்கரரவிவர்மனின் கல்வெட்டொன்று ஆயிரத்தெட்டுக் காணம் பொன் தண்டமிட்டதைக் குறிப்பிடுகின்றது.[5] எனவே தண்டமாயினும் பரிசாயினும் 1008 என்பது கி.பி. பத்தாம் நூற்றாண்டில் மன்னரும் மக்களும் ஏற்றுக் கொண்டதொரு எண்ணலளவை என்பது தெரியவருகின்றது. மாதவி 1008 கழஞ்சு பொன் மதிப்பினையுடைய மாலையை மன்னனிடமிருந்து பரிசாகப் பெற்றாள் என்கிறார் இளங்கோவடிகள். ஊராரிடம் 1008 காணம் பொன் தண்டம் படக்கடவன் என்கின்றது கல்வெட்டு; மாறுதல் இவ்வளவே.

அன்றைய சமுதாயத்தில் பரத்தையர் உயர் நிலையினைப் பெற்றிருந்தனர் என்பது கல்வெட்டுகளாலும் உறுதிப்படும் செய்தியாகும். அவர்கள் செல்வமுடையவர்களா யிருந்தமையோடு சிறந்த தெய்வபக்தியுடையவர்களாகவும் திகழ்ந்தனர் என்பது அன்னோர் புரிந்துள்ள அறச்செய்கைகளால் அறியவருகின்றது.[6] கோதை இரவி (கி.பி. 917 - 44) என்னும் சேரவரசனின் காலத்தில் சிற்றறையில் நங்கையார் என்ற தேவதாசி குமரநாரணபுரத்துத் தேவர்க்குப் பதின்தூணிப்பாடு நிலம் தேவதானமாகக் கொடுத்ததைக் கோதை இரவியின் பதினைந்தாம் ஆட்சியாண்டில் (கி.பி. 932) எழுந்த கல்வெட்டு கூறுகின்றது.[7]

மூன்றாம் பாற்கரரவிவர்மன் காலத்தில் நித்ய வியராசகத் தேச்சரத்துத் தளிக்கு, சிரீதர நங்கச்சி என்னும் தேவரடியாள், தனக்கு மன்னன் ஆட்டை விருத்தியாக அளித்த நிலத்தையும் சேர்த்து நிலங்களைத் தானம் செய்ததாக, கி.பி. 1055 இல் எழுந்த கல்வெட்டொன்று தெரிவிக்கின்றது.[8] இக் கல்வெட்டிலிருந்து இன்னொன்றும் தெரியவருகின்றது. சிரீதர நங்கச்சி மன்னனின் பட்டத்தரசியாக இருக்கவேண்டும் என்பதே அது. ஏனெனின் கல்வெட்டில் அவள் திரிபுவனமா தேவியான சிரீதரநங்கச்சி என்று அழைக்கப்படுகின்றாள்.[9] 'திரிபுவனமாதேவி', 'உலோக மாதேவி', ''புவனமுழுதுடையாள்'', 'உலகமுழுதுடையாள்', 'திரைலோக்ய மாதேவி'

என்ற அடைமொழிகளெல்லாம் பொதுவாகப் பட்டத்தரசியைக் குறிக்கவே பயன்படுத்துவனவாகும். இனி, குணவாய் நல்லூர் விசையராக்கீச்சுரத்துப் பள்ளிக்குக் குன்றன் சிறு நங்கை என்ற தேவரடியாள் ஐங்கலந்நெல் கொடுத்ததாகக் கி.பி. 1083 இல் எழுந்த கிணாலூர் (குணவாய் நல்லூர்) கல்வெட்டு கூறுகின்றது.[10]

மன்னர் நாட்டியக்காரிகளை மணந்துகொள்ளும் வழக்கம் இருந்து வந்தது என்பதற்கு முன்னர் காட்டிய 'நித்ய வியாரேச்சுரத்துத் தளி'' கல்வெட்டேயன்றி வேறு வரலாற்று நிகழ்ச்சிகளும், கல்வெட்டுகளும் உள்ளன. கி.பி. 686 முதல் 705 வரை ஆண்ட பல்லவ அரசனான இராஜசிம்மனின் அரசி ரங்கபதாகை யென்பாள் ஆடல் பாடல்களில் வல்ல கூத்தி என்று கருதப்படுகின்றாள்.[11] சுசீந்திரம் கோயிலில், வேணாட்டு அரசர் ஸ்ரீவீரரவி கேரளவர்மர் காலத்தில் வாழ்ந்த கண்டியூர் உண்ணி என்னும் பெண், இளைய நயினரான சுப்பிரமணியர்க்கு கோயில் கட்டியதாக அங்குள்ள கல்வெட்டு கூறுகின்றது.[12] அக்கண்டியூர் உண்ணி அரசமாதேவியாக இருக்கக்கூடுமோ என்ற ஐயம் தெரிவிக்கின்றார் ஓர் ஆராய்ச்சிப் பேரறிஞர்.[13]

தோரணவாயில் தோன்றிய காலம்

இத்தேவரடியவர்கள் மன்னனிடமிருந்து பல சலுகைகளைப் பெற்றனர். பொன்னாலான அணிகலன் அணியவும், பெரிய தோரணவாயிலை அமைக்கவும், இறையிலி நிலங்களைப் பெறவும், சிவிகையில் ஊர்ந்து செல்லவும், மன்னனவையில் அமர்ந்திருக்கவும், சாமரை கவரி இவற்றைப் பயன்படுத்தவும், செல்லுமிடங்களில் வாளேந்திச் செல்லவும், பிராம்மணர், சிற்றரசர் இவர்களோடு பரத்தையரும் உரிமை பெற்றிருந்தனர். மற்றவர்கள், வீரத்தினாலோ அல்லது செல்வாக்கினாலோதான் இதனைப் பெறமுடியும்.[14] இவ்வுரிமைகளில் தோரணவாயில் அமைப்பது என்பது சேரநாட்டில் இருந்து - இன்றும் இருக்கின்ற வழக்கமாகும். வாயிலில் அமைக்கும் உயர்ந்த கட்டிடமே தோரணவாயில்.இது வடமொழியில் 'துவாரகேஹம்' எனப்படும். முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் (கி.பி. 9ஆம் நூற்றாண்டு) இவ்வமைப்பு இல்லை என்பதனை அவன் திருநெய்த்தானம் கல்வெட்டே சான்று பகர்கின்றது.

ஆழ்வார்கள் காலத்தில் பெரியாழ்வாரும் ஆண்டாளும் பொற்கும்பம் வைத்து தோரணம் கட்டுவதைப்பற்றி மட்டும்தான் கூறியிருக்கின்றனர். நிவந்தோங்கு மரபில் தோரணவாயில் (சிலம்பு) திருப்பாவையில் 'கொடிதோன்றும் தோரணவாசல் காப்பானே மணிக்கதவம் தாள் திறவாய்' (பாடல் 16) என்று வருவதனால் இத்தோரணவாசல் அமைக்கும் வழக்கம் பெரியாழ்வார் காலத்தில் இருந்தது என்றும் அது துவார கேஹம் என்றும் அறியலாம்.

கி.பி. 1000 - ஆண்டில் எழுந்த யூதச் செப்பேட்டிலும் 'இடுபடி தோரணமும் தோரண விதானமும்' அமைக்கும் உரிமை

கூறப்பட்டிருக்கின்றது. கி.பி. 1225 இல் எழுந்த வீரராகவச் செப்பேட்டுச் சாசனத்திலும் இரவிகோவர்த்தனன் (கோவர்த்தனன்) என்ற வணிகனுக்கு, வீரராகவன் என்ற சேரமன்னன் கொடுத்த உரிமைகளில் 'இடுபடி தோரணமும்' ஒன்று எனக் கூறப்பட்டுள்ளது.

தஞ்சை இராஜராஜேச்சுரத்தின் முதற்கோபுரவாயில் 'திருத்தோரண வாயிலாகிய திருமாளிகை வாயில், இராசராசன் வாயில்' எனப்படுவதாலும் தோரணவாயில் இன்னதென அறியலாம். கன்னியாகுமாரி குகாநாதர் கோயில் தோரணவாயில் (மகரதோரணம்) இராசராசனால் கி.பி. 1000ல் கட்டப்பட்டது.[14A]

எனவே, பிற்கால கோபுர வாசலுக்குக் காரணமாயிருந்த 'நிவந்தோங்கு மரபிற்றோரண வாயில்' பெரியாழ்வார் காலத்தில்தான் தமிழகத்தில் முதன் முதலில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதால், அத் 'தோரண வாயிலை'ப் பயன்படுத்தும் சிலப்பதிகாரமும் எவ்வாற்றானும் பெரியாழ்வார் காலத்திற்கு முன்னர் எழுந்ததாக இருக்க முடியாது என்பது பெறப்படும்.

**வக்காணம் வந்தகாலம்**

தோரணவாயிலைப் போன்ற இன்னொரு சொல் 'வக்காணம்' என்பது. 'வியாக்கியானம்' என்ற வடசொல்லே 'வக்காணம்' என்று ஒன்பது பத்து நூற்றாண்டுகளில் சேர நாட்டில் வழங்குவதாயிற்று. சாதாரண மக்களின் மதப்பற்றினையும் கடவுள் பக்தியினையும் வளர்ப்பதற்காக மகாபாரதம் முதலிய புராணங்களைக் குறிப்பிட்ட நேரங்களில் வியாக்கியானம் செய்வதற்குப் பிராமண விற்பன்னர்களை மன்னர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். புராணங்களைப் பாராயணம் செய்வதற்காகக் கோவில்களில் ''வக்காணிக்கும் மண்டபங்கள்'' கட்டியிருந்தனர். இவ்வாறு 'வக்கணிக்கும்' அறிஞர்கள் 'பட்டகள்' எனவும், அவர்களுக்கு அளிக்கப்படும் நிலங்கள் 'பாரத விருத்தி', 'பட்டவிருத்தி' எனவும் கூறப்பட்டன. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் திருவல்லவாழ் கோயிலில் எழுந்த ஓர் கல்வெட்டில் மாபாரதத்தையும் புராணங்களையும் வக்கணிக்கும் (வியாக்கியானிக்கும்) பட்டகளைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.[15]

எனவே 'வக்காணம்' என்ற சொல் மகாபாரதத்தைத் தமிழில் வியாக்கியானம் செய்யத் தொடங்கிய பத்தாம் நூற்றாண்டில் எழுந்த சொல் என்பது உறுதியாகின்றது. 'மாவாரதம்' எல்லோரும் புரிந்து கொள்ளும் முறையில் தமிழ்மொழியில் மொழி பெயர்க்கப்பட்டதும் பத்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் என்பது அப்பொழுது ஆண்ட பாண்டியமன்னன் மூன்றாம் இராஜசிம்மனின் கி.பி. 916 இல் எழுந்த சின்னமனூர்ச் செப்பேட்டுச் சாசனத்தாலும் அறியலாம்.[17] எனவே 'வக்காணம்' என்னும் சொல் 'வியாக்கியானம்' என்னும் பொருளில் சிலப்பதிகாரத்திலும் பயின்றிருப்பது குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

சிலம்பு மூன்றாவதான அரங்கேற்றுக் காதையில் 'மீத்திறம்படாமை வக்காணம் வகுத்து' (அடி 148) என்று வருகிறது'; - ''பாலைப்பண்ணை அளவு கோடாதபடி ஆளத்தியிலே வைத்து'' என்பது அடியார்க்கு நல்லாருரை அவ்வுரையிலும் 'ஆளத்தியிலே வைத்து' என்ற பகுதி 'வியாக்கியானித்து' என்பது போன்ற பொருளைத் தருதலைக் காணலாம்.

ஆகவே 'வக்காணம்' என்ற சொல் எவ்வாற்றேனும் பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னர் தமிழ்மொழியில் எழுந்த சொல் அன்று என்பதும் அக்காரணத்தாலேயே சிலம்பு பத்தாம் நூற்றாண்டிற்கு முன்தோன்றிய நூலாக இருக்கமுடியாது என்பதும் பெறப்படும்.

நாத்தூண் (நாத்தனார்) என்ற சொல்லும் அதேபோன்று இன்று கேரளம் முழுவதும் வழங்கி வருவதும் நினைத்தற்குரியதாம்.

ஆக, சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்ற பழக்க வழக்கங்களில் பல எட்டாம் நூற்றாண்டிற்கு முன் தமிழகத்திலும் சிறப்பாகச் சேர நாட்டில் - இருந்தவை யன்று என்பதும் அந்நூலில் பயிலப்படுகின்ற ஏராளமான வடசொற்களே அதன் காலம், வடநாட்டு ஆரியப் பிராமணர்கள் தென்னாட்டிற் குடியேறிய ஆறாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது என்பதனை அறிவிக்கப் போதுமானவை என்பதும், 'தோரணவாயில், வக்காணம், நாத்தூண் போன்ற ஒன்பதாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்ட சொற்களும் சிலப்பதிகாரநூல் பத்தாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்ட காலத்தில் எழுந்த நூலே என்பதனை வலியுறுத்திக் காட்டும் என்பதும் பெறப்படும்.

### அடைக்காய் வெற்றிலை

இனி, 'அடைக்காய்' என்ற சொல்லும் அத்தகையதே. ''அம்மென்றிரைய லோடடைக்காயீத்து'' (சிலம்பு உ : 9 கொலைக்களக்காதை - அடிகள் 55) கி.பி. 500 -க்கு முன்பு தென்னாட்டு மக்கள் வெற்றிலையுட் கொள்ளும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை. ஆறாம் நூற்றாண்டிற்கு முன் அப்பெயர் இலக்கிய வழக்கிலில்லை. கி.பி. 888 -க்கு முன்னரும் இல்லை என்பது மண்டலபுருடரின் சூடாமணி நிகண்டாலும் தெரிகிறது. 4 -வது மரப்பெயர்த் தொகுதி செய். 10 - அடி. 3 - 4).

சால நீள் கமுகு முப்பேர் சான்றிடுந் துவர்க்காய் பாகு
கோலமென்றிந்த மூன்றுங்குறித்து பாக்கிற்கு நாமம்''

என்பதால் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் தமிழகத்தில் அடைக்காய் என்ற சொல் பாக்குக்கு இல்லை யென்பது கண்கூடு. ஆயின் முதலாம் இராசராசன் காலத்தில் (கி.பி. 1014) 'பாக்கு' என்பதனோடு 'அடைக்காய் என்ற சொல்லும் வழக்கில் இருந்தது. போனக்குருத்து பன்னிரண்டுக்கு நெல்லு இரு நாழியும் அடைக்காயமுதுக்கு பாக்கு முப்பது வெள்ளிலை அமுது அறுபதுக்கும் நெல்லு நானாழி உரியும்'' (தஞ்சை ராஜராஜேச்சுரக் கல்வெட்டு - முதலாம் இராஜராஜன் (1014) காலத்தது (S. I.

I. Vol. II Pt II No. 26 P. 126). ஆனால் 1079 -ல் எழுந்த கேரளத்துக் கல்வெட்டில் அடைக்காயமுது என்று மட்டுமே இருக்கிறது.

"ஸ்வஸ்தி ஸ்ரீ கன்னியில் வியாழந்நிற்க கன்னி ஞாயிறு ஞாயிறாண்ட அச்சுவதி நாள் பெரு நெய்தல் முக்கால் வட்டத்திருந்தது......(5) இரண்டரைக்காணம் பொன் தண்டம் வைச்சுக்கொண்டு அடைக்காயமுதும் இடக்கடவியன்" (T. A. S. Vol. V. P. 35 - 36) 1079 பெருநெய்தலூர் - பெருநயில் (Perunna). அதனால் 'அடைக்காய்' என்றசொல் 10 ஆம் நூற்றாண்டிற்கும் முன் ஒன்பதாம் நூற்றாண்டில் வழங்கியிருக்கலாம்.

## குறிப்புக்கள்

1. "ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி வற்மற்கு யாண்டு நாலாவது நாள் 325. திருவிடை மருதில் தேவர் நாடக சாலையில் இருந்தருளி.......... S. I. I. Vol. iii Pt. iii No. 124. P. 260. A. D. 911.

2. 'பல்லவர் வரலாறு' பக். 285 - 7. டாக்டர் மா. இராசமாணிக்கனார். கழக வெளியீடு. பரதமுனியின் நாட்டிய சாஸ்திரம், ஒன்பதாம் அத்யாயம், அஸம்யுதஹஸ்தம் காரிகை 17, ஸம்யுதஹஸ்தம் காரிகை 1, 15 (மலையாளம் மொழி பெயர்ப்பு) கேரள சாகித்ய அகாடமி வெளியீடு - 1971.

3. பி. சோ. ச. பகுதி. 3. பக். 108, 109 தி. வை. ச. பண்டாரத்தார்.

4. ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் சாசனம் (கி.பி. 1015) -க்குமுன் அடி - 2 - 9. S. I. I. Vol. II pt. I No. 7. P. P. 77 - 84. சூடகம் வரியகூ - முன்கைவளையல்.

5. "ஊராளனும் ஒரோத்தரை ஒழி தேவகாரியம் செய்யில் ஆயிரத்தெட்டு காணம் பொன்றண்டம் படக்கடவன்" - பாற்கர இரவிவர்மன் - திருநெல்லிச் செப்பேடு கி.பி. 1009) Indian Antiquary, p.p. 290 - 1.

6. S. I. I. Vol. V. No. 430, பி. சோ. ச. பகுதி. iii பக். 100.

7. சோக்கூர் கோயில் கல்வெட்டு S. I. I. Vol. No. 57 p.p. 72 - 73.

8. T. A. S. Vol. VIII. p. 40.

9. Ibid. "ஸ்வஸ்தி ஸ்ரீ கோஸ்ரீபாற்கரன் இரவிக்குச் செல்லா நின்ற யாண்டு பதினோராமாண்டைக் கெதிர் இரண்டாமாண்டு துலாத்தில் வியாழந்நிற்க நித்ய வியாரேச்சு ரத்து பதினெட்டு நாட்டாரும் அதிகாரிகளும் அவிரோரத்தால் முக்கோல் வட்டத்திலிருந்து செய்த கச்சமாவது திரிபுவன மாதேவியான சிரிதர நங்ஙச்சி உடைய பூமி....."

10. A. R. No. 14. 06 1901. கள்ளிக் கோட்டைக்கு வடகிழக்கு 18 மைல் தொலைவில் பாலுச்சேரிக்குப் பக்கம் குணவாய நல்லூர் அமண்பள்ளி இருந்தது.

11. 'வரலாற்றின் பின்னணியில்', பக். 22. அ. கு. இளம் குளம் குஞ்சன்பிள்ளை.

12. Dr. Hutish Epigraphia Indica Vol. VIII 'பிராசீனலிகிதங்கள்' - வி. ஆர். பரமேஸ்வரன் பிள்ளை. பக். 232.

13. 'பிராச்சீன லிகிதங்ஙள்' பக். 233.

14. திருநெய்த்தானம் கல்வெட்டு S. I. I. I Vol. pt. III No. 84 p. 241; பாற்கரரவியின் யூதச்செப்பேடு. E. I. III. p. 68 - 69.

14A. Arts and crafts of kerala. R.V. Poduval, plate xxxlv. paico publishing co., Trivanduram குமுனி மங்கலாதேவிக் கோட்டத்திலும் இந்த அமைப்பினைக் காணலாம்.

15. பி. சோ. ச. பகு. III. பக். 76 தி. வை. ச. பண்டாரத்தார்.

16. மதிலகத்தன்று வக்கணிச்சிரிக்கும் பட்டகளோரோத்தர்க் கைஞ் ஞாழிச் செய்தரி கொடுப்பது" - திருவல்ல (வாழ்) சாசனம். அந்தரக் கொட்டுடன் அடங்கிய பின்னர்.

"மீத்திறம் படாமை வக்காணம் வகுத்துப்"

"பாற்பட நின்று பாலைப்பண்மேல்"

"நான்கி னொரீஇய நன்களமறிந்து" சிலம்பு : 3 : 148 - 150

"மதிலகத்தன்ற வக்கணிச்சிரிக்கும் பட்டகளோரோத்தர்க் கைஞ்ஞாழிச் செய்தரி கொடுப்பிது' திருவல்ல(வாழ்) ச் சாசனம் அரி - அரிசி அஞ்ஞாழிச் செய்தரி - ஐந்நாழி வீதம் அரிசி" மூன்று நாழி, படிக்குச் சமம் - "கேரள வரலாற்றில் இருள் கவிந்த ஏடுகள்; இளம் குளம் குஞ்சன்பிள்ளை; "அரைக்கால் நிலமே உடையானாயினும் வேதம் வல்லாரை நாலுபாஷ்யத்திலும் ஒரு பாஷ்யம் வக்கணித்தறிவான். அவனையும் குடவோலை எழுத்திப்புக இடுவதாகவும்" Archeological Survey of India Annual Report of 1904 - 5 P. P. 139 - 42 Parantaka Cola A. D. 921. (உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலத்துக்கல்வெட்டு P. 51. பி. சோ. வ. பகுதி III, பக், 135, தி, வை. ச. பதி; அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1971.

17. 'மகாபாரதம் தமிழ்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்' சின்னமனூர் பெரிய செப்பேடுகள் - அடி. 107. S. I. I. III pt. IV. P. 450.

# 13. சிலம்பின் மூலம்

உலகில் தோன்றியுள்ள காவியங்கள் ஒவ்வொன்றுக்கும் மூலம் ஒன்று இருக்கும் என்பது அறிஞர் கூற்றாகும். எனவே இளங்கோவின் சிலப்பதிகார காப்பியத்துக்கும் ஒரு மூலக்கதை இருந்திருக்க வேண்டும். அது எது?

சிலம்பில் கட்டுரைக் காதையில் கண்ணகியை இளங்கோ ''ஒரு முலை குறைத்த திருமாபத்தினி''என்று குறிப்பிடுகின்றார். சங்கப் பாடலான நற்றிணை 216 ஆம் பாடலில் மதுரை மருதன் இள நாகனார், ''ஒரு முலையறுத்த திருமாவுண்ணி'' என்று வேங்கை மரத்தடியில் மார்பையறுத்து உயிர்துறந்த ஒரு பெண்ணைக் குறிப்பிடுகின்றார்.

சிலம்பு சங்கம் மருவிய நூல் என்பதால் நற்றிணைத் திருமாவுண்ணியைத்தான் இளங்கோ திருமா பத்தினி என்று காவியத் தலைவி கண்ணகியை அழைக்கின்றார். அங்கேயும் மருதனிள நாகனார், கபிலர், பரணர், அரிசில் கிழார், கடல் பிறக்கோட்டிய குட்டுவன் ஆகியோர் காலத்தில் வாழ்ந்த பேகன் மனைவி கண்ணகியைத்தான் திருமாவுண்ணி என்றழைத்தார்.

சிலம்பில் கோவலன் கண்போன போக்கில் கால் போனதால் கண்ணகியிருக்க மாதவியிடம் சென்றதால் - சொல்லொணாத் துன்பத்தை அடைந்தாள் கண்ணகி. அங்கேயும் பேகன் செய்த கொடுமையினால் - கண்ணகியைஒதுக்கி வைத்து அவளை வாழாவெட்டியென உலகோரைக் கொண்டு சொல்ல வைத்தது. இதனைப் புலவர் மருதனாரே கூறுகிறார்.

எரி மருள் வேங்கை கடவுள் காக்கும்
குருகார் கழனியின் இதணத்தாங்கண்
ஏதிலாளன் கவலை கவற்ற
ஒரு முலையறுத்த திருமா உண்ணிக்
கேட்டாரனைய ராயினும்
வேட்டா ரல்லது பிறர் இன்னாரே (நற்றிணை 216)

ஏதிலாளன் = முன்பின் யோசிக்காதவன்; பின்விளைவு பற்றிக் கவலைப்படாதவன் - பேகன்; அவன் கண்ணகியை ஒதுக்கி வைத்ததும் இருவரையும் இணைக்கக் கபிலர், பரணர், அரிசில் கிழார் பாடுபட்டதும் புறநானூற்றுச் செய்யுட்களால் அறியலாம் (எண் 144, 145, 146). பேகன், கண்ணகி, கபிலர், பரணர், அரிசில் கிழார் - பெருங்குன்றூர் கிழார், கடல்

பிறக்கோட்டிய குட்டுவன் ஆகியோர் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் (510) வாழ்ந்தவரென்று கபிலரது குறிஞ்சிப்பாட்டில் வரும் ஆரியவரசன் பிரகதாதித்தன் காலத்தால் அறியலாம்.

[பானுகுப்தபிரகதாதித்தன்] இவனுக்குத் தமிழின் இனிமை புலப்படுத்துவதற்குக் கபிலர் குறிஞ்சிப்பாட்டைப் பாடினார் என்று அடிக்குறிப்பில் காணப்படுகிறது.

கபிலரது காலம் கழிந்து நல்லந்துவனார் காலத்தில்தான் (கி.பி. 634 என்று எல். டி. சாமிக்கண்ணுப்பிள்ளை 11 ஆம் பரிபாடலை வைத்துக் கூறுகிறார்; பி. எல். சாமியும் திருமுருகாற்றுப் படை ஏறத்தாழ இதே காலத்தில் எழுதப்பட்டது என்கிறார்.) மருதனிள நாகனார் வாழ்ந்தார். இந்த 125 ஆண்டு இடைவெளியில் கண்ணகியை (பேகன்மனைவி) பத்தினிப்பெண் என்ற நிலையில் [கற்புக்கரசி, பதிவிருதை, மகாசதி, மாஸ்தி] தெய்வமாக வழிபடத்தொடங்கிய மக்கள் அவள் இயற்பெயரைக் கூறாமல் செல்லப்பெயரால் - திருமாவுண்ணி - அழைக்கலாயினர். உண்ணி எனும் பெயர் மலபார் பகுதியில் சிறப்பாகவும் கேரளத்தின் பிறபகுதிகளில் அரிதாகவும் ஆண் பெண் இருபாலாருக்கும் இட்டு வழங்கும் பெயர் மாவுண்ணி, தெய்யுண்ணி (தெய்வம் + உண்ணி, சே உண்ணி, கோ உண்ணி (கோவன் + உண்ணி), மாதுண்ணி (மாதவி + உண்ணி), ஐயுண்ணி (ஐய + உண்ணி) போன்றவற்றைக் காண்க.

செல்லப்பெயரான ''உண்ணி'' குழந்தை என்னும் பொருளது. 'புலவர் குழந்தை' என்பது போல 'உண்ணி மேனன்' என்றும் வரும். இன்றும் (திரு) மாவுண்ணி எனும் பெயர் மலபார்ப்பகுதியில் வழக்கில் உள்ளது. இதனை ''முடியேற்றம் எனும் கூத்து வகையினை திருமாவுண்ணியும் குழுவினரும் நடத்தினர்'' (தேசாபிமானி : நாளிதழ், 23 மார்ச்சு 1980, கோழிக்கோடு) என்ற செய்தியால் அறியலாம்.

## குறும்பா

திருமாவுண்ணி என்று கண்ணகியைக் குறிக்க நின்ற பெயர் எப்பொழுது வழக்கிலிருந்து மறைந்து குறும்பா எனும் பெயர் கண்ணகியைக் குறிக்க நின்றது?

பேகன் வையாவிக் கோப்பெரும் பேகன், பெருங்கல் நாடன் பேகன் எனும் பெயர்களையுடையவன். 1. வையாவி நாடு வயநாடு ஆயிற்று. பேகன் கண்ணகி குறும்பர் இனத்தவர். அதனால்தான் அவள் 'குறும்பா' எனும் பெயரில் அழைக்கப்பட்டாள். அவர்கள் சமணமதம் தழுவியவர்கள். இன்றும் கேரளத்தில் வயநாட்டில் தான் சமணர்கள் இருக்கிறார்கள். வயநாட்டிலுள்ள எடைக்கல் குனகக்கல்வெட்டு கி.பி. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கடம்ப அரசன் விஷ்ணு வர்த்தனனுடையது. பேகன், பாரி, நள்ளி போன்ற மலையரையர்களின் நாடுகளைப் பேரரசர்கள் கைப்பற்றி அவர்களை

நாடிழந்தவர்களாக்கியது இக்காலத்தில்தான் என்று திரு. த. சீனிச்சாமி கூறுவார்.[2] ஆகவே தென்வயநாடும் கோழிக்கோட்டின் வடபகுதியும் சேர்ந்து குறம்பர் நாடு என்று புதிய நாடு உண்டாயிற்று. இது கி.பி. 7 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனலாம். இக்காலம் தொட்டு தெய்வமான கண்ணகி ஸ்ரீகுறும்பா - சீ°° குறும்பா - சீரமபா எனும் பெயர்களால் அறியப்பட்டு அவள் கோவில்கள் 'ஸ்ரீ குறும்பக்கா'வுகள் எனும் பெயரில் அறியப்படலாயின.

கண்ணகியின் வருந்தத்தக்க முடிவு இளங்கோவின் மனதைப் பெரிதும் பாதித்தது. இதற்கிடையே "சுந்தரமுடியையும் இந்திரன் ஆரத்தையும்" அடைய எண்ணிய சோழர்கள், முதலாம் பராந்தகன் காலம்தொட்டு நூறு ஆண்டுகள் சேரரோடு போரிட்டனர். முத்தாய்ப்பாக, கி.பி. 1000ல் சேர வரசனைக்கொன்று மகோதயபுரம் சுட்டெரித்தனர். இச்செயல்களால் மனம் நொந்த இளங்கோ, பேகன் கண்ணகியை, தமிழ்நாட்டு மூவரசருக்கும் உரியவளாக்கி, பேகன் பெயரைக் கோவலன் என்று மாற்றி ஏராளமான பாத்திரங்களையும் படைத்துப் "பெரிய திரையில்" காப்பியம் சமைத்தார்.

அரும்பதவுரைகாரர் காலம் வரையிலும் கயவாகு வஞ்சிக்கு வந்ததாகச் செய்தியில்லை. பெயர் அறியப்படாத அரசன்தான் வந்தார் (காவல் வேந்தன்). அடியார்க்கு நல்லார் உரையில் அது கயவாகு என்று காணப்படுகிறது. அடிய்யார்க்கு நல்லார் (அவர்) வாழ்ந்த காலம் 14 ஆம் நூற்றாண்டு. இரண்டாம் கயவாகு வாழ்ந்தது 1132 - 52வரை. அவரது அவையிலிருந்த தமிழ்ப் புலவன்தான் இளங்கோ எழுதிய 'காவல் வேந்தன்' என்ற தொடரை மாற்றிக் கயவாகு வேந்தன் என்று ஏட்டைப் பெயர்த்தெழுது கின்றபோது எழுதினார்.

இதன் பிறகுதான் கண்ணகிக்கு இலங்கையில் கோயில்கள் எழுந்தன. இதனால்தான் இலங்கையில் கண்டெடுக்கப்பட்ட கோவலன் கண்ணகியின் மிகப்பழமையான மரப்படிமமே கி.பி. 11 - 12 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகலாம் என்று அறிஞர்கள் கூறுவாராயினர்.

சைவ வைணவ சமயங்களைச் சேர்ந்தவர்கள் ஒன்றுபட்டு அரசர்களினுதவியினால் இராமாயணம் மகாபாரதம் பெரியபுராணம் போன்றவற்றைப் பரப்பியபோது இயல்பாகவே சிலப்பதிகாரம் கற்பவரின் எண்ணிக்கை குறைந்தது.

சிலம்பை முதன் முதலில் மேற்கோளாகக் காட்டுவது நன்னூல் - மயிலைநாதர் உரையில் தானே? இதையுணர்ந்துதான் போலும் புகழேந்திப் புலவரும் சூடாமணிப்புலவரும் சிலப்பதிகாரக் கதையினைக் கூட்டியும் குறைத்தும் திருத்தியும் எழுதினர். இல்லையானால் கண்ணகியைப் பொய்யா மொழிப்புலவர் திருவொற்றியூரில் வட்டபுரி நாச்சியம்மனாக வீற்றிருக்கச் செய்வாரா?

இக்கதைகளையெல்லாம் படித்த பிற்கால மலையாளிகள் தந்நாட்டு மொழி தமிழ், மலையாளம் என்று புதிய மொழியாக மாறிய காரணத்தால்

மலையாள மொழியிலேயே குறும்பை (கண்ணகி)யின் கதையினை எழுதினார்கள். இசையோடு பாடப்படுகின்ற காரணத்தால் இக்கதைகள் ''பாட்டு''கள் எனப்பட்டன. சிலப்பதிகாரத்தில் வரும் 'காதை' "Gaatha" என்ற வடசொல்லுக்கும் இசைப்பாட்டு என்றுதான் பொருள். மங்கல வாழ்த்துப்பாடல் என்பதில் வரும் பாடல் என்ற சொல்லுக்கு இசைப்பாடல் என்றே பொருள்.

கண்ணகி கதை இங்குக் கேரளத்தில் தோற்றம் பாட்டு, ஆவியர் பாட்டு,[23] மரக்கலப்பாட்டு, சூதரங்கு, நல்லம்மைப்பாட்டு, சிலம்புக்கள்ளன் போன்ற பெயர்களில் பாடப்படுகின்றன. கோவலன் கண்ணகி என்ற பெயர்களுக்குப் பதிலாகப் பொன்மகன், பொன் மகள் என்று வருகிறது. பெற்றோர்கள் நல்லச்சன் நல்லம்மை; நிகழிடம் மட்டும் தெற்குக் கொல்லமும் வடக்கு (மலபாரிலுள்ள பந்தலாயனிக் கொல்லமும் (பந்தர் ஆயின கோலம் என்பது சிதைந்து பந்தலாயனி கொல்லமாயிற்று). எல்லாக் கதைகளிலும் பொற்கொல்லன் உண்டு; பாண்டியன் நாட்டிற்குச் சென்றே காளியின் அவதாரமான பொன் மகள் ( கண்ணகி) பாண்டியனையும் நாட்டையும் அழிக்கினறாள். மாதவி என்ற பாத்திரம் இல்லை, சூதரங்கில் ஏழுவேழப் பெண்கள் வருகிறார்கள்.

பிராமணர்கள், நம்பூதிரிமார் ஒழித்து அனேமாக மற்றெல்லா சாதியினரும் இங்கும் வடஇலங்கையிலும் கண்ணகியை வழிபடுகிறார்கள்; பொற்கொல்லரையுள்ளிட்ட கம்மாளர், மூத்தான்மார் என்ற வியாபாரிகள், வாணியர், அதே தொழிலைச்செய்யும் வியாபாரி நாயன்மார், மலபாரிலுள்ள மீனவர்கள் என்பவர் இவர்கள்.[4] பாலக்காடு, மலைப்புறம், கோழிக்கோடு, வயநாடு, கண்ணனூர், கோசர்கோடு ஆகிய மாவட்டங்களிலும் திருச்சூர் மாவட்டத்தின் வட எல்லைப் பகுதிகளிலும் 'சீம்பக்கா' எனும் கண்ணகிக் கோவில்கள் உள்ளன.

கொடுங்கோளூரில் (சிலப்பதிகார வஞ்சி) உள்ள கோயில் காளியினுடையது. என்றாலும் சிலப்பதிகார கதை மக்களிடையே பரவிய காரணத்தால் அவர்கள் இன்றும் கொடுங்கோளூர்க் கோயிலைக் கண்ணகிக் (ஸ்ரீ குறும்பா) கோயிலாகவே கருதிப் பங்குனி மாதத்துப் பரணி நட்சத்திரத்தன்று விழாக்கொள்கின்றனர். ஆனால் தமிழகத்தில் கண்ணகி அல்லது ஸ்ரீ குறும்பா பெயரில் கோவில்கள் இல்லை. இக்கருத்தினை டாக்டர். ப. அருணாசலமும் ஒப்புக்கொள்கிறார் (சிலப்பதிகாரம் வரலாறா? - பக். 27, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை- 5).

உரைபெறு கட்டுரையில் பொற்கொல்லர் ஆயிரவரை கண்ணகிக்கு ஆண்டுதோறும் காவு கொடுப்பதாகவுள்ள செய்தியைப் படித்துப் பொற்கொல்லர் முதலில் அச்சம் அடைந்தாலும், புகழேந்தியின் கோவலன் கதையில் திருவொற்றியூருக்கு மலையாளத் தெல்லையிலிருந்து சென்ற கண்ணகி அங்குப் பார்வதியால் கிணற்றிலடைக்கப்பட்டு விட்டாள்

என்பதனால், மனந்தேறி இன்றும் பார்வ்தியின் அவதாரமான காஞ்சி காமாட்சியம்மனை வழிபட்டு வருகின்றார்கள்,

ஆயின் மலபார் கம்மாளர்களுக்கு இக்கதை தெரிய நியாயமில்லை என்பதால் அவர்கள் ஒவ்வோர் ஊரிலும் 'குறும்பா' என்ற கண்ணகிக்குக் கோவில் கட்டி ஆண்டுதோறும் மார்கழியில் ''ஆவியர்பாட்டு'' என்று திருவிழாவை நடத்துகின்றனர். அதுபோது அவளுக்கு மிருகங்களை உயிர்ப்பலி தருகிறார்கள். கண்ணகியின் உருவத்தை வைத்து வழிபடாமல் தொல்காப்பியம் கூறும் 'நடுகல்லை' கைப்பத்தி உருவில் வழிபடுகிறார்கள். சிலம்பிலும் நடுகற்காதை என்றுதானேயுள்ளது? காலஞ்சென்ற பிரதமர் இந்திரா சாந்தி அவர்கள் பாலக்காட்டுக்கு அருகாமையிலுள்ள ஏமூரில் வீற்றிருக்கும் கைப்பத்தி உருவத்திலுள்ள பகவதியை வழிபட்டார்கள் என்பதை இன்றும் அங்குள்ள மக்கள் நினைவு கூர்கிறார்கள்.

16, 17 நூற்றாண்டில் எழுந்த சிலப்பதிகாரக்கதைகளில் சிலவற்றில் கோவலனையும் கண்ணகியையும் சிவனின் மகனாகவும், மகளாகவும் சித்திரித்திருக்கிறார்கள். அதனால் அவர்களுக்கிடையே திருமணம் நடைபெற்ற போதிலும் அவர்கள் கணவன் மனைவியாக சேர்ந்து வாழவில்லையாம்.

இந்தக் கதை மலையாள மொழியில் நாட்டுப்புறப் பாடலாக ஆனபோது பிறைச்சூடனான சிவன்மகள் என்ற பொருளில் ''சந்திரகலா தாரிஸுதா'' என்று கண்ணகி அழைக்கப்பட்டாள். இக்கதை கோவாவில் வாழ்ந்திருந்த திரு. பிரேரே (Frère) என்பாருக்குக் கோழிக்கோட்டைச் சேர்ந்த அவரது பணிப்பெண் சொன்னதனால் அவர் பண்டைய தக்கண நாட்கள் (OLD DECCAN DAYS) என்ற பெயரில் 1868இல் நூலெழுதியபோது அதில் கண்ணகி கதையினை ''சந்திரா பழிதீர்த்த கதை'' (Chandra's Vengence) என்ற பெயரில்தான் எழுதினார். இந்நூலில் நாட்டியக் காரி (மாதவி) மௌலி என்றும் அழைக்கப்படுகின்றாள். மலையாளத்தில் எழுதப்பட்ட ''சிலம்பு வாணிபம்'' என்ற நூலில் வரும் கதைதான் திரு. பிரேரேக்குக் கிடைத்திருக்கிறது. அதில் கோவலுனும் கண்ணகியும் சிவனின் மக்கள் எனக் கூறப்படுவதால் கண்ணகிக்கு (சந்திரா) க்கணவன் சுகம் கிடைக்கவில்லை. இதன் அடிப்படையில்தான் பக்தர்கள் விழாவின்போது பாலுணர்வு மிக்க பாடல்களைப் பாடினார்கள். இது இன்று அரசாங்கம் சட்டத்தின் மூலம் தடை செய்துள்ளது.

இவ்வாறாக, கி.பி. 5 ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 6 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலுமாக நிகழ்ந்த பேகன் - கண்ணகி துயரக் கதையினை, கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மருதனிள நாகனார் திருமாவுண்ணி கதையாக எடுத்துக்கூற, கி.பி. 10 - 11 நூற்றாண்டுகளில் வாழ்ந்த - இளங்கோவடிகள் என்று தனக்குத்தானே பெயர்வைத்துக் கொண்ட குஞ்ஞிக் குட்டவர்மனாயின வீரகுறும்பொறையார் அடிகள், சிலப்பதிகார

காவியமாக நமக்குத்தர, பிற்காலத்தில் தமிழ் - மலையாளப் புலவர்கள் கண்ணகிக் கதையைக் கூட்டியும் குறைத்தும் சிதைத்தும் நமக்குத் தந்தார்கள்.

இடைச்சாதியை (குறும்பர்)ச் சேர்ந்தவள் என்பதனால் பாமரமக்களே அவளைத் தெய்வமாக ஏற்றுக் கொண்டனர். அதனால் அவள் பெயரிலெழுந்த கோவில்களும் சிறியவையே. அவள் பிறந்த வைய நாட்டிலுள்ள பந்தலாயனிக் கொல்லத்துள்ள பிடாரியார் கோவில் என்ற பெயரிலுள்ள கோவிலே மிகப் பெரிது.

## கண்ணகிக் கோயில் அல்ல !

பரவலாக பாமரமக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கொடுங்கோளுர் காளீசுவரியினுடைய கோவில் கண்ணகியினுடையதல்ல; மேற்குத் தொடர்ச்சி மலையில் குமுளி (குமுழி)க் கடுத்துள்ள மங்கலா தேவிக் கோட்டம் கண்ணகியினுடையதல்ல. அது பௌத்தப் பெண் தெய்வம் பர்ண சபரிதாராவினுடையது.

கோட்டவளாகத்திலுள்ள நான்கு கோயில்கள் மங்கலாதேவியம்மன் என்கிற பூர்ணா (சாத்தனின் இருமனைவியரில் மூத்தவள்) புஷ்கலையென்கிற நடைக்கல் பகவதி (இரண்டாவது மனைவி) பெரியாற்றுச்சாத்தன் என்கிற அவலோ கிதேசுவரன் பூரணையாற்றுச்சாத்தன் என்கிற மங்கலாதேவியின் கணவன் என்பவருடையதாகும்.

அது கண்ணகிக் கோட்டம் என்றால் மற்றமூன்று கோட்டங்களின் கடவுளார் யார்? யார்?

## குறிப்புக்கள்

1. பேகன் எனும் பெயர் இன்று கேரளத்தில் பின் தங்கிய இனத்தாரிடை ஆண்களுக்கு இட்டு வழங்கப்படுகிறது. ஆனால் பேகன் எனும் பெயர் சிறிது மாற்றம் பெற்று பேங்ஙன் என வழங்குகிறது. தமிழ் மன்றம், குன்றம், சென்று என்பவை மலையாளத்தில் மந்நம், குந்நம், செந்நு என்று ஆகும். பேகன் இன்றும் வழக்கிலுள்ள பெயராகும். 1997 சனவரி 28 ஆம்தேதி மாத்ருபூமி நாளிதழில் ''குன்னத்துகாடு மணந்தறை பேங்ஙன் மகன் சாத்தன் (68) காலமானார். இதனால் பேங்ஙன் கி.பி. 1904இல் பிறந்திருக்கலாம். இதே போன்று குறும்பா என்ற பெயரும். எ - டு: கண்டாணச்சேரி: வட்டம் பறம்பில் காலஞ்சென்ற கோப்புவின் மனைவி குறும்பா காலமானார்: 84வயது என்பதால் பிறப்பு 1916ல் (மாத்ரு பூமி நாளிதழ் 1 - 9 - 2000.

2. The Ancient Tamil kings emerged vietorious by destroying the Autonomous of the trditional trilal and regional leaders. During this period, Aryan people were migrating to Tamil region with their 'Yajnas' and vedie seriptures. They became elose assoeiates of the kings and the regional leaders - The Rise of a short Tamil Mahabharata and its influece in a folk version. D. Seemi Sami, P. 246 Indian institute of Advanced study, simla and Anthropological survey of India, New - Delhi 1993.

3. கண்ணகியின் கணவன் பேகன் வையாவிக் கோமான் பெரும் பேகன், பெரும் கல்நாடன் பேகன், மயிலுக்குப் போர்வை ஈந்த பேகன் என்ற பெயர்களால் அறியப்படுபவன். இவன் ஆவியர் பெருமகன், ஆவியர்பெருமகன் என்பதால் இவனைப்பற்றிய கதைப்பாடல் 'ஆவியப்பாட்டு' எனப்பட்டது. தோற்றிஎடுத்தான் என்று இப்பகுதியில் சொன்னால் ஒருவனை மீண்டும் பிழைக்கச் செய்தான் என்று பொருள்படும். இங்கு வழங்கப்படும் கதையில் பொன்மகள் தன் கணவன் பொன்மகனைத் தன் கற்பின் ஆற்றலால் மீண்டும் உயிர் பெறச் செய்கிறாள். அதனால் தோற்றம் பாட்டு எனப் பெயர் பெற்றது. சிலம்பிலும் இறந்த கோவலன் எழுந்து கண்ணகியிடம் "இருந்தைக்க" என்கிறான்.

4. கண்ணகி கோயில்கள் இருக்கும் இடங்கள் முல்லை என அழைக்கப்படுகிறது. இவள் முல்லை சான்ற கற்பின் கிழத்தி என்பதனாலும் தன் கணவன் பேகன், (கோவலன்) எப்படியும் ஒரு நாள் தன்னைத்தேடி வருவான் என்ற எதிர்பார்ப்பில் ஆற்றியிருந்தாள் என்பதாலும் அவள் கோயில் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

5. வெற்றிவேற் செழியன், பாண்டியன் தவறு செய்ய காரணமாயிருந்தவன் பொற்கொல்லன் என்பதால் ஆண்டுதோறும் அவர்களில் ஆயிரவரைப் கண்ணகிக்குப் பலிகொடுத்தான். தம்மினத்தவர் சிறுகச்சிறுக அழிந்து போவதைக் கண்ணுற்ற புலவரான பொற்கொல்லரொருவர் கண்ணகியம்மனைப் பாடிப்பரவி இரந்து கேட்க அவளும் மனமிரங்கி இனிமேல் தனக்குப் பலியாக எருமைக் கடாவைத் தந்தால் போதும் என்றாளாம்.

6. மங்கலாதேவி பற்றிய கல்வெட்டு மதுரை கம்பம் - கூடலூர் அழகிய பெருமாள் கோயிலில் உள்ளது. பாண்டியன் எம்மண்டலமும் கொண்ட குலசேகரதேவரின் (1268 - 1311) 29 ஆம் ஆட்சியாண்டில் அவர் தம்பி திருநீல கண்டன் ராசாக்கள் நாயனான தொண்டைமானேன் வெளியிட்டது. இதில் மங்கலாதேவியின் பெயர் "பூரணகிரி ஆளுடைய நாச்சியார்" என்றுள்ளது.

பூர்ணா நாச்சியாருக்கு கோட்டயம் மாவட்டம் பூஞ்ஞாரில் கோவில் உண்டு. பூர்ணாநாச்சியார் மருவி 'பூஞ்ஞார்' ஆயிற்று. பூஞ்ஞார், பந்தளம் அரசர்களோடு தொடர்புடையவர் சபரிமலை ஐயப்பன். பூர்ணா என்பதன் தமிழாக்கமே 'வட்டப்பிறை' (முழுமதி). அது வட்டப்பாறையாயிற்று! வட்டப்பாறை மலை (பூரணகிரி), மகா ராஜிகமலை (பௌத்தர்களின் நான்கு மகாரஜிக உலகத்தில் ஒன்று) இவை பௌத்தம் பற்றியவை. இக்கல்டெட்டின் எண் Archaelogical Report No. 284061966. அடுத்த கல்வெட்டு. பாண்டியனின் மகளை மணம் செய்த வேணாட்டு அரசரின் கல்வெட்டு கி.பி. 1308 ஆம் ஆண்டிற்குரியது.

நயினார் மாறவர்மன் குலசேகரப் பெருமாள் என்று மாமனாரின் பட்டப்பெயரையும் சேர்த்துக் கூறுகிறார். இக்கல்வெட்டில் மங்கலா தேவியம்மன், கூடலூரிலுள்ள அழகிய பெருமாள், வன்மீக நாதர், பெரியாற்றுச்சாத்தன், பூரணையாற்றுச்சாத்தன், நடைக்கல் பகவதி ஆகியோருக்கு நிவந்தங்கள் செய்வதாகக் கூறப்பட்டுள்ளது.

வன்மீக நாதரும் அழகிய பெருமாளும் கூடலூரில் மற்ற நால்வரும் மலைமேல் மங்களாதேவிக் கோட்டத்திலும் உள்ளனர் இதில் பூரணையாற்றுச் சாத்தன் சுருளிமலைக் குகைக்கோயிலிலிருந்த, தாலமியாலும் யுஹவான் சாங்காலும் பொதாலகா என்றும் பொதியில் என்றும் கூறப்பட்ட அவலோகிதேசுவரன் எனும் ஆதிபுத்தர் மலைவாசிகளான உள்ளவர்களால் வழிபடப்பட்டவர்.

சுருளிமலையில் முருகன் பிரதிட்டை வந்தபோது ஆதிபுத்தர் மங்கல மடந்தைக் கோட்டத்திற்கு இடம் பெயர்க்கப்பட்டிருக்க வேண்டும். இச்செயல் கி.பி. 7, 8, 9 நூற்றாண்டுகளில் நடைபெற்றிருக்கலாம். கோட்டத்திலுள்ள நான்கு கோயில்களும் சோழர் பாணியில் கட்டப்பட்டவை. சிலப்பதிகாரம்,இயற்றப்படுவதற்கு முன்னரே மங்கலாதேவிக் கோட்டம் இருந்திருக்கிறது என்பதற்கு அந்நூலே சான்று பகரும், ஆகவே மங்கலாதேவிக் கோட்டம் எவ்வாறு கண்ணகியினுடையது ஆகும்? கல்வெட்டு எண்: Madras Govt. oriental series A. R. No. 420 of 1907; South Indian Temple Vol. III. part I. P. 1184 (Epi. Report No. 420 of 1907)

# முடிவுரை

இதுகாறும் கூறியவற்றால் சிலப்பதிகாரம் எழுந்தகாலம் பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது பெறப்படும். இளங்கோ தம் காப்பியத்தில் செங்குட்டுவனாக உலவவிட்ட அரசன் 'குஞ்ஞி விக்கிரமன்' என்ற இயற் பெயரினை யுடைவனாய், ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக் கொண்டபோது இராசசிங்கன் (இராஜஸிம்ஹன் என்னும் அபிடேக) என்னும் நாமத்தினைப் பெற்று, கி.பி. 1022 முதல் 1043 வரை சேரநாட்டையாண்ட இராஜசிங்கப் பெருமாள் அரசனேயாவான்.

அதைப்போலச் சிலப்பதிகாரத்தில் 'அடிகளென்றும்' . ''இளங்கோ அடிகளென்றும்'' கூறப்படுகின்றவர், உண்மை வாழ்வில் இராசசிங்கனின் தமையனாகப் பிறந்து, குஞ்ஞிக் குட்டவர்மன் என்னும் இயற்பெயரினையும், வீரக்குறும்பொறை அடிகள் என்ற துறவுப்பட்டத்தையும் பெற்றுக் கி.பி. 1022 வரையிலும் இளவரசராகக் குறும்பொறை நாட்டினை ஆண்டு வந்த குஞ்ஞிக் குட்டவர்மனாயின அடிகள் வீரகுறும் பொறையர் என்பவர் ஆவர்.

இராசசிங்கப் பெருமாள் கி.பி. 1033 ஆம் ஆண்டையடுத்து சாத்தன் வணிகன், இரவிச்சாத்தன் என்ற இருவருக்குச் சில உரிமைகளையும் பதவிகளையும் அளித்ததாக இராசசிம்மனின் தாழைக்காட்டுப் பள்ளியிலுள்ள ஒரு கல்வெட்டுச் சாசனம் சான்று பகர்கின்றது. இவ்விருவரில் சாத்தன் வடு(ணி)கன் மதுரைக் கூலவாணிகன் சாத்தனாரும் (மணிமேலையாசிரியர்) இரவிச்சாத்தன் மணிமேகலைப் பதிகம் எழுதிய தண்டமிழ் ஆசான் சாத்தனும் ஆவர். இவரை இளங்கோவடிகள் தண்டமிழாசான் சாத்தன் என்றும் (சிலம்பு : 21 - 99) சிலப்பதிகாரப் பதிகத்தை எழுதிய மதுரைக்கூலவாணிகன் சாத்தனார், ''தண்டமிழ்ச் சாத்தன் (பதிகம் வரி 10) என்றும் குறிப்பிடுவர்.

இத்தண்டமிழ்ச் சாத்தனாகிய இரவிச்சாத்தனே 'மணிமேகலைத் துறவுக்குப் பதிகம் எழுதியிருக்கின்றார் என்பது அப்பதிகத்தின் இறுதிவரியான 'வளங்கெழு கூலவாணிகன் சாத்தன், மாவண் தமிழ்த்திறம் மணிமேகலைத்துறவு, ஆறைம்பாட்டினுள் அறிய வைத்தனன் என்'' என்னும் பகுதியிலுள்ள இறுதி அசையான 'என்' என்பதால் ஊகிக்கக் கிடக்கின்றது.

மணிமேகலைக் காப்பியத்தில் அந்நூல் எழுதப்பட்ட காலத்தைத் தெளிவாக அறிவிக்கும் அகச்சான்று ஒன்றுண்டு. பன்னிரண்டாம் காதையான அறவணர் தொழுத காதையில் வரும் 'ஈரெண்ணூற்றோடீரெட்டாண்டில் பேரறிவாளன் தோன்று மதன்பிற்பாடு (அடி : 77 - 78) என்ற அடிகள்தாம் அச்சான்று.

புத்தர்பிரான் இந்நிலவுலகில் ஆயிரத்து அறுநூற்றுப் பதினாறு ஆண்டுகட்குப் பின்னர் மீண்டும் பிறக்கவிருக்கிறார் என்பது அவ்வரிகளின் கருத்து. புத்தர்பிரான் முன்னர் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் பிறந்து இவ்வுலகத்தில் எண்பது ஆண்டுகள் உயிர் வாழ்ந்து மகாபரி நிர்வாணம் அடைந்தார் என்பது வரலாறு கூறும் உண்மை. உண்மை இதுவாக இருக்க, அப்புத்தர்பிரான் மீண்டும் பிறப்பார் - அதுவும் மிகச் சரியாக ஆயிரத்து அறுநூற்றுப்பதினாறு ஆண்டுகள் கழித்துப்பிறப்பார் - என்றால், அதில் ஏதோ நுட்பம் அடங்கி இருக்க வேண்டும் என்பது வெள்ளிடை. 'பிறப்பார்' என்று எதிர்காலத்தில் சொன்னதைப் 'பிறந்தார்' என இறந்த காலமாகக் கொண்டால்[1] (ஏன் அவ்வாறு இருக்கக் கூடாது?) - அந்த நுட்பம் இன்னதெனப் புரிந்துவிடும். சாத்தனார் தாம் இன்ன காலத்தில் வாழ்ந்தார் என்றோ இன்ன ஆண்டில் மணிமேகலைக் காப்பியத்தை இயற்றினார் என்றோ நேரடியாகக் கூறிவிடவில்லைதான்.

ஆயின் புத்தர் பிறந்து ஆயிரத்து அறுநூற்றுப் பதினாறு ஆண்டுகள் கழித்துத்தான் அவர் மணிமேகலைக் காப்பியத்தை எழுதினதாக மறைமுகமாகத் குறிக்கின்றார். அது எந்த ஆண்டு என்று நாம் அறியோம். ஆயின் புத்தர் பிறந்த ஆண்டினை அறிவோம். கி.மு. ஆறாம் நூற்றாண்டில் அவர் பிறந்தார். அந்த ஆண்டு, கி.மு. 517 ஆகும். வடநாட்டு மௌரியப் பேரரசன் அசோகன், புத்தர்பிரான் மகாபரி நிர்வாணம் அடைந்து (இறந்து) இருநூற்றுப் பதினெட்டு ஆண்டுகள் கழித்து அரசுகட்டில் ஏறியதாக இலங்கை வரலாற்று நூல்கள் கூறுகின்றன. அசோகன் அரசு கட்டில் ஏறிய ஆண்டு கி.பி. 273 என்று வரையறுக்கப்பட்டிருக்கின்றது. எனவே புத்தரின் பரிநிர்வாணம் கி.மு. 419 ஆம் ஆண்டு எனவரும். அவர் எண்பது ஆண்டுகள் இப்பூமியில் வாழ்ந்தார் என்பதால் புத்தரின் பிறப்பு கி.மு. 571 ஆம் ஆண்டில் என்பது தெளிவாகும்.

எனவே புத்தர் பிறந்த கி.மு. 571 - தொட்டு 1616 ஆண்டுகள் கடந்து சாத்தனார் வாழ்ந்தார் என்பது தெரியவரும். எனவே மணிமேகலைக்காப்பியம் எழுதிமுடித்த ஆண்டு கி.பி. 1045 ஆண்டு எனத் தெளிவாகும். இவ்வாறு சாத்தனார் தம் காப்பியத்தில் அது எழுதப்பட்ட காலத்தை மிகத்தெளிவாக அறிவிக்கும் அகச்சான்றொன்றினை மிக நுட்பமாக பயன்படுத்தி இருப்பது மகிழ்தற்குரியது.

அடுத்து, சிலப்பதிகாரத்திலும் அது எழுந்தகாலத்தை ஓரளவு வரையறுத்துக் காட்டக்கூடிய முக்கியமான அகச்சான்றொன்றுள்ளது. கட்டுரைக் காதையில், மதுராபதித்தெய்வம் கூறுவதாகவுள்ள, ஆடித்திங்கட் பேரிருட்பக்கத்து, அழல்சேர் குட்டத் தட்டமிஞான்று, வெள்ளிவாரத் தொள்ளெரியுண்ண, உரைசால் மதுரையோடரைசு கேடுறுமெனும், உரையுமுண்டே நிரைதொடியோயே (அடிகள் (137 - 7) என்ற பகுதியே அது. இச்சோதிடக் குறிப்புக்கள் கி.பி. 756 சூலைத்திங்கள் 23 ஆம் நாளுக்கு மிகவும் பொருந்தும் என்றார். திரு. எல். டி. சாமிக்கண்ணுபிள்ளையவர்கள். ஆயின்

இவ்வாண்டு எவ்வகையினும் வரலாற்றோடு பொருந்துவதாயில்லை.

அவ்வாண்டில் பாண்டியநாட்டையாண்ட மன்னன் கோச்சடையன் இரணதீரனின் மகனான அரிகேசரி பராங்குச மாறவர்மன் (கி.பி. 710 - 765). இதே காலத்தில் சேரநாட்டை ஆண்ட சேரமன்னன் இன்னான் என அறியக்கூடவில்லை. சோழமன்னர்கள் இருந்த இடம் தெரியாத காலம் அது. மாறாக, பல்லவன்தான் (இரண்யவர்மனின் மகனான இரண்டாம் நந்திவர்மன் கி.பி. 705 - 775) தொண்டை மண்டலத்தைக் காஞ்சியிலிருந்து ஆண்டு வந்தான்.

எனவே கடல் பிறக்கோட்டிய குட்டுவனையும் கரிகாற்பெருவளத்தானையும், எட்டாம் நூற்றாண்டிற்குக் கொண்டு வரமுடியாது என்பது ஒருபுறமிருக்க, சோழ மன்னர்களேயில்லாத எட்டாம் நூற்றாண்டு சிலப்பதிகாரகாலம் என்று கொள்வது அறிவுக்குப் பொருத்தமாக இல்லை. ஆகவே கி.பி. 756 ஆம் ஆண்டு சிலப்பதிகாரச் சோதிடக் குறிப்புக்களுக்குப் பொருந்துமாயினும் வரலாற்று முக்கியத்துவம் உள்ள நிகழ்ச்சிகளொன்றும் நடைபெற்றதாக வரலாறு கூறாத காரணத்தால், அவ்வாண்டை ஒதுக்கிவிட்டு, வரலாற்று முக்கியத்துவம் நிறைந்த நிகழ்ச்சிகள் நடைபெற்ற ஏதேனும் ஆண்டு இளங்கோவின் சோதிடக் குறிப்புக்குப் பொருந்தி வருகின்றதா என்று பார்க்க வேண்டும். ஏனெனின் எவ்வித வரலாற்று முக்கியத்துவமும் இன்றி இளங்கோவடிகள் அத்தகையதொரு காலக்குறிப்பைத் தம் காப்பியத்தில் எழுதிவைத்திருக்க மாட்டார்.

அவ்வாறு நோக்குங்காலை கி.பி.999ஆம் ஆண்டு சூலை மாதம் 24-ம் நாள் அக்குறிப்புக்களுக்குப் பொருந்தி வருகின்றது. அவ்வாண்டில்தான் மகோதையபுரம் எரியுண்டது. கி.பி. 999ஆம் ஆண்டுக்குச் சமமான கொல்லம் ஆண்டு K. E. 174 ஆம் ஆண்டு ஆடி மாதம் 8 ஆம் நாள் வெள்ளிக்கிழமைதான் முதலாம் இராசராச சோழனின் படைகள் மகோதயபுரத்தை எரியுண்ணச் செய்தன. அன்று ஆடிமாதம் வெள்ளிக்கிழமை, பரணி - கார்த்திகை நாள், அபரபக்கம் (இருட்பக்கம்) அட்டமிதிதி,மகோதயபுரம் எரிந்தது என்ற வரலாற்று உண்மையைத்தான் மதுரை எரிந்தது என்ற கற்பனை நிகழ்ச்சியாக இளங்கோவடிகள் மாற்றிக் கூறினார்.

மகோதய புரத்தைப் படைவீரர்கள் எரியுண்ணச் செய்தது நடந்தது; நடக்கக்கூடியது. ஆயின் மதுரையைக் கண்ணகி தன்மார்பைப் பிடுங்கி எறிந்து எரியுண்ணச் செய்தது நடந்ததன்று; நடக்கக் கூடியதும் அன்று. மகோதய புரி எரிந்தது இளங்கோவுக்கு நினைவு தெரிந்த நாட்களில், அல்லது அதற்கும் முன்னால் ஆகலாம். அதனாற்றான், அவர் வாழ்க்கையில் நடந்த அப்பயங்கரமான நிகழ்ச்சியை அவரால் மறக்கமுடியவில்லை. மறக்க முடியாத ஒன்றை, மறக்கக் கூடாத ஒன்றை வருங்காலம் என்றென்றைக்கும் மறக்காதிருக்கும்படி தம் காப்பியத்தில் பெய்தும் வைத்தார். தலைநகரம்

எரிந்தபோது இளங்கோவடிகளுக்கு வயது ஆறு அல்லது ஏழு ஆண்டுகள் இருக்கலாம்.

துறவு கி.பி. 1022 இல் பூண்டபோது 28 அல்லது 29 வயதிருக்கலாம். தலைநகரம் எரிந்தபோது அரசர் பாற்கரரவி I தன் குடும்பத்தோடு முயிரிக் கோட்டிலுள்ள (கடற்கரையிலுள்ள) அரண்மனைக்குச் சென்று வாழலாயினர். அங்குதான் குஞ்ஞிவிக்ரமன் (இளங்கோவின் சேரன்செங்குட்டுவன்) பிறந்திருக்கவேண்டும். அதனால்தான் மகன் பிறந்த மகிழ்ச்சியினால் தலைநகரம் எரிந்து சாம்பலாகிப்போன துன்ப நிகழ்ச்சியைக்கூட மறந்து விட்டு, ஜோஸப் இறப்பான் (Joseph Rabban) என்ற வணிகப் பெருமகனுக்கு சில உரிமைகளையும் பட்டங்களையும் அரசன் 'பிரசாதித்தருளினான்' என்று கொச்சிச் செப்பேட்டுச் சாசனம் (E. I. iii pp 68 - 9) கூறுகின்றது. இச்சாசனம் கி.பி. 1000 -வது ஆண்டில் எழுந்தது என்பதனால் குஞ்ஞிவிக்கிரமனாகிய இராஜசிம்மன் (செங்குட்டுவன்) கி.பி. 1000ஆவது ஆண்டில் பிறந்திருக்கவேண்டும் என்றும் அவன் தமையனான குஞ்ஞிக்குட்டவர்மனாயின வீரகுறும்புறையடிகளார் என்ற இளங்கோவடிகள் அரசைத் துறந்ததனால், அவன் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றது கி.பி. 1022 என்றும் உள்ள கருத்து வலியுறுகின்றது.

அடுத்து முதலாம் இராசேந்திர சோழன் வடநாட்டின் மீது படையெடுத்துச் சென்று எதிர்த்த வடவாரிய மன்னர்களை வென்று சிறைப்படுத்தி, குடங்களில் நிரப்பிய கங்கை நீரினை அவர்களைக் கொண்டே சுமக்கச் செய்து கங்கை கொண்ட சோழபுரத்தினைத் தூய்மைப்படுத்தின வரலாற்று நிகழ்ச்சியினையே தம் காப்பியத்தில் செங்குட்டுவன் வடநாட்டுப் படையெடுப்பு நடத்தியதாகக் கற்பனையாக எழுதினார் இளங்கோவடிகள். இக்கங்கைப்படையெடுப்பு நிகழ்ச்சிகள் முதலாம் இராசேந்திரன் பதினொன்றாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுக்களில்தான் முதன்முதலில் காணப்படுகின்றன. அதனால் அப்படையெடுப்பு கி.பி. 1032ஆம் ஆண்டுக்கு முன்னர் நடைபெற்றிருக்கவேண்டும்.

இளங்கோவடிகள் இப்படையெடுப்பு நிகழ்ச்சிகளைச் சிலப்பதிகாரம் கால்கோள்காதையில் (அடிகள் 188 - 246; 225 - 30) கூறுகின்றகாரணத்தால், இவர் இராசேந்திரனின் வடநாட்டுப் படையெடுப்பு முடிந்த பின்னர்தான் சிலப்பதிகாரத்தை இயற்றியிருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. எனவே சிலப்பதிகாரம் எழுதப்பட்டது கி.பி. 1023 ஆம் ஆண்டிற்கும் 1045 ஆம் ஆண்டிற்கும் இடையே எனல் தகும். அதனால் சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டில் எழுந்த காப்பியம் என்பதாகிறது.

# 14. சில கல்வெட்டுகள்

## குணவாயிற்கோட்டத்தின் காலம்

சிலப்பதிகார மணிமேகலைக்காப்பியங்களின் காலத்தை உறுதி செய்யத் துணைநிற்கும் நான்கு கல்வெட்டுகள் திருச்சிவபேரூர் (திருச்சூர்) பாலக்காடு, கோழிக்கோடு, வயநாடு ஆகிய மாவட்டங்களிலிருந்து கண்டெடுத்துள்ளனர் வரலாற்றுத் துறையினர். இந்நான்கு கல்வெட்டுகளில் சிலப்பதிகாரத்தில் வரும் குணவாயிற் கோட்டம் எப்பொழுது நிறுவப்பட்டது என்பதனைச் சூசகமாகத் தெரிவிக்கும் கல்வெட்டுகள் மூன்று; இன்னொன்று மதுரைக் கூலவாணிகன் சாத்தனுக்கும் அவர் நண்பரான மதுரைத் தண்டமிழ் ஆசான் சாத்தனுக்கும் (இவர்தான் சிலம்பு - மேகலைகளுக்குப் பதிகம் தந்தவர்) வஞ்சியருகே புத்தபீடிகை கட்டுவதற்குச் சேரமன்னன் செங்குட்டுவன் என்று காப்பியத்தில் பெயர்பூண்ட இராசசிங்கப்பெருமாள் நிலமும் செல்வமும் கொடுத்ததைக் கூறும் கல்வெட்டாகும்.

வையநாடு எனும் வயநாடு மாவட்டத்தில் பூதாடி (பூதவீடு) தாழேக்காவு எனும் சமண பஸ்தியிலிருந்து கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டில்தான் திருக்குணவாயிற் கோட்டம் எப்பொழுது எழுந்தது எனும் செய்தி மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது. அதாவது இக்கல்வெட்டு வெட்டப்பட்ட காலத்திற்கு நூற்றைம்பத்தேழு ஆண்டுகளுக்குமுன் திருக்குணவாய் என்ற குணவாயிற் கோட்டம் கட்டப்பட்டது என்பதையே இக்கல்வெட்டு எடுத்துக் கூறுகின்றது.

இக்கல்வெட்டின் எழுத்தமைதிகொண்டு இது கி.பி. ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்று கல்வெட்டாய்வாளர்கள் கருதுவதால் இதில் கூறப்பட்டுள்ள திருக்குணவாய் என்னும் குணவாயிற்கோட்டம் கி.பி. ஏழாவது நூற்றாண்டின் பிறபகுதி அல்லது எட்டாவது நூற்றாண்டின் பிறபகுதியில் எழுந்திருக்கலாம் எனக் கருதவேண்டியுள்ளது.

இக்கல்வெட்டு திருவாங்கூர் கல்வெட்டு வரிசையில் எட்டாவது தொகுதி பக்கம் 39ல் வெளியிடப்பட்டுள்ளது. இனிக்கல்வெட்டுப் பின்வருமாறு:-

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருக்கு
2. ணவா (ய்)த் தேவர்க்குச்

3. செல்லா நின்ற யாண்டு

4. நூற்றைம்பத்தேழு அவ்வாண்டு

5. நக்ரம் செய்து நாற்பத்தெண்ணாயி

6. ரவரும் (பட்டகளிருவரும்)

7. வெச்ச விளக்கினுக்கும்

8. குடம்பாடி இருபது

9. நாலுபொதி நகரப்பொறைப

10. ன்னிரண்டு பொதி சென்

11. றது விளக்கில் திருக்கு

12. ணவா(ய்)ப் பிழைச்சோரிடும் இ

13. ......................................... மது.

பாலக்காடு மாவட்டம் ஆலத்தூர் நகரத்திலிருந்து (2004க்கு) சுமார் அறுபதாண்டுகட்கு முன்னர் ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டும் சமணத் தீர்த்தங்கரர்களின் ஒன்றிரண்டு உருவச்சிலைகளும் கண்டெடுக்கப்பட்டு, திருச்சூர் பொருட்காட்சி சாலையில் அவை வைக்கப்பட்டுள்ளன.

பூதாடித் தாழேக்காவுக் கல்வெட்டினின்றும் வளர்ச்சி பெற்ற நிலை இக்கல்வெட்டு காட்டுவதால் இது கி.பி. பத்து அல்லது அதற்கும் பின்னர் உள்ள நூற்றாண்டில் வெட்டப்பட்டிருக்கலாம். இஃது Ins. No. 238 of 1960; No. 561 of 1908; Anuual Report of Epigraphy for 1960. எனும் எண்ணினையுடையது. இதனை மைசூர் அகழாய்வுத்துறையைச் சேர்ந்த திரு. கே. ஜி. கிருஷ்ணன் என்பார் கேரளப்பல்கலைக்கழகத்தின் வெளியீடான Journal of Kerala Studies, Vol. I. Sl. No. 1. July 1973 இதழில் வெளியிட்டுள்ளார். கல்வெட்டு வருமாறு:-

''ஸ்வஸ்தி நாற்பத்தெண்ணாயிரவரும், முவ்வாயிரவரும் திருக்குணவாய்த் தேவர் அதிகாரரும் பதியும் பாதமூலமும் அத்திக் கோசமும் சிற்றத்தாணியும் நாலஞ்சியர் அடிகள்மாரும் பதியும் பாதமூலமும் கூடியிருந்து அமைத்த சிலாலேகை நாலஞ்சியர் பள்ளி இதும் இதன் வழிப்பள்ளிகள் இடும் பள்ளிப்பாடும் எவ்வகைப் பட்டனவும் உழைக்கலம் எவ்வகைப் பட்டனவும் முன்பும் எவ்வகைப் பட்டனவும் புகவும் ஒற்றியும் பணயம் வைக்கவும் பெறார். பெற்றார் ஆயில் அவர்கள் திருக்குணவாய்த் தேவர் ஆஞ்ஞையும் ராஜாஞ்ஞையும் மறுத்தார் ஆவர். (இ) தின்னு காட்டும் சீவிதமும் பஞ்சபரமேட்டிகளையும் தீங்கிழைத்தாரும் ஆவர். இருடிகளையும் (பெண்டி)ர் களையும் (முதியோ)ர் களையும் பசுக்களையும் கொன்ற பஞ்சமா பாதகமும் ஆவர். அவர்களும் அவர்கள் தந்ததியும் இப்பள்ளிக் குரியாரும்

அ(ல்ல)ர் இப்பள்ளிகளின் பூமிகளும் உழைக்கலம் - உ.... ம்பும்.......மு - ழாக் காராண்மையும் எவ்வகையாலும் கொள்வார்......... (திருக்) குணவாய்த்தேவர் ஆணையும் ராஜாஞ்ஞையும் (மறுத்தாரும்) ஆவர். (இப்) பூமிகளை அமைத்தாரான (அன்றான்) கோ அவர்களுக்கும் எவ்வகைப்பட்டதும் திருக் (குணவாய்த்தே)வர்க் (கே இ)டுக.....(உ)ழைப்பள்ளியார் வைக்கக் கடவர் (நாலஞ்சியர்) இட்ட (தருமமும்) இப்பள்ளிகள் காத்தார் அடி நீ(ள்) முடிமேலன. [...] யோ ஹரேதவஸுந்தாரம் ஷஷ்டிம் வர்ஷாணி ஸஹஸ்ராணி விஷ்டாயௌ - ஜாயதே கிருமிஹி

ஆடகமாடம் எது?

திருச்சூர் மாவட்டத்திலுள்ள கொடுங்கோளூருக்கு (சிலப்பதிகார வஞ்சிக்கு)க் கிழக்கே திருக்குலசேகரபுரம் என்ற ஓர் இடமுள்ளது. அங்கு திருமாலுக்கு ஒரு கோயில் உள்ளது. அது பார்த்த சாரதி (கிருஷ்ணன்) கோயில் எனப்படும். இக்கோயிலைப்பற்றி அறிந்திராத காரணத்தால் சிலப்பதிகாரம் கால்கோள் காதையிலும் வரந்தரு காதையிலும் வருகின்ற 'ஆடக மாடம்' எனும் சொல்லுக்கு உரையெழுதுங்கால் உரையாசிரியர்கள் அது திருவனந்தபுரத்தைக் குறிக்கும் என்றார்கள். ஆனால் இளங்கோ ஆடகமாடம் என்று கூறியது இப்பார்த்தசாரதி கோயிலையேயாகும் என்பது உய்த்துணரக் கிடக்கின்றது.

இங்குள்ள கல்வெட்டில் காணப்படும் செய்தி மணிமேகலையில் காணப்படும் செய்தியோடு ஒத்திருக்கின்றது. மணிமேகலையில் மாதத்தைக் குறிப்பிடும்வேளை ராசியின் பெயரையே பயன்படுத்தியுள்ளார் சாத்தனார் (இருது இளவேனிலில் எழுகதிர் இடபத்து) இடபம் என்பது ராசியின் பெயராகும். இக்கல்வெட்டிலும் 'சிங்கம்' என்ற ராசியின் பெயரே பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வழக்கம் சேர நாட்டில் ஆய் மன்னன் விக்கிரமாதித்த வரகுணணின் காலந்தொட்டு (கி.பி. 9 ஆம் நூற்றாண்டு) தான் வழக்கத்திற்கு வந்தது. (உ -ம்: பாலியம் செப்பேட்டுச் சாசனத்தின் வடமொழிப்பகுதி). இனிக்கல்வெட்டு காண்க. இது Ins. No. 226 of 1895 எனும் எண்ணையுடையது:

"ஸ்வஸ்தி ஸ்ரீ திருக் குலசேகரபுரத்துத் தளிக்குச் செல்லா நின்றயாண்டு நூற்றுத் தொண்ணூற்றைந்து இவ்வாண்டு மகரத்தில வியாழந்நிற்கச் சிங்க ஞாயிற்று உத்தரம் முதலாய்த் தளியும் தளியதிகாரிகளுங் கூடி(யிருந்து) திருக்குல சேகரபுரத்துத் தளியில் பண்டாரங் காவற்கு நின்ற வெண்பல நாட்டுப்பொழியான நச்சனழியகத்துக் கோவிந்நன் தாமோதரன் இடும்பொன் ஐங்கழஞ்சி(னால் இத்திரு குலசேகரபுரத்துத்) தளி முறையால் சிங்ங ஞாயிற்று (அக நாழி) முறையால் ............கூட்டிக்கொடுத்தான் கோவிந்நன் தாமோதரன் இத்தனி முறையால்..........கச்சம் வகுத்து அமைச்சான். இத்தனிப் பழாரர்க்குப் போழனி ரவி(கொடுத்த) இத்தன்மம் தளியாரே கொள்ளக் கடவர். இத்தன்மம் காத்தார் நீள் அடி என் முடி மேலன.

''இக்கல்வெட்டில் பழாரர் என்று சொன்னது திருமாலை (பார்த்தசாரதியை). ஏறத்தாழ இதே காலகட்டத்தில் பெண் தெய்வத்தைக் குறிக்கப் பிழாரியார் அல்லது பிடாரியார் என்றனர். இம்முறையிலேயே பந்தலாயனிக் கொல்லத்தில் (சங்க காலத்துப் பந்தர்) உள்ள பகவதி கோயில் 'பிஷாரிக்காவு' அல்லது 'விஷாரிக்காவு' எனும் பெயரினைப் பெற்றது.

இக்கல்வெட்டில் குறித்துள்ள 'மகரவியாழம்' எனும் குறிப்பு கி.பி. 1069 ஆம் ஆண்டினையே குறிக்கும் என்பதால் இக்கோயில் கட்டப்பட்டது. திருக்குல 400 ஆண்டுகளுக்கு முன்னர் என்பதால் அது சேகரபுரம். கி.பி. 869 இல் என்று வருகிறது.

சிலம்பில் குறிப்பிடும் 'ஆடகமாடம்' இக்கோயிலையே குறித்து நின்றது என்பதால் அக்காப்பியம் கி.பி. 869க்குப் பின்னால்தானே இயற்றியிருக்க முடியும்? இதனாலும் சிலம்பு கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுந்தது எனும் கூற்று உண்மைக்குப் புறம்பானதாகிவிடுகின்றது.

கோழிக் கோட்டிலிருந்து ''தொண்டி''க்கு (கடல் தொண்டி - கடலுண்டிக்குப்) போகும் வழியில் சிறுமண்ணூர் (செறுவண்ணூர்) எனும் திரு முன்னூர்க் கோயில் கல்வெட்டும் திருக்குணவாயிற் கோட்டத்தை மேற்கோள் காட்டுகின்றது. இக்கல்வெட்டு மகோதைய புரத்துச் சேரவரசன் இராமவர்ம குலசேகரப் பெருமாள் அரசருடையது. (கி.பி. 885 - 917); இவர் மகளைத்தான் முதலாம் பராந்தக சோழன் 907 - 55 மணம் செய்துள்ளான்.

இக்கல்வெட்டு இராமவர்மாவின் எட்டாம் ஆட்சியாண்டில் (கி.பி. 893ல்) வெட்டப்பட்டது. அதனால் இது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியைச் சேர்ந்ததாகிறது. இதனை ஆய்ந்து வெளியிட்டவர் திருவாளர். ஹெச். கிருஷ்ண சாஸ்திரி. இதன் வரிசை எண்: AR. No. 218 Of 1895; Archeo logical Survey of India, Vol. XliX; South Indian Vol.Xllv; South Indian Inscriptions Vol. என்பதாகும்.

இக்கல்வெட்டினைத் தந்தவர் தாணுரவிர்மர் குலசேகர அரசரின் (கி.பி. 844 - 885) மருமகனான கோயிலதிகாரிகள் விசயராக தேவர் என்பவர் ஆவார்.

**கல்வெட்டு வருமாறு:-**

''இப்படாரருடைய இடையீடு திருக்குணவாயோடொக்க இலக்கிக்கக் கடவர்'' என்பதாகும்.

குணவாயிற் கோட்டம் என்று சிலப்பதிகாரத்திற் குறிக்கப்படும் திருக்குணவாயிற் கோட்டம் திருக்குணவாய் மதிலகம் என்று கி.பி. 13, 14 நூற்றாண்டுகளிலும் இருந்தது. ஆனால் அது எவ்வாற்றேனும் கி.பி. 700க்கு முன் இருந்திருக்க வியலாது என்பதனைப் பூதாடி (பூதவிடு) தாழேக்காவுக் கல்வெட்டு எடுத்துக் கூறுகின்றது.

மணிமேகலை நூலை யாத்த மதுரைக் கூலவாணிகன் சாத்தனாரைத் தவிர இன்னொரு சாத்தனாரும் இருந்ததாக வைசிய புராணச் செய்யுள் ஒன்று தெரிவிக்கின்றது. ஆகவே சிலப்பதிகாரத்துக்கும் மணிமேகலைக்கும் பதிகங்களை எழுதித் தந்தவர் இச்சாத்தானாரே எனக் கொள்வது பொருந்தும். இவ்விரு சாத்தர்களும் பெளத்த மதத்தைச் சேர்ந்தவர்கள்.

சிலப்பதிகாரம் உறுதியாக கி.பி. 999 -க்கும் பிற்பட்டு எழுந்த நூல் என்பதால் இவ்விரு சாத்தனாருக்கும் புத்தரை வழிபடுவதற்காக, 'பாத பீடிகை' எனும் கோயில் கட்டுவதற்காக அன்னாள் அரசனான இராசசிங்கப் பெருமாள் எனும் அபிஷேக நாமத்தினை உடைய குஞ்ஞி விக்ரமன் எனும் சேரவரசன் இரு ஞால்க்கூடல் எனும் சமணத்தலத்திற்கண்மையில் இடமும் பொருளும் கொடுத்த செய்தி ஒரு கல்வெட்டால் தெரியவருகின்றது.

பெளத்தமும் சமணமும் அழிந்து போக அவர்களது பள்ளிகளையும் சைத்தியங்களை (பஸ்திகளை)யும் கிறித்துவர்களும் இஸ்லாமியர்களும் எடுத்துக் கொண்டனர். இவ்வாறு இராசசிங்கப் பெருமாள் வெட்டிய கல்வெட்டு இன்று திருச்சூர் மாவட்டம் ஆவட்டிப் புத்தூர் எனும் அவிட்டத்தூரையடுத்துள்ள தாழைக்காட்டுக் கிறித்துவப் பள்ளியில் வைக்கப்பட்டுள்ளது.

கல்வெட்டு தந்த அரசன் காலம் கி.பி 1028 - 1043 என்பதால் கல்வெட்டின் காலமும் கி.பி. 1043 க்கு முன்னர் ஆகலாம். இக்கல்வெட்டு திருவாங்கூர் சாசனவரிசை தொகுதி VIII பக்கம் 39ல் கல்வெட்டு எண் 10 Of 1906 ஆகச் சேர்க்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

''ஸ்வஸ்தி ஸ்ரீ இராய சிங்கப்பெருமானடிகளுக்கு (ச்செல்லா நின்ற யாண்டு ...........இவ்வாண்டு) தாழைக்காட்டுக் கமைக்கப்பட்ட வாணிகர்க்கு ஊரார் அவிரோதத்தால் பீடிகை கட்டுவான் அமைதிட்ட சிறுபள்ளி அதிரில் மேற்குப் பேராளன் வடக்குக் கரைப் பள்ளியின் கிழக்குக் கீழ்த்திருக்கோயிற் தேவ பூமிக்குத் தெற்கு இதினகத்து ஊராளர் தடுக்கவும்..................மாகவும் பீடிகைக்கமைந்த ............... தந்தையைக் கொன்றுத் தாயைக் களத்திரம் வைத்தாராகவும்................ கோல் கொட்டிக் கொடுப்பிது................பாட்டமாள்வார் எடுத்துக் கொள்விது. அந்நால்வருஞ் சொல்(கின்ற) இறையும் திறையும் கொள்விது. இவ்வ(விரோதத்தால்) மணிக்கிராமத்தார் (ஆன) சாத்தன் வணிகன் இரவிச் சாத்தன் இவர்களிருவர்க்கும் இரண்டும் முறிப் பீடிகையாலுந் நேரிலே...............''
(மற்ற பகுதிகள் கெட்டுப் போயிருக்கின்றன.)

## புத்தர் பிறப்பார் எனும் காலம்

மணிமேகலையில் புத்தர் 1616 ஆண்டுகளுக்குப் பிறகு பிறக்கப் போகின்றார் என்ற குறிப்பு, மறைமுகமாகச் சாத்தனார் கி.பி. 1045 அல்லது 1046 -வது ஆண்டில் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்பதைக் காட்டுகிறது. அதாவது தான் வாழ்ந்து கொண்டிருக்கிற காலத்துக்கு 1616 ஆண்டுகளுக்கு முன்னால் புத்தர் பெருமான் பிறந்தார் என்பதைத்தான் சாத்தனார் இவ்வாறு திரித்துக் கூறினார்.

புத்தர் பிறந்தது கி.மு. 570ல் ஆகும். அவர் பிறந்து 1616 ஆண்டுகள் கழிந்தது என்றால் அது கி.பி. 1045 - 46 ஆண்டு ஆகும். இதே மணிமேகலையில் அமுதசுரபி தோன்றும் காலமாகக் குறிக்கப்படும் "இருது இளவேனிலில் எரிகதிர் இடபத்து ஒரு பதின் மேலும் ஒரு மூன்றும் சென்ற பின் மீனத்து இடைநிலை மீனத்து அகவையின் போதித்த தலைவனொடு பொருந்தித் தோன்றும் ஆபுத்திரன் கை அமுத சுரபி" எனும் காலக்குறிப்பு கி.பி. 1046 மே திங்கள் 28 ஆம் நாளுக்கே பொருந்தும் என்று என்னால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இதுவும், இராச சிங்கப்பெருமாள் கல்வெட்டில் குறிக்கப்படும் வணிகன் சாத்தன், இரவிச்சாத்தன் எனும் இருவர் மணிமேகலையை இயற்றிய சாத்தனாரும், சிலம்பு - மேகலை ஆகிய இரு நூற்களுக்கும் பதிகங்களை இயற்றிய மதுரைத் தண்டமிழாசான் சாத்தனாரும் ஆவர் என்பதனையே எடுத்துக் கூறுகின்றது. இதனாலும் இருகாப்பியங்களும் கி.பி. 1023க்கும் 1046க்கும் இடைப்பட்ட காலத்தில்தான் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் எனும் உண்மையினைத்தான் எடுத்தோதுகின்றது என்பதனை உணரலாம்.

## இவ்வாராய்ச்சிக்கு உதவிய நூல்கள்


அண்ணங்கராச்சாரியார் : நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்

அருணாசலம் .ப. : சிலப்பதிகார சிந்தனை

அருணாசலம். மு. : தமிழலக்கிய வரலாறு 9-ம் நூற்றாண்டு,பகுதிI

இராகவையங்கார். மு. : ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஆராய்ச்சித் தொகுதி. சேரன் செங்குட்டுவன் சேரவேந்தர் செய்யுட்கோவை, தொகுதி II

இராஜமாணிக்கம். மா. : பல்லவர் வரலாறு

இரகுநாதன் : இளங்கோவடிகள் யார்?

ஒட்டக்கூத்தர் : தக்கயாகப்பரணி மூவருலா

காசிராஜன். இரா. : சிலப்பதிகார ஆய்வடங்கள்

கிருஷ்ணசாமி ஐயங்கார் டாக்டர். எஸ். : சேரன் வஞ்சி

